

பிரபல சமையல்
கலைஞர் திருமதி
பிரமிளா லால்
தமது விசேஷப்
பக்குவ முறை
ஒன்றை உங்களுக்கு
உதவுகிறார்.




# ஜெல்லி க்ரிஸ்டல்ஸ்

# உபயோகித்து ஆரஞ்சு ஜெல்லி டிலைட் செய்து பார்த்திருக்கிறீர்களா?

## உண்ண உண்ண இனிமை—தயாரிக்கவோ எளிது!



செழிப்பான பழச்சுவைதரும் ரெக்ஸ் ஜெல்லியை சிறியோரும் பெரியோரும் ஒருங்கே விரும்புவார்கள். எல்லாசந்தர்ப்பங்களுக்கும் ஏற்றபல்வேறுவகையான புட்டிங்குகளையும் பழத்தின்பண்டங்களையும் தயாரிக்க உதவுகிறது. ரெக்ஸ் ஜெல்லி க்ரிஸ்டல்கள் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டது. ஜெல்லி க்ரிஸ்டல்களுள் மிகவும் சிறந்தது ரெக்ஸ்

தேர்ந்தெடுக்க 6 இன் சுவைகள்.




**பக்குவமுறை:**

1 பாக்கெட் ரெக்ஸ் ஆரஞ்சு ஜெல்லி க்ரிஸ்டல்ஸ்
1 முட்டை
½ கிண்ணம் உரித்துநறுக்கிய ஆரஞ்சு சுளைகள்
125 திரவ கிராம் பாலேடு
மேலே தூவ ஆரஞ்சு சுளை முத்துக்கள்

1. ரெக்ஸ் ஜெல்லி க்ரிஸ்டல்களை 375 திரவ கிராம்சுடு நீரில் உருக வைக்கவும்.
2. முட்டையைக் கடைந்து அதில் ஜெல்லியை ஊற்றவும்.
3. வேகமாகக் கடையவும்.
4. ஆற வைத்து, நறுக்கிய ஆரஞ்சையும், பாலேட்டில் பாதியையும் சேர்க்கவும்.
5. பாத்திரத்திலே ஊற்றி உறைய விடவும்.
6. ஆரஞ்சு சுளை முத்துக்களையும் கடைந்த பாலேட்டையும் மேலே தூவி பரிமாறவும்

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை சீட்டை ஆங்கிலம்/இந்தி வங்காளம் /தமிழ்/தெலுங்கு/மலையாளம்/ குஜராத்தி/ மராத்தி கண்டத்தில் இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர்..................................

முகவரி..................................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாடபி ரோடு பம்பாய்-1. (பி.ஆர்)

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.

**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!**

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாடபி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)



ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்:
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ்-1
மற்றும் அவர்களது கிளைகள்

Sonnet/1227 TM



## கல்கி பொருளடக்கம்

கீலக தை மீ. 20 -- 1969 பிப்ரவரி 2உ



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# இணைப்பு மொழியின் பிறப்பு!








தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 27



# ராணுவ உதவியின் உட்பொருள்

“சோவியத் ருஷியாவுடனும் கம்யூனிஸ்ட் சீனத்துடனும் அமெரிக்கா போட்டி போட்டுக் கொண்டு, இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஆயுத உதவி வழங்க முடிவு செய்யுமானால், இது அமெரிக்காவின் சமாதான நோக்கத்துக்கே ஊறு உண்டாக்கும்” என்று அமெரிக்காவின் முன்னாள் பாதுகாப்புக் காரியதரிசி க்ளார்க் க்ளிஃபோர்ட் தமது வருடாந்தர இறுதி அறிக்கையில் கூறியுள்ளார். ஆயுத உதவி செய்வது தாராள மனப்பாங்குபோலத் தோன்றுகிறது. ஆயினும் வல்லரசுகள் போட்டி போட்டுக் கொண்டு ஆயுத உதவி செய்வது இந்தியா, பாகிஸ்தான் முதலிய நாடுகளை நாசம் செய்வதற்காக வல்லரசுகள் நடத்தும் போட்டியாக இறுதியில் முடியும் என்கிறார் அவர்.

க்ளிஃபோர்ட் கூறுவது ஆயுதங்களாக வழங்கப்படும் நேரடி ராணுவ உதவிக்கு மட்டுமின்றி, டாலராக வழங்கப்படும் உதவிக்கும் பொருந்தும்.

ராணுவ சம்பந்தமற்ற செலவுகளுக்காக இந்தியாவும் பாகிஸ்தானும் அமெரிக்காவிடமிருந்து டாலர் உதவி பெறலாம். உள்நாட்டு அபிவிருத்தித் திட்டங்களுக்கு இவ்விதம் அந்நிய உதவி பெற்று, தங்களது சொந்த வருமானத்தை மேன்மேலும் ஆயுதப் போட்டியில் செலவழிக்கலாம். ராணுவத்துக்காக ஆயுதமாகவோ, பணமாகவோ அந்நிய நாடுகள் தருகிற உதவி நிறுத்தப்பட்டால் இந்தியாவும் பாகிஸ்தானும் தங்களது பலவீனமான சொந்த வருமானத்திலிருந்து பரஸ்பர ஆயுதப் போட்டி மேற்கொள்வது சிரமமாகும். ராணுவ உதவி இல்லாததால் ஏற்படும் பணக் கஷ்டத்தை ஒட்டி, இந்தியா பாகிஸ்தான் மக்கள் அடிப்படையான அம்சங்களில் புதிய சிந்தனை கொள்ள இடம் ஏற்படும். விவேகம் பெறுவதற்கு இது ஒரு கடுமையான வழிதான். எனினும் வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை.

பகை கொண்டுள்ள இரு சாராருக்கும் உதவி தந்து, அவ்விருவருடைய ராணுவ பலமும் பெருக வசதி அளிக்கும் வரையில் யுத்த மனப்பான்மை குறையாது.

நட்பு நாடுகளுக்கு ராணுவ உதவி தர மறுப்பது ஆரம்பத்தில் கசப்பாகத் தோன்றும். ஆயினும் சில காலமான பின், ஏமாற்றமடைந்த நாடுகள் உதவியை மறுத்த வல்லரசு இரு தேசங்களையும் ஒரேபோல் நடத்துவதன் உட்கருத்தைப் புரிந்து கொண்டு அதற்கு மரியாதை தரும்.

நான் இங்கு கூறுவதெல்லாம் அமெரிக்காவின் ராணுவ உதவிக்கு மட்டுமின்றி ருஷிய உதவிக்கும் பொருந்தும்.

ஆயுத உதவி பெறும் ஒரு நாடு தனது பகை நாட்டை விடத் தனக்கே ஒரு வல்லரசு அதிக உதவி தருமாறு எப்படியேனும் செய்துவிட முடியும் என்று இரகசியத்தில் எண்ணுகிறது. இது ஒரு வியர்த்தமான எண்ணம். இந்த எண்ணத்தை இந்தியாவும் பாகிஸ்தானும் கைவிடுமாறு செய்ய வேண்டும்.

ச்ளிஃபோர்டின் யோசனை, உதவி தருகிற நாட்டு அரசாங்கத்துக்கும் நல்லது; உதவி பெறுகிற நாட்டுக்கும் நல்லது. சகாயம் பெறுகிற சர்க்கார் மட்டுமின்றி, அந்நாட்டு மக்களையும் சிந்திக்க வைப்பதற்கு இது உதவும் என்பதே அதி முக்கியமான விஷயம்.

அந்நிய நாட்டிடமிருந்து ராணுவத் தொடர்பற்ற இனங்களுக்காக ஒரு சர்க்கார் பண உதவி பெற்று, அந்த அளவுக்குத் தனது மற்ற வருமானத்தை ராணுவச் செலவுக்குத் திருப்பும் நிலையைத் தவிர்க்க வேண்டும். இதற்காக, உதவி பெறும் நாட்டின் ராணுவச் செலவு ஒரு குறிப்பிட்ட வரம்புக்கு மேல் போகக் கூடாது என்று எல்லை விதிக்க வேண்டும். ராணுவச் செலவுக்கு வரம்பு விதித்து, உதவி தருகிற நாடும் பெறுகிற நாடும் உடன்படிக்கை செய்து கொண்ட பின்னரும்கூட, உதவி பெறும் சர்க்கார் அந்த விதியைச்



சென்ற ஆண்டு டிசம்பர் 7ந் தேதி பம்பாய் பாரதீய வித்யா பவனத்தில் நடைபெற்ற ஒரு விழாவில் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்களுக்கு 'பிரம்ம வித்யா பாஸ்கர' என்ற விருது வழங்கப்பட்டது. டாக்டர் ராதாகிருஷ்ணன் இவ்விழாவில் நேரில் கலந்துகொள்ளாததால், சென்ற ஜனவரி 17ந் தேதி சென்னையிலுள்ள அவரது இல்லத்தில் அவரிடம் விருது பொறித்த தாமிரப் பத்திரத்தை ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யரவர்கள் வழங்கினார். ''கீழ் நாடுகள், மேல்நாடுகள் ஆகிய இரண்டின் நாகரிகங்களிலும் உள்ள தலைசிறந்த அம்சங்களை எல்லாம் இசைத்து, இனம், காலம், தேசம் இவற்றுக்கு மேம்பட்ட புதியதோர் ஆன்மிக திருஷ்டியை வழங்குபவர் டாக்டர் ராதாகிருஷ்ணன்'' என்று பாரதீய வித்யா பவனத்தின் சான்றிதழ் கூறியது. பிரம்ம வித்யா பாஸ்கரரின் முன்பு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஒரு சிறிய இன்னிசைக் கச்சேரி அளித்தார். □

---

சாமர்த்தியமாக மீறி ஆயுதப் போட்டியை நீடிக்க இயலும். இவ்வாறு மறைமுகமாக அந்நிய உதவியை ராணுவ அபிவிருத்திக்குப் பயனுக்கிக் கொள்கிற போக்கைக் கவனத்துடன் கண்காணிக்க வேண்டும்.

அணு ஆயுதம் எல்லா நாடுகளிலும் பரவாமல் தடுப்பதைப் பற்றி விரிவாக விவாதிக்கப்படுகிறது. பரஸ்பரம் பகை கொண்டுள்ள இருதரப்புக்கும் ஒரே சமயத்தில் உதவி செய்வதும் இதேபோல் உலக முக்கியத்துவம் பெற வேண்டிய விஷயமாகும்.

அந்தமான ஆக்கிரமிப்புக்குப் பரிகாரம் காண மட்டுமே வல்லரசுகள் உதவி புரிய வேண்டும். தங்களது உதவியால் இரண்டு நாடுகள் பகைமையை வளர்த்துக் கொண்டு ஆயுதப் போட்டியில் இறங்க வசதி தருவது உலக சமாதானத்தை வளர்க்கிற வழியல்ல. அடிப்படையாகப் பார்த்தால் இது நன்னெறியே அல்ல.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முப்பத்தேழாவது ஜனாதிபதியாக ஜனவரி 20ந் தேதி பதவிப் பிரமாணம் ஏற்றுள்ள ஸ்ரீ நிக்ஸன், ''இந்தப் பிரமாணத்தோடு நான் ஒரு புனித வாக்குறுதியை இணைக்கிறேன். அதாவது, உலக நாடுகளிடை சமாதானத்தை வளர்க்க வேண்டும் என்ற நோக்கத்தின்பொருட்டு என் பதவியின் சக்தியையும், என் ஆற்றலையும், விவேகத்தையும் என்னால் முடிந்த அளவுக்கு ஈடுபடுத்தி அவற்றைப் புனிதப்படுத்துவேன்'' என்றார். இந்தப் பிரதிக்ஞையை ஸ்ரீ நிக்ஸன் நிறைவேற்றுவதற்குத் திரு அருள் துணைபுரிய வேண்டும் எனப் பிரார்த்திப்போம்; துணை புரியும் என நம்புவோம்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)**

# பிணி தீர்கவே!

தமிழக முதலமைச்சர் திரு அண்ணாதுரை அவர்கள் மீண்டும் நோய்வாய்ப்பட்டிருப்பதை அறிந்து கலங்காதார் இல்லை. இந்த இதழ் அச்சு வாகனம் ஏறும்போது அவருக்கு மருத்துவத்தில் சிறந்த அமெரிக்க நிபுணர்களும், உள்நாட்டு நிபுணர்களும் பரிசோதனை நிமித்தமாக அறுவை செய்ய இருக்கின்றனர்.

அண்ணாதுரை அவர்கள் மக்களின் பேரன்பைப் பெற்றவர். மக்களிடம் பேரன்பு பூண்டவர். பிரதமரவர்கள் கூறி இருப்பதுபோல் தேசத்தின் சிறந்த தலைவர்களில் அவர் ஒருவர். அவர் நமது நாட்டுக்கே ஒரு சேம நிதி. எனவே, அவர் நல்லாரோக்கியம் பெற்று நிருவாகத்தை மேற்கொண்டால் நாட்டைப் பீடிக்கும் பல வியாதிகள் தீர வழி பிறக்கும். இறைவன் திரு அருளும், வைத்திய நிபுணர்களின் அறிவாற்றலும், நம் அனைவருடைய அபிமானமும் திரு அண்ணாதுரைக்குப் பூரண தேக திடம் அளிக்குமாக !

# என்ன சேதி?

## "சர்வோதய நாள்"

அண்ணல் காந்தி அமரரான தினம் சர்வோதய நாளாகக் கொண்டாடப்படுகிறது. காந்திஜியின் உடலைத்தான் காலன் கொண்டேகினன். அவர் வாழ்ந்து காட்டிய தத்துவங்களை அவன் எடுத்துச் செல்ல முடியாது. காலனால் கவர முடியாததை, காலத்தின் அலங்கோலப் போக்கினால் நாம் கைவிட்டோமாயின் நம்மை நாமே மன்னித்துக் கொள்ள முடியாது. 'காந்தீயத்தை நாம் மறந்தால் அவரைக் கொலை செய்தவனுக்குக் கூட்டாளியாகி விடுவோம்' என்று 1948ல் ராஜாஜி கூறியது இருபத்தோராண்டுகளுக்குப் பின்னர் இன்றும் நமக்கு விடுக்கப்படும் எச்சரிக்கையாகும்!

## திருக்குளத் திருப்பணி

சென்னை மாநகரத்தின் பழமைமைக்கும், பக்திக்கும் ஒரு முக்கியமான உறைவிடம் திருவல்லிக்கேணி. அல்லிகள் மலரும் கேணியான, ஸ்ரீ பார்த்தசாரதி கோயில் புஷ்கரணி தான் அந்தப் பேட்டைக்கே திருவல்லிக்கேணி என்ற திருப்பெயரைத் தந்துள்ளது. ஆழ்வாராதிகள் மங்களாசாஸனம் செய்துள்ள திவ்விய தேசத்தின் திவ்விய தீர்த்தமே திருவல்லிக்கேணி. 'கைரவணி' எனப்படும் இத்திருக்குளம், மழையின்மையால் தற்போது தண்ணீர் வற்றி, சேறும் தூறுமாகக் கலங்கி, அடியார்களின் மனத்தைக் கலங்க வைத்திருக்கிறது. இந்த மாசி மாதத்துக்குள் புஷ்கரணியைத் தூறு எடுத்துச் சீர்ப்படுத்தித் தெப்போற்சவம் நடக்க வழி காண வேண்டியது ஆஸ்திகர் கடமை.

தற்போது இத்திருப்பணி நடந்து வருகிறது. இந்தத் திருப்பணியால் இன்னோர் உபகாரம் நடைபெறுவதைக் குறிப்பிட வேண்டும். குளத்திலிருந்து எடுக்கப்படும் தூறு பயிர் பச்சைகளுக்குச் சிறந்த உரமாகும். தேவைப்படுபவர்கள் இதை இலவசமாகப் பெறலாம்.

திருக்குளத் திருப்பணிக்குப் பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: திரு டி. பி. வேங்கடாசலம், எக்ஸிக்யூடிவ் ஆபீசர், ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி தேவஸ்தானம், திருவல்லிக்கேணி, சென்னை – 5.

## சங்கரராம் நிதி

எழுத்தாளன் எந்தப் பகுதி மக்களைக் குணசித்திரமாக வரைகிறானோ, அந்தப் பகுதி மண்ணின் மணம் அவன் எழுத்திலும் வீச வேண்டும் என்பது இலக்கியத்துக்கு ஓர் இலக்கணம். இந்த இலக்கணத்தைப் பூரணமாக நிறைவேற்றியவர் திரு சங்கரராம். அவர் எழுத்திலே தஞ்சை ஜில்லா மண் வாசனை கமகம என்று வீசும்.

அவரது 'மண்ணாசை'யையும் 'பரிசலோட்டி'யையும் வாசித்தவர்கள் இதை அங்கீகரிப்பார்கள். இப்படி ஓர் அபூர்வமான எழுத்துத் திறன் படைத்து, ஆங்கிலத்திலும் தமிழிலும் பலப்பல கதைகளும் நவீனங்களும் எழுதி மிக மிடுக்காக இருந்த சங்கரராம் தமது பிராயம் முதிர்ந்த காலத்தில் தமது கைப்பொருளையும் இழந்து சிரம தசையில் இருக்கிறார். அவரது எழுத்துக் கலையின் தன்மையை அறிந்த சில அன்பர்கள் மார்ச் 9, 1969 அன்று அவரது எழுபத்தைந்தாவது பிறந்த நாளையொட்டிப் பணமுடிப்பு அளிக்க உத்தேசித்திருக்கிறார்கள். அதற்குத் தமிழ் கூறும் நல்லுலகத்திலுள்ள செல்வமும் இலக்கிய ரசனையும் பெற்ற அத்தனை பெருமக்களும் தங்களாலியன்ற பொருளுதவி செய்ய வேண்டும் எனக் கோருகிறோம். நிதி அனுப்ப வேண்டிய விலாசம்: திரு ஆர். திரியம்பகம், பொருளாளர், "சங்கரராம் நிதி" 9, முதல் தெரு, அபிராமபுரம், சென்னை—18.

---

1. சீநிவாச காந்தி நிலையத்தின் அங்கத்தினர்கள் சமீபத்தில் திரு பக்தவத்ஸலம் அவர்கள் தலைமையில் பத்மஸ்ரீ எஸ். அம்புஜம்மாளின் எழுபதாவது பிறந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடினர். இந்தக் கொண்டாட்ட தினத்தன்று ஸ்ரீமதி துர்க்கா பாய் தேஷ்முக்கும் ஸ்ரீ எஸ். மோகன் குமாரமங்கலமும் ஸ்ரீமதி அம்புஜம்மாளின் சேவைகளைப் பாராட்டினர்.

2. தமிழ் வெளியீட்டுக் கழகம் அண்மையில் தமிழில் எழுதப்பட்ட சில விஞ்ஞான நூல்களைக் கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் தலைமையில் வெளியிட்டது. அதே வைபவத்தில் தமிழக அரசினர் சிறந்த இலக்கியப் படைப்புக்காகப் பல பரிசுகளை வழங்கினர். இங்கு திரு அகிலன் கல்கியில் வெளியான அவரது 'கயல்விழி' நூலுக்காக அமைச்சரிடமிருந்து பரிசு பெறுகிறார்.





# ராஜாஜியின் கருத்துக்கள்

அமெரிக்கா, பிற நாட்டு விஷயங்களில் ஈடுபடாமல் தனித்து ஒதுங்கிப் போக வேண்டும் என்ற கருத்தை நிக்ஸன் அனுமதிக்கக் கூடாது என்று அமெரிக்காவின் முன்னாள் பாதுகாப்புக் காரியதரிசியின் அறிக்கை கூறுகிறது. ஆனால் ஒரு தேச மக்கள் ஒதுங்கி வாழ விரும்பி விட்டால், ஜனாதிபதி என்ன செய்ய முடியும்? அமெரிக்க மக்களுக்கு உலக விவகாரம் அலுத்துப் போய்விட்டது எனலாம். எனவே ஒதுங்கியிருக்க விரும்புகிறார்கள். ஆயினும் இந்தப் போக்கு நீடித்து நிற்காது. அந்நாட்டில் உள்நாட்டுக் குழப்பங்கள் வெற்றிகரமாகச் சமாளிக்கப்பட்டவுடன், அமெரிக்க மக்களின் சக்தி மீண்டும் உலக நலனுக்காக வெளிப்படும். அதனிடம் உதவி பெற்ற நாடுகள் நன்றி காட்டாமல் இருப்பினும்கூட, அமெரிக்காவின் இயற்கையான பொறுப்பை ஏற்க அது தவறாது.

முதலில் அணு ஆயுதத்தைக் கண்டுபிடித்து உபயோகித்த அமெரிக்காவுக்கு உலகத்தைக் காப்பது, விதி நிர்ணயித்த கடமையாக வாய்த்துள்ளது. அணு ஆயுத நாடுகள் தமது அணு ஆயுதங்களை அழிக்க மனப்பூர்வமாக உடன்படிக்கை செய்துகொள்வதற்கு அமெரிக்கா அடிகோல வேண்டும். இதை எப்படிச் செய்வது என்பது இருவருளின் விளக்கவொண்ணாத மர்மமாகும். ஆயினும் இது நிறைவேற்றப்படும் என நம்புகிறேன். சந்திரனுக்கும், சுக்கிரனுக்கும் பறப்பதைவிட — இதர டம்ப விளையாட்டுக்களை விட—இதுவே முக்கியம்.

★

அபல்லோ விண்கலத்தில் சந்திரனைச் சுற்றி வந்தது விஞ்ஞானத்தின் நுட்ப சாதனையாயினும், இன்றைய உலக மக்களின் முக்கியமான தேவையை மறந்து, அந்த இடத்தில் விண்வெளிச் சோதனையை அமர்த்தியிருப்பது மகத்தான குற்றம் என்கிறார் பிரபல வரலாற்று அறிஞர் ஆர்னல்ட் டோயின்பீ.

உலக மக்களுக்குப் போதிய உணவும் செல்வமும் பெற்றுத் தரவேண்டியதே முக்கிய தேவை. விண்வெளியைச் சோதிப்பதை விட, நம் உலகிலேயே மூன்றில் இரு மடங்கு விஸ்தீரணம் பரவியுள்ள கடலை ஆராய்ந்து அது வழங்கக் கூடிய உணவுச் செல்வத்தையும் கனிச் செல்வத்தையும் மக்களின் பயனுக்குக் கொண்டுவர வேண்டும் என்கிறார் அவர்.

மக்கட் தொகை உயருவது பற்றிக் கவலைப் படாத அளவுக்குக் கடலில் முறைப்படி 'மீன் விவசாயம்' நடத்தி, உணவுப் பிரச்னையைத் தீர்க்க வேண்டும் என்கிறார் டோயின்பீ.

சர்வ தேசச் சர்ச்சைகளைத் தீர்த்துக் கொண்டு, ஓர் உலக அரசாங்கத்தை நிறுவி, ராணுவங்களை அர்த்தமற்ற மடமையாக்குவதற்கு மனிதனின் அறிவும், ஆன்ம சக்தியும் பிரயோசனமாக வேண்டும் என்கிறார் இச் சரித்திர நிபுணர். 'இதைச் செய்ய முடியும்; செய்தே ஆகவேண்டும். அதுவரையில், சந்திர மண்டல யாத்திரை எத்தனை கிளுகிளுப்புத் தந்தாலும் — எத்தனை டம்ப உணர்ச்சியை ஊட்டினாலும், அதை அபிவிருத்தித் திட்டங்களிலிருந்து அடித்து விலக்கிவிட வேண்டும்' என்கிறார்.

'மனிதனின் பொருட் செல்வமும், நுண்ணறிவுச் செல்வமும் இப்படி விரயமாவது குற்றமாகும்' என்கிறார். பொருளும் அறிவும் எதிலாவது ஈடுபடத்தான் வேண்டும். நல்லதாக எதிலும் அவை ஈடுபடாவிடில் சைத்தான் அவற்றை ஆக்கிரமித்துக் கொள்வான். இவற்றை ஒரேயடியாகச் சைத்தான் வசமாக்கிக் கொள்ள விடாமல், ஏதோ ஒரு விதத்தில் விரயம் செய்வதே நல்லதுதான்.

உபயோகமில்லாமல் குவிக்கப்பட்டுள்ள அணு ஆயுதங்களை அழித்தாலே விமோசனம் கிடைக்க வழி உண்டு. அணு ஆயுதம் அழிக்கப்பட்டு, அடுத்த தலைமுறையில் அணு ஆராய்ச்சித் திறனுக்கு வேலையில்லாவிட்டால் விஞ்ஞான நுண்ணறிவு என்னாவது? அது சைத்தான் வசமாகாதிருக்கவே, வியர்த்தமான விண்வெளி சோதனை நடக்கிறது போலும்!

ஒன்றைச் செய்வதைவிட, அழிப்பது சுலபம் என்பது பொதுவழக்கு. ஆனால் அணு ஆயுத விஷயத்திலோ, இதற்கு நேர்மாறாக இப்போது அதை அழிப்பது முன்பு அதைச் செய்ததைவிடச் சிரமமாக இருக்கிறது. அணு ஆயுத அழிப்பில் முதலடி வைக்க இரு தரப்பும் துணியவில்லை.

★

தாஷ்கெண்ட் தினத்தையொட்டி இந்தியப் பிரதமரும், பாகிஸ்தான் ஜனாதிபதியும் வாழ்த்துக்கள் பரிவர்த்தனை செய்துகொண்டுள்ளனர். இரு நாடுகளிடை உறவைச் சகஜ நிலையில் கொண்டு வருவதற்காக ஓர் இந்தோ-பாகிஸ்தான் கூட்டு அமைப்பு ஏற்படும் என்று இவ்வாழ்த்துக்கள் உறுதி கூறுகின்றன. இது செயலானால், தாஷ்கெண்ட் பிரகடனத்தின் மூன்றாவது ஆண்டு விழாவுக்கு உகந்த காரியமாயிருக்கும்.

★

உலக நாடுகள் யுத்த எண்ணத்தை விட்டுச் சமாதானத்துக்குப் பாடுபட வேண்டும் என்கிறார் பாரதப் பிரதமர். ஒவ்வொரு முறையும் அவர் இவ்வாறு மற்ற நாடுகளுக்கு உபதேசிக்கும்போது, இந்தியா செய்யாத விஷயத்தில் பிறருக்கு உபதேசிக்கிறாரே என்று எண்ணாதிருக்க முடியவில்லை. பாகிஸ்தான் மீது நாம் பழி போடலாம். அதேபோல் பாகிஸ்தான் நம்மீது பழியைத் திருப்பலாம். எப்படியாயினும் நம் விவகாரத்தைச் சுத்தமாக்கிக் கொள்கிற வரையில் பிறருக்கு உபதேசிக்காமல் இருந்தால் புத்திசாலித்தனமா யிருக்கும்.

★

போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதால், மரணமோ, படுகாயமோ ஏற்படாது

என்று சர்க்கார் தரப்பில் வெளிப்படையாகக் கூறப்படுவது அவ்வளவாக யுக்தமல்ல. துப்பாக்கி ரவையால் சாக நேரிடும், அல்லது படுகாயப்பட நேரலாம் என்கிற பயமே மக்களை வன்முறையில் இறங்காமல் தடுப்பதாகும். இவ்வாறு தடுப்பதே போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தின் நோக்கம். ஆனால், 'போலீஸ் நடவடிக்கையால் தீங்கு உண்டாகாது' என்று வாக்குறுதி தருவதில் மந்திரிகளுக்கு ''ஜனநாயக'' அநுகூலம் கிடைக்கிறது.

சுட்டு வீழ்த்தப்படுவோம் என்ற பயத்தை முன் காலத்தில் சர்க்கார் காத்து வந்தது. சுதந்திர இந்தியாவிலும் இதை நீடிக்க வேண்டும். ஒழுங்கீனம் ஜனநாயக மல்ல.

பலவிதங்களில் ருஷியாவைக் 'காப்பி' அடிக்க விரும்புகிறோம். மற்றவற்றைவிட ஒழுங்கீனத்தை ஒடுக்குவதிலேயே ருஷிய உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும். 'ஒடுக்க வேண்டும்' என்று நிர்மாணித்து விட்ட விஷயத்தில் ருஷிய சர்க்கார் மிகவும் கண்டிப்புக் காட்டுகிறது. போலீஸாரின் தலையீட்டில் கடுமை இராது எனில், அது போலீஸார் தலையிடாமலே விலகி இருப்பதை விட மோசமாகும். கிளர்ச்சி செய்பவர்கள், அல்லது செய்யக்கூடியவர்களிடம் தோற்றுப் போகக் கூடிய வாய்ப்பைப் போலீஸார் ஒருபோதும் தேடிக்கொள்ளக் கூடாது.

★

சென்னை என்ற பெயரைத் 'தமிழ் நாடு' என்று மாற்றுவதில் தி. மு. க. மகத்தான உற்சாகம் அடைந்திருக்கும் இன்று, நான் ஒரு பழங்கதை சொல்வதில் கெடுதல் இல்லை.

அது பதினேந்து வருடத்துக்கு முந்திய கதை. திரு காமராஜ் கலபமான முறையில், நம் ராஜ்யத்தின் முதன் மந்திரிப் பொறுப்பை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்ட சமயம். பழைய சென்னை மாகாணம் பிரிவினை செய்யப்பட்டு, ஆந்திரம், கேரளம், மைசூர் ஆகிய வற்றுக்குப் பல மாவட்டங்களைத் தந்தாகி விட்டது. தமிழரில்லாத எல்லாப் பகுதிகளும் போய்விட்ட இந்நிலையில் ராஜ்யத்துக்குத் தமிழ் நாடு எனப் பெயர் வைக்கலாமா என்று என்னை காமராஜ் கேட்டார். (நீண்ட காலமாகவே காங்கிரஸின் கிளைகளும் 'தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி', 'ஆந்திரப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டி' என்றுதான் அழைக்கப்பட்டு வந்தன.)

சென்னை ராஜ்யம் [என்ற] பெயரையே நீடிக்கலாம் என்று நான் காமராஜுக்குக் கூறினேன். தமிழ் மக்களோடு தாங்களும் சென்னை நகரில் பங்கு பெற வேண்டும் என்று ஆந்திரர்கள் கொண்டிருந்த ஆத்திரம் அடங்காத சமயம் அது. அப்போது நிஜாம் ராஜ்யத்திலிருந்து அவர்களுக்கு ஹைதராபாத் நகரம் கிடைக்கவில்லை. சென்னை நகரம் தமிழ்—ஆந்திர சர்க்கார்கள் இரண்டுக்கும் பொதுவாக இருக்க வேண்டும் என்றனர். ''இச்சமயத்தில் 'தமிழ் நாடு' என்று அரசாங்க பூர்வமாகப் பெயர் மாற்றினால், அறிவுக்குப் பொருந்தாத ஆந்திரர்களின் கோரிக்கை வலுப்பெறும். அவர்கள் தமிழர்களை மதுரை அல்லது திருச்சிக்குத் தலைநகரை மாற்றிக் கொண்டு சென்னை நகரத்தை ஓர் இரு-ராஜ்ய நகரமாக்க வேண்டும் என்பர்'' என்று திரு காமராஜிடம் கூறினேன். அதைக் காமராஜ் புரிந்து கொண்டார். நான் சொன்னதை உடனடியாக ஒப்புக் கொண்டார்.

ஹைதராபாத் — செகந்திராபாத் ஆகிய இரட்டை நகரம் ஆந்திரத்தின் தலைநகரான பின் இன்று விவகாரங்கள் முற்றுப்பெற்று விட்டன.

பெயரைப் பற்றி தி. மு. க. பெரிய உணர்ச்சிக் கொந்தளிப்புக் கொண்டுள்ள இன்று, காமராஜுக்கும் எனக்கும் மட்டுமே தெரிந்த இந்தக் கதையைச் சொல்வது உபயோகமாக இருக்கும் என நம்புகிறேன்.

காந்திஜி விரும்பிய சித்திரம்

# வாக்கிலே வாசுதேவன்



பாலன் பிரகலாதன் குருகுலவாசம் செய்கிறான்.

அவனுக்குக் குருகுலவாசம் அவசியமே இல்லை.

கர்ப்பவாசமே அவனுக்குக் குருகுலவாசமாக இருந்து விட்டது.

கர்ப்பத்தில் இருக்கும்போதே நாரத மகரிஷி, குருவாக வந்து அவனுக்கு நாராயண நாமத்தை உபதேசித்துவிட்டார்.

அந்த உபதேசத்தை மறப்பதற்குத்தான் அவனுக்கு இப்போது அசுர குருவிடம் சிட்சை அளிக்கப்பட்டது.

அசுரராஜனுகிய ஹிரண்யகசிபுவின் மகனுகப் பிரகலாதன் பிறந்ததனுல் இந்தக் கொடுமைக்கு ஆளாக நேர்ந்தது. நாராயணனை அறவே மறந்து ஹிரண்யகசிபுவை வழிபட அவனைப் பழக்கப் பார்த்தனர், சுக்கிராசாரியருடைய புத்திரர்களாகிய சண்டனும் அமர்க்கனும்.

நாராயணன் என்றால் ஆத்மிகம்; ஹிரண்யகசிபு என்ருல் உலகியல்.

ஒருநாள் குரு வெளியேறியபோது, வெறும் உலகியலைக் கற்கும் சக மாணவர்களைக் கண்டு உள்ளம் கசிந்தான் பிரகலாதன். அவர்கள் மனத்தையும் நாராயணன்பால் திருப்பிஞன்.

''பாலப் பருவத்தில் பிரார்த்தனைக்கு என்ன அவசரம் என்று எண்ணுகிறீர்கள். விடியற்காலையிலேயே தயிர் கடைந்தால் தான் வெண்ணெய் வரும். வெய்யில் ஏறிவிட்டால் வெண்ணெய் எடுக்க முடியாமல் உருகிவிடும். நமக்குள்ளேயே இருக்கும்

வெண்ணெயை இப்போதே கடைந்தெடுப் போம்'' என்றான். அவன் வாக்கே வெண்மை யாக வெண்ணெயாக மணத்தது.

சக மாணவர்களுக்கே ஒரே அதிசயம். ''நாம் பிறந்தது முதல் அசுர ராஜதானியில் இருக்கிறோம். உனக்கு எங்கிருந்து வந்தது இந்த ஞானம்?'' என வினவினர்.

''உலகத்தில் பிறக்கு முன்பே எனக்கு உப தேசமாகி விட்டது'' என்று பிரகலாதன் மறுமொழி சொல்லி, அந்த அதிசயக் கதை யைச் சொன்னான்.

ஹிரண்ய கசிபு இந்திரலோக ஆதிபத்தியம் பெறுவதற்காக மந்தர மலையில் தவம் புரிந்து வந்தான். அப்போது இந்திரன், ஹிரண்யகசிபுவின் மனைவி கயாதுவை அப கரித்துச் சென்றான்.

பயந்த குரரி பட்சி போல் கதறினாள் கயாது.

வழியில் வந்தார் தேவரிஷி நாரதர்.

பிறன் மனைவியைப் பறித்துச் செல்லும் பாதகத்தை விடுமாறு தேவராஜனுக்கு அறிவுரை தந்தார்.

இந்திரன் கூறினான்: ''இவளை எனக்கு வசப்படுத்திக் கொள்வதற்காக எடுத்துச் செல்லவில்லை. இவளது வயிற்றில் அசுர வீரியம் வளருகிறது. ஹிரண்யனின் கொடுமை போதாதென்று, இவள் வயிற்றில் பிறக்க விருக்கும் பிள்ளையின் கொடுமையும் சேர்ந் தால் பிரபஞ்சம் தாங்காது. எனவே, இவள் பிள்ளை பெற்றவுடன் அதை அழிக் கவே. இவளை எடுத்துச் செல்கிறேன். பிறகு இவளை விட்டு விடுவேன்.''

நாரதர் சிரித்தார். ''விஷ நாகத்திடம் ரத்தினம் பிறப்பதை அறியமாட்டாயா? அசுரன் மகன் அசுரனாகத்தான் இருக்க வேண்டுமா? இவளது கருவில் உருவாகிறவன் பரம பாகவதன். உன்னால் அவனை அழிக்க முடியாது'' என்றார்.

தேவரிஷியின் சொல்லை மதித்து, இந்திரன் கயாதுவை அங்கேயே விட்டுச் சென்றான்.

நாரதர் அவளைத் தம் ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்றார்.

அவளுக்கு ஞானோபதேசம் செய்தார்.

உதரத்தில் இருந்த பாலன் அந்த உப தேசத்தை வாங்கிக் கொண்டான்.

ஹிரண்ய கசிபுவின் தவம் முடிந்து அவன் மூவுலக ஆட்சியை வரமாகப் பெற்றான். பிறகு வரம் தந்தவனையும் மறந்து, அகம் பாவத்தில் ஆழ்ந்தான். தகாத வரம் கேட்ட தற்குத் தண்டனையாக வரத்தோடு இந்தச் சாபமும் கலந்து அளிக்கப்பட் டிருந்தது போலும்!

பிள்ளையையும் தன் வழியில் பயிற்றுவிக்க எண்ணினான் ஹிரண்யன். ஆனால் அப் பிள்ளையோ மற்ற அசுரச் சிறுவர்களையும் பக்தி மார்க்கத்தில் ஈடுபடுத்தினான்.

பிரகலாதனைக் குருகுலத்திலிருந்து தரு வித்து, அவன் ராஜ நீதிகளில் தேர்ச்சி பெற்றிருக்கிறானா என்று தந்தை பரிசோதித் தான்.

''சத்துருக்களையும் மித்திரர்களையும் எப்படி நடத்த வேண்டும்?'' என்று மகனை வின வினான்.

''சத்துருவாவது, மித்திரராவது? எனக்கு அப்படியெல்லாம் வித்தியாசமே தெரிய வில்லையே. எல்லாம் நாராயண ஸ்வரூப மாகத்தான் தெரிகிறது'' என்றான் பால் மணம் மாறாப் பாலகன்.

ஹிரண்யன் கோபாவேசமானான்.

பிரகலாதனைப் பலவிதத்தில் துன் புறுத்தினான். ஆனால் தீயும், விஷமும் அவனை ஏதும் செய்யவில்லை. மலையிலிருந்து அவனை உருட்டியபோது பூதேவியே அவ னைக் கை நீட்டித் தாங்கிக் கொண்டாள்.

அசுரப் புரோகிதர்கள் ஆபிசார ஹோமம் செய்து ஒரு கிருத்தியை உண்டாக்கிப் பிரக லாதன் மீது ஏவினர். கிருத்தியோ அந்தப் புரோகிதர்கள் மீதே பாய்ந்தது.

பிரகலாதனின் உள்ளம் கருணையால் நெகிழ்ந்தது. ''ஜகந்நாதா, எனக்கு எவரிடத் திலும் பகையில்லை என்பது உண்மையாயின் இந்தப் புரோகிதர்கள் கிருத்தியிடமிருந்து பிழைக்க வேண்டும்'' என்று ஆணையிட்டான்.

அவனது அன்பில் கிருத்தி மறைந்தது. மறையவர்கள் காக்கப்பட்டனர்.

தன்னாலும் சாதிக்க வொண்ணாததைச் செய்த மகன் மீது முன்னிலும் ஆத்திரம் கொண்டான் ஹிரண்யகசிபு. பிரகலாதனை நாக பாசங்களால் பிணித்துக் கடலில் தள்ளுமாறு உத்தரவிட்டான்.

கடலில் தள்ளப்பட்ட பிரகலாதன் பாற் கடலில் வசிக்கும் பெருமானைத் தியானித் தான். நீலக் கடலே திருமாலாகத் தரிசனம் தந்தது. எங்கும் ஹரியையே கண்டான்.

தன்னிலும் அவனையே கண்டு கொண் டான்.

''நானே அவன்'' என்ற மகாநுபவத்தை எய்தி மகிழ்ந்தான்.

உலகுக்குப் பக்தியின் பெருமையைத் தெரிவிப்பதற்காக, அந்த அத்வைத ஞானியை அடியவனாக்கி, ஆண்டவனாக எழுந்தருளினான் திருமால்.

''வரம் தர வந்திருக்கிறேன்'' என்றான்.

''வரமா, உன்னைக் கண்டபின் இனியும் வேறு வரமா? ஐயோ, என்னைச் சோதிக் கிறாயே!'' என்று அவமானத்துடன் அலறி னான் பிரகலாதன்.

பிறகு சொன்னான்: ''ஏதாவது வரம் கேட்டே ஆக வேண்டுமாயின், உன்னை அன வரதமும் மறவாத பாக்கியத்தையே வேண்டி னேன். **சாமானிய மக்களுக்கு உலகப் பொருட்களில் எத்தனை ஆசை உள்ளதோ அத்தனை ஆசை எனக்கு உன்னிடம் உண்டா கட்டும்.''**

பிரகலாதன் கடலிலிருந்து மீள வரம் கேட்கவில்லை.

ஆனால் கடலே அவனைக் கரையில் சேர்த்து விட்டது.

''எங்கும் நிறைந்துள்ள பிரபு கடலிடை வந்து என்னைக் காத்தான்'' என்று தந்தை யிடம் கூறினான் பிரகலாதன்.

''எங்கும் நிறைந்திருக்கிறானா? என் கண் ணுக்குத் தெரியவில்லையே!'' என்றான் தந்தை.

''ஆம், எங்கும்தான் இருக்கிறான். 'சாணி னும் உளன். ஓர் தன்மை அணுவினைச் சதகூறு இட்ட கோணினும் உளன். உன் முன் நின்ற

தூணிலும் உளன். நீ சொன்ன சொல்லிலும் உளன்'' என்றான் மைந்தன்.

''என் முன் தூணில் இருக்கிறானா? அப்படியானால் அவனைக் கொல்வேன்'' என்று கூறி வாளை உருவியபடி சிம்மாசனத்திலிருந்து தூண் மீது பாய்ந்தான் அசுர ராஜன்.

அவன் தூணைப் பிளக்க விடாமல் தூணே பிளந்தது. அற்புத நரசிம்மம் வெளிப்பட்டது.

தூணைப் பிளந்து வந்த தேவாதி தேவன் அசுரனையும் பிளந்தான்.

மகாலக்ஷ்மியும் நெருங்க அஞ்சிய ரௌத்திர ரூபம் கொண்ட நரசிம்மத்திடம் சென்று, அதனைச் சாந்தப்படுத்தினான் பிரகலாதன். நரசிம்மமூர்த்தி தனது திருக் கரத்தைப் பிரகலாதன் சிரத்தில் சாத்தியது.

''உனக்கு விருப்பமான வரம் தருவேன்'' என்று மீண்டும் சோதித்தது.

பிரகலாதன் புன்னகை பூத்தான். ''எவன் தன் ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக உன்னிடம் பக்தி செய்கிறானோ அவன் பக்தனல்லன், வியாபாரியே ஆவான். எனக்கு வேண்டியது எதுவுமில்லை; உனக்கும் வேண்டியது ஏதும் இல்லை. வரம் கேட்பதும், கொடுப்பதும் இங்கு எதற்காக?'' என்று முத்து முத்தாகப் பேசினான்.

ஆயினும் பகவான் அவனை அப்போதே தன்னுடன் அழைத்துச் சென்று விடவில்லை.

நீண்ட காலம் அரசாளுக வாழ்ந்து விட்டு, சத்கருமங்கள் புரிந்து, அதன்பின் தன்னிடம் வருமாறு பணித்துச் சென்றான்.

அது பிரகலாதனுக்கு வரமாகவும் தோன்றவில்லை; சாபமாகவும் தோன்றவில்லை. வாசுதேவன் தவிர, அவனுக்குத் தான் வேறெதுவும் இருக்கவில்லையே!

பிரகலாதனுக்கு ஈடான பக்தன் இல்லை. பகவானின் பெருமைகளைக் கேட்பது, அவற்றைப் பாடுவது, அவனை ஸ்மரிப்பது, பாதங்களை வழிபடுவது, அர்ச்சிப்பது, நமஸ்கரிப்பது, அவனுக்குப் பணிவிடை செய்வது, அவனோடு நட்புப் பூணுவது, அவனுக்குத் தன்னையே அர்ப்பணம் செய்வது—என்றிப்படி பக்தி மார்க்கத்தில் ஒன்பது வகைகளைக் கூறிய பாகவதன் அவன்.

தாஸனாகவும், புத்திரனாகவும், மித்திரனாகவும் திருமாலை வழிபட்டு, அவனாகவே ஆனவன்.

'ஆத்ம நிவேதனம்' என்று அவன் கூறுகிற பக்தி முறையே பக்தனைப் பகவானாக்குவது.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பராசர மகரிஷியும், ஸ்ரீமத் பாகவதத்தில் சுகப் பிரம்மமும், இராம காதையில் கம்பநாடரும் பிரகலாதனின் பெருமையை வாய் கொள்ளாமல் வருணிக்கின்றனர். அவன் கூறுகிற ஆத்ம நிவேதனத்தையே, நாயகனுக்குத் தன் நலன் அவ்வளவையும் ஈந்து கொள்ளும் நாயகியின் பாவமாக்கித் தியாகராஜர் 'பிரகலாத பக்தி விஜய'த்தைத் தந்தார்.

ஆத்மா நிவேதனமானபின், அனைத்தும் ஆத்மாவாகி விடுகிறது. இதனாலேயே சமத்துவம் என்கிற தத்துவத்தின் மகாகுருவானான் பிரஹலாதன். ''எல்லா உயிர்களையும் ஒரே போல் பாவியுங்கள்; சமத்துவம் என்பது தான் அச்சுதனுக்கு உரிய ஆராதனை'' என்ற மாமந்திரத்தைத் தந்தான்.

சமத்துவத்துக்கும், சத்தியத்துக்கும் முதலிடம் தந்து, தீய சக்திகளுடன் ஒருகாலும் ஒத்துழைக்காமல் இன்னல்களை மனத் தெளிவுடன் ஏற்கும் சத்தியாக்கிரகத்தை வகுத்த மகாத்மா இந்தச் சிறிய பண்புகளுக்கெல்லாம் பிரகலாதனையே உருவமாகக் கருதினார்.

இப்பண்புகளின் உருவகமாக மட்டுமின்றி அவற்றை உரையாலும் விளக்கியவன் பிரகலாதன். நமது புராண நந்தவனத்தில் தேன் மலர்களாக மணப்பவை பிரகலாதனின் அன்பு வாக்குகள். அவை வாசுதேவனை வசிக்கும் வாசகங்கள் அன்றோ? எனவேதான், நரஸிமேதா கூறும் வைணவ லக்ஷணங்களில், நிலைத்த வாக்குக்கு வடிவமாக அவனைச் சித்திரிக்கிறார் கனுதேசாய்.

- ரா. கணபதி

## மகாத்மாவின் மணிமொழி



எது நேர்ந்தாலும் நேரட்டும்என்று, நாம் சத்தியமாகிற சட்டத்தை வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும். பிரகலாதனின் வாழ்வையே இதற்கு உதாரணமாகக் கொள்கிறேன். சத்தியத்தின் பொருட்டு அவன் தனது தந்தையையே எதிர்க்கத் துணிந்தான். தந்தை இழைத்த கொடுமைகளுக்கு அவன் பிரதியாகப் பதிலடி கொடுக்கவில்லை. ஆனால் பதிலடி தராமல், தான் சாகவும் தயாராக இருந்ததன் மூலமே அவன் தன்னையும் சத்தியத்தையும் பாதுகாத்துக்கொள்ள எண்ணினான். அதோடு கொடுமைகளிலிருந்து அவன் தப்பித்து ஓட விரும்பவில்லை. தன் உதட்டில் புன்னகை நெளிய, எண்ணற்ற சித்ரவதைகளை ஏற்றான். இதன் இறுதி விளைவாக, கடைசியில் சத்தியமே வெற்றிபெற்று எழுந்தது. சத்தியம் என்கிற சட்டம் பொய்க்காது என்று தன் வாழ்விலேயே நிரூபித்துவிட முடியும் என்கிற உத்தேசத்துடன் பிரகலாதன் ஒரு காலத்தில் கொடுமைகளைச் சகித்துக் கொண்டிருக்கவில்லை. சத்தியம் ஜயிக்கும் என்பது வாஸ்தவம். அது இருக்கவே இருந்தது. ஆனால், சித்ரவதைகளுக்கிடையே பிரகலாதன் சாக நேரிட்டிருந்தாலும், அதற்காக அவன் சத்தியத்தை விட்டிருக்க மாட்டான்.

உங்கள் குழந்தை
ஜலதோஷத்தின்
வலிகளால்
அவதிப்படாமல்
பார்த்துக்
கொள்ளுங்கள்

**விக்ஸ் வேபோரப் உடனடியாக இதமளிக்கிறது...உங்கள் குழந்தை சுலபமாகச் சுவாசிக்கிறது...இரவு முழுவதும் அயர்ந்து தூங்குகிறது**

உங்கள் குழந்தை தன் சௌகரியங்களுக்கு உங்களையே எதிர்நோக்கியிருக்கிறது. ஆகையால் உங்கள் குழந்தை ஜலதோஷத்தினால் உண்டாகும் வலிகளால் அவதிப்பட்டால், ஜலதோஷத்தின் முதல் அறிகுறிகளான மூக்கின் ஒழுக்கு, நீர் வழியும் கண்கள், தொண்டை அழற்சி, சிரமப்பட்டு சுவாசித்தல் ஆகியவை தோன்றினால், விக்ஸ் வேபோரப் தடவுங்கள்.

விக்ஸ் வேபோரப் உங்கள் குழந்தையின் ஜலதோஷத்திற்கு மிகச் சிறந்த நிவாரணி. ஏனென்றால் அது ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்டு, மிகவும் அவதிக்குள்ளாகும் மூக்கு, தொண்டை, மார்பு ஆகிய பாகங்களில் பயனுள்ள முறையில் செயல் புரிகிறது: குழந்தையின் மிருதுவான சருமத்திற்கு மிகவும் ஏற்றது.

விக்ஸ் வேபோரப் தடவுங்கள் போதும்; குழந்தையை நன்றாகப் போர்த்து, படுக்கவிடுங்கள். உங்கள் குழந்தை இரவு முழுவதும் அயர்ந்து தூங்கும்போது, விக்ஸ் வேபோரப் செயல் புரிந்துகொண்டே இருக்கிறது. பொழுது விடிவதற்குள் ஜலதோஷத்தின் வலிகள் மறைந்துவிடுகின்றன. உங்கள் குழந்தை முன் போலவே, உங்கள் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும், சந்தோஷமாகத் துள்ளி விளையாடும் குழந்தையாக எழுந்திருப்பதைக் காண்பீர்கள்.




**விக்ஸ் வேபோரப்பின் வியத்தகு இருவழிச் செயல்**



**வெளிப்புறச் செயல்:** வேபோரப்பின் சருமத்தை சூடாக்கும் தன்மை உங்கள் குழந்தைக்கு உடனடியாக சுகமளிக்கிறது. சருமத்தின் மீது செயல் புரியும் வேபோரப்பின் குணமளிக்கவல்ல மருந்துகள் முதுகு, மார்பு இவைகளின் இறுக்கத்தை நீக்குகிறது...வலிக்கும் தசைகளுக்கு இதமளிக்கிறது.



**உட்புறச் செயல்:** உங்கள் குழந்தையின் உடலின் வெப்பமே வேபோரப்பை உடனடியாக மருந்து ஆவிகளாக மாற்றுகிறது. இந்த ஆவிகளை இரவு முழுவதும் ஒவ்வொரு முறை மூச்சுவிட்டு இழுக்கும்போதும் குழந்தை உள்ளுக்கு சுவாசிக்கிறது. இந்த உட்புறச் செயல் மூக்கிலும் மார்பிலுமுள்ள அடைப்பை நீக்க உதவுகிறது...தொண்டைப் புண்ணுக்கு இதமளிக்கிறது.




# விக்ஸ் வேபோரப்

3 அளவுகளில்



# 'ஜம்'மென்று பறக்கும் 'ஜம்போ'

அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸனின் பதவிஏற்பு வைபவத்தின் போது இந்தியாவின் நல்லெண்ணத்துக்கு அடையாளமாக ஊர்வலத்தில் கலந்துகொள்ள ஒரு யானைக் குட்டியை அனுப்பி வைப்பதாகத் தில்லியில் உள்ள நம் தலைவர்கள் தெரியப்படுத்தினார்கள்.

'வாஷிங்டனில் இப்போது கடுமையான குளிர்; அதனால் யானைக் குட்டியை இப்போது அனுப்பாதீர்கள்' என்று அமெரிக்க அரசினர் தெரியப்படுத்தி விட்டனர். சீதோஷ்ண நிலையில் திடீரென்ற மாற்றம் யானைக் குட்டிக்கு ஒத்துக் கொள்ளாமல் போய் விடுமோ என்று அவர்களுக்குக் கவலை.

நிக்ஸனின் ரிபப்ளிகன் கட்சிச் சின்னம் யானையானதால் யானைக்குட்டியை அனுப்பத் தீர்மானித்தது இந்திய அரசு. யானைக்குட்டியை அனுப்புவது என்று கடைசி நிமிஷத்தில் முடிவானதால் அது ஏற்கப்பட்டிருக்குமேயானால், விமானத்தில்தான் பறந்திருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? கப்பலில் போனால் காலதாமதமாகி விடுமே?



ஏர் இந்தியாவின் போயிங் 707 விமானங்களில் இதுவரை பல யானைக் குட்டிகள் பறந்திருக்கின்றன. நட்புறவை வளர்த்துக் கொள்ள விரும்பி அயல்நாட்டு மிருகக் காட்சி சாலைகளுக்கு நமது அன்புக் காணிக்கையாக யானைக் குட்டிகளை அனுப்பி வைத்திருக்கிறோம். வருங்காலத்தில் நமது தலைவர்கள் யானைக் குட்டிகளை என்ன, முழு வளர்ச்சி பெற்ற யானைகளையே விமானத்தில்ஏற்றி அனுப்பி வைக்கலாம்!



பெரிய யானைக்கும் இடம் அளிக்கும் வகையில் புதிய விமானங்களைப் பெறப் போகிறது ஏர் இந்தியா நிறுவனம். இது தான் ''ஜம்போ ஜெட்'' எனப்படும் போயிங் — 747 விமானம். 'ஜம்போ' என்றாலே யானையைக் குறிக்கும். உருவத்தில் பெரிதான பல வஸ்துக்களை ஜம்போ என அடைமொழி சேர்த்து அழைப்பர் அமெரிக்கர். போயிங் — 747 விமானம் ஜெட் விமானங்கள் அனைத்தையும்விடப் பெரிதாக இருக்குமாதலால் 'ஜம்போ ஜெட்' எனப்படுகிறது.

பம்பாயில் ஏர் — இந்தியா தலைமைக் காரியாலயத்துக்குச் சென்று 'ஜம்போ ஜெட்'

களைப் பற்றிக் கேட்ட போது ருசிகர மான பல தகவல்கள் கிடைத்தன. மற்ற விமானங்களைவிட இது மிகப் பெரிது என்ப தால் விமான நிலையங்களில் இதற்கு 'ரன்வே' சாலை இன்னும் அதிக நீளமாக இருக்க வேண்டும் என நாம் நினைப்போ மல்லவா ? அது அவசியமே இல்லையாம். இப்போது உள்ள 707 விமானங்கள் இறங்க வசதியாக உள்ள சாலைகளே 747 ஜெட்டுக் கும் போதும் என்கிறார் இங்குள்ள ஓர் அதிகாரி.

இந்த ராட்சத விமானத்தில் இன்ஜின்கள் அதிகமாக இருக்குமோ? அதுவும் இல்லை ! 707 விமானத்தில் உள்ளது போலவே, அதே போன்ற நான்கு இன்ஜின்கள்தாம். 707ல் உள்ளதைவிட இவை பெரியவை, அதிக சக்தி வாய்ந்தவை, நேர்த்தியானவை என்பதைத் தவிர இவற்றின் அமைப்பில் புதுமை ஏதும் இல்லை. 707ல் ஏற்கனவே பல்லாண்டுகளாகப் புழக்கத்தில் உள்ள இஞ்சின்களேயாதலால் இவற்றை மிகப் பத்திரமானவை என்று கருதுகிறார்கள். இவற்றின் சக்தி அதிகமான போதிலும் 707 இஞ்சின்களைவிட ஓசை குறைவாகவே இருக்கும்.

பெரிய இஞ்சினுதலால் எரிபொருள் அதிகமாகச் செலவாகும் என்று நினைத்தால் ஏமாந்து போவோம். 747 இஞ்சின் 707 இஞ்சினைவிட இருபத்தைந்து சதவீதம் குறைவாகவே எரிபொருளைப் பயன்படுத்து கிறது ! இதனால் இவ்விமானங்களைச் செலுத் தும் செலவு குறைகிறது. அதிகமான பிர யாணிகளை ஏற்றிச் செல்ல முடிவதால் அதே சமயத்தில் வருமானமும் அதிகரிக்கும் !

போயிங் 707 அதிகபட்சம் 189 பிர யாணிகளை ஏற்றிச் செல்லும் என்றால் 747 அதிகபட்சம் 490 பிரயாணிகளுக்கு இடம் தரும் ! எனினும், இந்த அளவுக்குப் பிர யாணிகள் வருவது அரிது என்பதால் 350 ஆசனங்களே ஜம்போ ஜெட்டில் போடப் படும். இன்றைய 707ல் சாதாரணமாக 130 ஆசனங்களே போடப்படுகின்றன. மற்ற இடத்தையெல்லாம் பிரயாணிகளின் பெட்டி களும், விமானம் மூலம் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் பல பொருள்களும் நிரப்பும்.

''நூற்றுக்கும் குறைவாகப் பிரயாணிகள் விமானம் ஏற வரும்போதே அவர்களது பெட்டிகளை ஏற்றவும் இறக்கவும் ஏகமாகக் காலதாமதமாகிறதே ! சென்னையிலிருந்து பம்பாய்க்கு ஒன்றரை மணி நேரத்தில் பிர யாணம் செய்தாலும் பெட்டிகளை முன்னிட்டு இரு விமான நிலையங்களிலுமாக ஒரு மணி நேரத்துக்கு மேல் காத்திருக்க நேருகிறதே '' என்று கேட்டேன்.

''747 ஜம்போ ஜெட்டில் இந்தப் பிரச்னையை நூதனமான முறையில் சமாளிக் கப் போகிறோம் '' என்று பதில் கிடைத்தது.

707 பிரயாணிகள் விமான நிலையத்துக்கு இப்போது சுமார் அரை மணி அல்லது முக்கால் மணி நேரம் முன்னதாக வரு கிறார்கள். 747 பிரயாணிகளும் — இவர் களின் எண்ணிக்கை மிக அதிகமானபோதி லும்கூட — இதே போல் வந்தால் போதும். ஒரு பித்தானை அழுத்த வேண்டியதுதான். விமானத்தில் அவர்கள் உட்கார வேண்டிய இடத்தை ஒரு 'கம்ப்யூட்டர்' இயந்திரம் ஒரு சீட்டில் அச்சடித்துத் தந்துவிடும். அவர்கள் எந்தப் பக்கமாகப் போய், எந்த 'கேட்' வழியாக விமானத்தை அடைய வேண்டும் என்பதும் அச்சீட்டில் குறிக்கப் பட்டிருக்கும். பிரயாணிகளுடைய பெட்டி களை விமானத்துக்கு எடுத்துச் சென்று தாறு மாருகக் குவிப்பது என்பது கிடையாது. நிலையக் கட்டடத்திலேயே பிரம்மாண்ட



மான கலங்களில் பெட்டிகள் அடுக்கப் படும். இந்தக் கலங்கள் நிரம்பியதும் விமானத்துக்கு எடுத்துச் சென்று அவற்றுக் குரிய இடத்தில் கச்சிதமாக வைத்துவிட லாம். இம்முறைகளால் கால தாமதமாவது தவிர்க்கப்படும்.

ஜம்போ ஜெட் எவ்வளவு பெரிது என்பது பற்றி இன்னமும் சந்தேகம் இருக்குமானுல் இதோ சில புள்ளி விவரங்கள்: 707 விமானம் உயரே கிளம்பும்போது அதன் எடை சராசரியில் 336,000 பவுண்டு. 747ன் எடையோ 710,000 பவுண்டு ! இதில்



- ☐ ஜம்போ ஜம்மென்று இப்படித்தான் பறக்கும். 16 சக்கரங்கள் இருப்பதைக் கவனிக்கவும்.
- ☐ போயிங் 707 மீது ஜம்போவை வைக்கமுடிந் தால் 707 முழுமையாக மறைந்து போகும்.
- ☐ ஜம்போ விமானத்தினுள்ளே மூன்று வரிசை களில் ஆசனங்கள் போடப்பட்டிருக்கும்.
- ☐ வளைவு கோடுகள் 707க்கும் 747க்கும் இடையில் கனபரிமாண வித்தியாசத்தைக் காட்டுகின்றன.
- ☐ விமான நிலையக் கட்டிடத்திலேயே பிரும்மாண்ட மான கலங்களில் பிரயாணிகளின் பெட்டிகள் அடுக்கப்படும்.

## அந்த உருவம்.....

ஒரு நாள் காலை தெருவில் இருபதடி நீளமுள்ள, வண்ண அலங்காரங்களோடு கூடிய உருவம் தரையில் படுத்த கோலத்தில் கிடப்பதையும் அதனைச் சுற்றி ஏராளமான சிறுவர்கள் 'கலிவரை'ச் சூழ்ந்து கொண்ட குள்ள மனிதர்களைப்போல் விளையாடுவதையும் கண்ட எனக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது.

உங்களால் நான் சொல்வதை நம்ப முடியவில்லை என்றால் 16ம் பக்கத்தைத் திருப்பிப் பாருங்கள்.



பிரயாணிகள், அவர்களின் பெட்டிகள் முதலானவை 120,000 பவுண்டு என்றால் இதைவிட எரிபொருளின் எடை அதிகம்! 200,000 பவுண்டு எரிபொருளை ஜம்போ தன் பிரயாணத்தின் தொடக்கத்தில் சுமக்கிறது! இதன் பைலட் (விமான ஓட்டி), துணை பைலட், நாவிகேட்டர் (செல்ல வேண்டிய திசை, தூரம் முதலியவற்றைக் கணிப்பவர்) முதலானோர், பல அடுக்கு மாடிக் கட்டடத்தில் இரண்டாவது மாடியில் இருப்பது போல் அவ்வளவு உயரத்தில் இருப்பார்கள். பிரயாணிகள் இன்று விமானங்களில் படிகளில் ஏறி நுழைவதைப் பார்க்கிறோம். 747ல் மிக அதிகமான படிகள் ஏற வேண்டி இருக்குமாதலால் பம்பாயில் பிரயாணிகளை ஒரு 'லிப்ட் டிரக்'கில் ஏற்றி விமானத்தின் வாசலை ஒட்டினாற்போல் உயர்த்தத் தீர்மானித்திருக்கிறார்கள். மிக முன்னேற்றம் அடைந்த மேனாட்டு விமான நிலையங்கள் சிலவற்றில் இரண்டாவது தளத்திலிருந்து நேரடியாக விமானத்துக்குள் நுழைந்துவிடலாம். சுருங்கி நீளும் நடைபாதைகள் இந்நிலையங்களில் உள்ளன. முதல் அல்லது இரண்டாவது தளத்திலிருந்து இந்நடைபாதைகள் விமானத்தை நோக்கி நீளும், பிரயாணிகள் விமானத்தினுள் ஏறியபிறகு சுருங்கிப் பின்வாங்கும்!

''போயிங் 707ஐ விட இரண்டு மடங்குக்கு மேல் கனமான 747 வரும்போது பாரிஸ், லண்டன், நியூயார்க், பம்பாய் போன்ற சர்வதேச விமான நிலையங்களில் இப்போதுள்ள ரன்வே சாலையே போதும் என்று நீங்கள் கூறுவது வியப்பளிக்கிறது'' என்றேன்.

நான் பேசிக் கொண்டிருந்த ஏர் இந்தியா உயர் அதிகாரிகளுள் ஒருவர் ஒரு படத்தை எடுத்துக் காட்டினார். ''747ல் நடுவே எத்தனை சக்கரங்கள் உள்ளன பார்த்தீர்களா? பதினாறு! 707ல் எட்டு சக்கரங்களே உண்டு. 747ன் அத்தனை எடையையும் தாங்கவும் அந்த எடையை ஒரே இடத்தில் குவிக்காமல் பரவலாகப் பகுத்து விடவுமே பதினாறு சக்கரங்கள் பொருத்தப்பட்டுள்ளன! இதோ இந்தப் படத்தைப் பாருங்கள். ஜம்போ விமானம் எவ்வளவு பெரிது என்று புரியும். ஒன்றன் மீது ஒன்றாக வைக்க முடியுமானால் ஜம்போ விமானம் 707ஐ முழுமையாக மறைத்துவிடும்!''

''ஜம்போ விமானத்தில் வருவாய் அதிகம்; எரிபொருள்களுக்கான செலவு குறைவு — ஆகவே, டிக்கெட்டுகளின் கிரயத்தில் சலுகை காட்டப்படுமா?''

''ஜம்போ விமானங்களைப் பொறுத்த வரை மாறாத விஷயங்கள் இரண்டு. ஒன்று, டிக்கெட்டின் கிரயம். மற்றொன்று, விமானத்தின் வேகம். ஏறத்தாழ 707 பறக்கும் அதே வேகத்தில்தான் ஜம்போவும் பறக்கும். டிக்கெட்டுகளின் கிரயத்தைப் பொறுத்த வரை விமான கம்பெனிகளுக்கிடையில் சர்வதேச ஒப்பந்தம் இருக்கிறது. மற்றவர்களின் சம்மதமின்றி ஒரு கம்பெனி கிரயத்தைக் குறைக்க முடியாது. எத்தனையோ இனங்களில் செலவுகள் அதிகரித்தும் சர்வதேச விமானக் கம்பெனிகள் கடந்த பல வருஷங்களாக டிக்கெட்டுகளின் கிரயத்தை உயர்த்தவில்லை என்பதையும் கவனிக்க வேண்டும். மற்றொன்று. ஜம்போ விமானத்துக்கு நாங்கள் செய்ய வேண்டிய முதலீடு மிகுதி. ஒரு விமானத்தின் விலை இருபது மிலியன் டாலர்கள்! எனினும், பிரயாணிகள் விமான உற்பத்தித் துறையின் சரித்திரத்திலேயே இதுவரை உலகம் கண்டிராத அளவுக்கு ஏராளமான ஆர்டர்கள் வந்து குவிந்திருக்கின்றன, போயிங் நிறுவனத்தினிடம். ஏர்—இந்தியா இரண்டு விமானங்களுக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறது.''

ஜம்போ விமானங்கள் இந்திய நகரங்களுக்கு மேல் இன்னும் ஓரிரு ஆண்டுகளில் ஜம்மென்று பறக்கும் என்பது உறுதி. ஏறத்தாழ மும்மடங்கு அதிகப்படியான பிரயாணிகளையும் அவர்களின் உடைமைகளையும் கையாள விமானக் கம்பெனிகள் திட்டமிட்டுப் பூர்வாங்க ஏற்பாடுகளைக் கவனித்து வருகின்றன. இதேபோல் பாரத அரசாங்கமும் விமான நிலையங்களை விஸ்தரிக்கவும் 'கஸ்டம்ஸ்' பரிசோதனையிலிருந்து பிரயாணிகளைத் துரிதமாக விடுவிக்கவும் தேவை



# ... அரவானே!

சிறுவர் சிறுமியர் சூழ்ந்து நிற்க விழுந்து கிடப்பது மண்ணாலான பெரிய அரவானின் உருவம் என்பதைப் பக்கத்திலிருந்த பெரியவர் கூற அறிந்து கொண்டேன். அருகில் திரௌபதி அம்மன் கோவிலில் பாரதம் படிக்கும்போது அரவான் பலி வரும் கட்டத்தில் இதுபோல மண்ணில் பெரிய அரவான் உருவம் செய்து அரவானுக்கு விழா கொண்டாடியுள்ளனர் என்றும் பெரியவர் கூறினார். அரவானை முழுவதுமாகக் காமிராவுக்குள் அடக்க முடியவில்லை. அத்தனை பெரிது!

**— புகைப்படம் - தகவல்: ஆர். எம்.**

---

யான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். இப்போதே விமான நிலையத்தினுள் நுழைய ஒரு ரூபாய் டிக்கெட்டை வைத்தும்கூட நெரிசலைத் தாள முடியவில்லை. விமான நிலைய வசதிகள் பெருக வில்லையானால், 'கஸ்டம்ஸி'ல் அயல் நாட்டவருக்குக் கால தாமதமானால் நமது அந்நியச் செலாவணி வருமானம் கணிசமாகப் பாதிக்கப்படும்.

விமானப் பயணத் துறையில் அடுத்த சகாப்தம், 'ஸூபர் ஸானிக்' எனப்படும் ஒலியைவிட வேகமாகச் செல்லும் விமானங்கள். இத்தகைய சிறிய போர் விமானங்கள் ஏராளமாய் இன்று உள்ளன. எனினும், பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் பெரிய 'ஸூபர்ஸானிக்' விமானம் சமீபத்தில்தான் முதன் முறையாக ருஷ்யர்களால் வெற்றிகரமாக வெள்ளோட்டம் விடப்பட்டது.

மிகுந்த பணச் செலவும் தீவிர ஆராய்ச்சியும் தேவைப்படும் என்பதால் அமெரிக்க அரசாங்கம், விமானத் தயாரிப்பாளர்களான போயிங் நிறுவனத்தின் ஸூபர்ஸானிக் துறைக்கு மட்டும் பொருளுதவி செய்கிறது.

இன்று பன்னிரண்டு செகண்டுக்கு ஒரு முறை ஒரு போயிங் விமானம் உலகின் ஏதோ ஒரு பகுதியில் விமான நிலையத்தில் மேலே ஏறவோ இறங்கவோ செய்கிறது என்றால் இந்த நிறுவனத்தின் பிராபல்யத்தை நன்கு உணரலாம்.

ஒலியைவிட வேகமாகச் செல்லும் பிரயாணிகள் விமானங்களில் மற்றொரு முயற்சி 'கன்கார்டே'. ஒத்துழைப்பு என்ற பொருள் கொண்ட இந்தப் பெயருக்கு ஏற்ப இது பிரெஞ்சு — பிரிட்டிஷ் அரசாங்கங்களின் கூட்டு முயற்சி.

எதிர்காலத்தில் ஸூபர்ஸானிக் விமானங்கள்தான் நீண்ட தூரப் பயணங்களில் பெரிதும் பயன்படும். ஏர்—இந்தியா ஸூபர் ஸானிக் விமானத்துக்கும் ஆர்டர் கொடுத்திருக்கிறது.

போகிற போக்கைப் பார்த்தால் இன்னும் சில பல ஆண்டுகளில் சந்திர மண்டலத்துக்குப் போக ராக்கெட்டுகளுக்குக்கூட ஏர்—இந்தியா ஆர்டர் கொடுக்க நேரிடலாம் என்றல்லவா தோன்றுகிறது! **— கி. ராஜேந்திரன்**

---



## கல்கி காரியாலயம்: விலாசம் மாறுதல்

**கல்கி காரியாலயம் இத்தனை நாட்களாக இருந்து வந்த இடத்திலேயேதான் 20, டாக்டர் குருசாமி முதலியார் ரோடில் தொடர்ந்து இருந்து வரும்.** எனினும், தபால் இலாக்காவினர் கல்கி காரியாலயம் இருந்து வரும் பகுதியை இனி சேத்துப்பட்டு எனக் குறிப்பிட முடிவு செய்திருக்கின்றனர். ஆகவே கடிதம் எழுதுவோரும், கதை, கட்டுரைகள், துணுக்குகள் அனுப்புவோரும், **ஆசிரியர் கல்கி, சேத்துப்பட்டு, சென்னை - 31** என்று விலாசம் எழுதுமாறு கோருகிறோம்.

**மானேஜர், கல்கி காரியாலயம்**

# காலகேட் மூலம், வாய்நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

ஏனெனில்: ஒரே தேய்ப்பில் காலகேட் டென்டல்க்ரீம் வாய் நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சத விகிதம் வரை அகற்றுகிறது.

காலகேட் 10க்கு 7 பேர்களில் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும் உணவு உட்கொண்டவுடனேயே காலகேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. காலகேட் மட்டுமே இந்த நிரூபணம் பெற்றது!

அதன் வித்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. காலகேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள்தவறாது பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் காலகேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்.




தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே... மற்றெந்த பற்பசையையும் விட உலகிலே அதிக மக்கள் காலகேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.

©C.G.36 TAM

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் ஐம்பத்தாறு

## அந்தப்புர சம்பவம்

பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் காஞ்சியில் மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி அரசு புரிந்த காலத்தில் நாடெங்கும் மகாபாரதக் கதையைப் படிப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார். பௌத்த சமண மதங்களின் பிரசாரத்தினால் மக்கள் சாதுக்களாகப் போயிருந்த தமிழ் நாட்டில் மீண்டும் வீர உணர்ச்சி தளிர்த்துப் பரவ வேண்டும் என்பதற்காக அந்த ஏற்பாடு செய்தார். பாரதக் கதை படிப்பதற்கென்றே பல ஊர்களில் பாரத மண்டபங்கள் கட்டினார். அவர் தொடங்கிய ஏற்பாடு இன்னமும் தொண்டை மண்டலத்தில் தடைப்படாமல் நடந்து வந்தது. இரவில் மக்கள் மண்டபங்களிலோ திறந்த வெளியிலோ கூடிப் பாரதக் கதை கேட்டார்கள். பாரதப் பெருங் கதையையும் பாரதத்திலுள்ள கிளைக் கதைகளையும் பாட்டிலும் பண்ணிலும் வசனத்திலும் அமைத்து வீராவேசத்துடன் சொல்லக் கூடிய பாடினிகள் பலர் தோன்றினார்கள்.

அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை சென்றிருந்த போது மணிபுரியை அடுத்த வனத்தில் மணிபுரி ராஜகுமாரியான சித்ராங்கியைக் கண்டான். இருவரும் காதல் கொண்டார்கள். சித்ராங்கிக்கு அரவான் என்னும் அருமைப் புதல்வன் பிறந்தான். மலைநாட்டுக் கோமகளுக்கு அர்ச்சுனனால் பிறந்த மகனுதலால் அரவான் மகா வீரனுயிருந்தான். பாரத யுத்தம் நடக்கப் போகிறது என்று அறிந்து அவனும் பாண்டவர் படையில் சேர வந்து சேர்ந்தான். போர் தொடங்குவதற்கு முன்னால் சகல இலட்சணங்களும் பொருந்திய மகாவீரனுன இளைஞன் ஒருவனைக் களபலி கொடுக்க வேண்டும் என்ற பேச்சு வந்த போது, ''இதோ நான் இருக்கிறேன் ; என்னைக் களபலியாகக் கொடுங்கள்!'' என்று அரவான் முன் வந்தான். அவனைக் காட்டிலும் சிறந்த வீரன் யாரும் பாண்டவர் பக்கத்தில் இல்லாதபடியால், தானுக முன்வந்த அரவானையே பலி கொடுக்க வேண்டியதாயிற்று.

தன்னுடைய கட்சியின் வெற்றிக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்த வீர அரவானின் கதை தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. துரோபதை அம்மனுக்குக் கோயில் கட்டிய இடங்களிலெல்லாம் பக்கத்தில் அரவானுக்குக் கோயில் கட்டித் திருவிழா நடத்தினார்கள்.

மாமல்லபுரத்து ஐந்து ரதங்களின் அருகில் அன்றிரவு நடந்த அரவான் கதை முடிவடைந்துவிட்டதாகத் தோன்றியது. ''மூன்று உலகமும் உடைய சுந்தர சோழ சக்கரவர்த்தி வாழ்க!'' ''கோப்பர கேசரி ஆதித்த கரிகாலர் வாழ்க!'' என்று பல குரல்களில் எழுந்த கோஷங்கள் காற்றிலே மிதந்து வந்தன. கதை கேட்டுக் கொண்டிருந்தவர்கள் எழுந்து கலையத் தொடங்கினார்கள்.

''கதை முடிந்துவிட்டது. மலையமான் சிறிது நேரத்தில் திரும்பி வந்துவிடுவார் !'' என்றான் கரிகாலன்.

''அரவான் கதை முடிந்தது; ஆனால் தாங்கள் சொல்லி வந்த கதை இன்னும் முடியவில்லையே ?'' என்றான் பார்த்திபன்.

''இந்தப் பிராயத்தில் மலையமானின் மனோ திடத்தைப் பார் ! இன்னமும் நடுநிசி வரையில் கண் விழித்துக் கதை கேட்கப் போகிறார், பார் !'' என்றான் கரிகாலன்.

''தொண்டு கிழமாகிற வரையில் உயிரோடிருப்பது அவ்வளவு அதிசய மான காரியமா! ஊரில் எத்தனையோ கிழவர்கள் இருக்கிறார்கள். இரவில் தூக்கம் பிடியாமல் கதை கேட்கப் போகிறார்கள்!....''

''திருக்கோவலூர் மிலாடுடையாரை அப்படிச் சாதாரண கிழவர்களோடு சேர்த்து விடுகிறாயா? எத்தனை போர்க் களங்களைப் பார்த்தவர் அவர்? மலைய மானின் வயதில் நாம் உயிரோடிருப் போமா என்பதே சந்தேகம். இருந்தா லும், அவரைப் போல் திடமாயிருக்க மாட்டோம்.''

''அரசே! பழைய காலத்து மனி தர்கள் திடமாயிருப்பதற்குக் கார ணம் இருக்கிறது....''

''அது என்ன காரணம்?''

''அவர்கள் பெண்களின் மோக வலையில் சிக்குவதில்லை. கேவலம் ஓர் அர்ச்சகரின் மகளிடம் மனத்தைப் பறிகொடுத்து விட்டு அவளை நினைத்து உருகிக் கொண்டிருப்பதில்லை. அப்படி எந்தப் பெண்ணிடமாவது மனம் சென் றால் அவள் கூந்தலைப் பற்றி இழுத் துக் கொண்டு வந்து அந்தப்புரத்தில் சேர்த்து விட்டு, வேறு வேலையைப் பார்ப்பார்கள்!....''

''பார்த்திபா! நந்தினி உண்மையில் அர்ச்சகர் வீட்டுப் பெண் அல்ல; அவளுடைய பிறப்பைக் குறித்து ஏதோ ஓர் இரகசியம் இருக்க வேண்டும்!....''

''நந்தினி யாருடைய மகளாயிருந் தால் என்ன? அர்ச்சகர் மகளாயிருந் தால் என்ன? அரசர் மகளாயிருந்தால் என்ன? அல்லது அநாதைப் பெண்ணா யிருந்தால்தான் என்ன? அந்த இன் னொரு கிழவர் பெரிய பழுவேட்டரை யரைப் பாருங்கள்! எங்கேயோ வழி யில் அவளைப் பார்த்தார்; உடனே இழுத்துக் கொண்டு வந்து எட்டோடு ஒன்பது என்று அந்தப்புரத்தில் அடைத்தார்......''

''நண்ப! அதை நினைத்தால் எனக்கு அதிசயமாகத்தான் இருக்கிறது!....''

''எதை நினைத்தால்? அந்தக் கிழவர் எப்படி இவளுடைய வலையில் சிக்கி னார் என்பதைத்தானே?''

''இல்லை. இல்லை! ஒரு காலத்தில் என்னைக் காதலித்ததாகச் சொன்ன வள், பிறகு வீர பாண்டியனைக் காத லித்து அவன் உயிரைக் காப்பாற்ற முயன்றவள். இந்தத் தொண்டு கிழவரை மணந்து கொள்ள எவ்வாறு சம்மதித்தாள்? அதை நினைத்தால் தான் அதிசயமா யிருக்கிறது.''

''எனக்கு அது ஒன்றும் அதிசய மாகத் தோன்றவில்லை, ஐயா! தங்க ளுடைய செயலை நினைத்தால்தான் அதிசயமா யிருக்கிறது! சோழ குலத் தின் பரம வைரியான பாண்டியன்,— தோல்வியடைந்ததும் ஓடி ஒளியும் கோழையினும் கோழையானாலும் 'வீர பாண்டியன்' என்று பெயர் சூட்டிக் கொண்டவன், — அவனுக்கு அடைக் கலம் கொடுத்து உயிர்ப் பிச்சை கேட்ட வளைத் தாங்கள் சும்மா விட்டுவிட்டு வந்தீர்களே? அதை எண்ணினால்தான் அதிசயத்திலும் அதிசயமாயிருக்கிறது. ஒன்று அவளையும் அங்கேயே கத்தி யால் வெட்டிப் போட்டிருக்க வேண் டும்; அதற்கு விருப்பமில்லாவிட்டால் காலையும் கையையும் சேர்த்துக் கட்டிச் சிறைப்படுத்தி வந்திருக்க வேண்டும்! இந்த இரண்டில் ஒன்று செய்யாமல் சும்மா விட்டு விட்டு வந்தீர்களே!.... இப்போது எனக்குக்கூட ஞாபகம் வருகிறது. அரசே! அந்தக் குடிசையின் வாசலில் தாங்கள் வீர பாண்டியன் உடலைத் தூக்கிக் கொண்டு வந்து போட்டீர்கள். நாங்கள் அனைவரும் வெறி கொண்டவர்களைப் போல் வெற்றி முழக்கம் செய்தோம். அதற்கு நடுவில் குடிசைக்குள்ளேயிருந்து விம்மல் சத்தம் ஒன்று வந்தது. 'அது யார்?' என்று நான் கேட்டேன். 'யாரோ அர்ச்சகர் குடும்பத்துப் பெண்கள். ஏற்கெனவே அவர்கள் பீதியடைந்து கதிகலங்கிப் போயிருக் கிறார்கள். நீங்கள் யாரும் உள்ளே போக வேண்டாம்!' என்றீர்கள். வெற்றி வெறியில் இருந்த நாங்களும் அதைப் பொருட்படுத்தவில்லை. உடனே எல்லாருமாக வீர பாண்டிய னுடைய தலையை எடுத்துக் கொண்டு கிளம்பினோம். தாங்களும் எங்களுடன் வந்தீர்கள். ஆனால் எங்கள் களிப்பி லும் கொண்டாட்டத்திலும் அவ்வள வாகத் தாங்கள் கலந்து கொள்ள வில்லை. உற்சாகம் குன்றிக் காணப் பட்டீர்கள். நான் காரணம் கேட் டேன். தாங்கள் ஏதோ சமா தானம் சொன்னீர்கள். தங்களுக்கு ஏதேனும் பலமான காயம் பட்டிருக் குமோ என்று நான் சந்தேகித்துக் கேட்டதுகூட எனக்கு இப்போது ஞாபகம் வருகிறது!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''என் உடம்பில் ஒன்றும் காயம் படவில்லை, பார்த்திபா! உள்ளத்தில் என்றும் ஆறாத காயம் பட்டுவிட்டது. வீர பாண்டியன் படுத்துக் கிடந்த கட்டிலுக்கு முன்னால் வந்து அவள் கைகூப்பி என்னிடம் உயிர்ப் பிச்சை கேட்ட காட்சி என் மனத்தை விட்டு அகலவில்லை. 'ஐயோ! அவள் கேட்ட

தைக் கொடுக்காமல் போய் விட்டோமே!' என்று என் மனம் பதை பதைத்தது. என் உயிரைக் கொடுப்பதின் மூலம் வீர பாண்டியனை உயிர்ப்பித்து அவளிடம் சேர்க்க முடியுமானால் அப்படியே நான் செய்திருப்பேன். இது முடியாதபடியால் என்னை நானே நொந்து கொண்டேன். என்னை நானே சபித்துக் கொண்டேன். பார்த்திபா! நம்முடைய வல்லமைகளைப் பற்றி நாம் எவ்வளவோ நினைத்துக் கொள்கிறோம். நம்மால் ஆகாத காரியம் ஒன்றுமே இல்லை என்று கருதி இறுமாப்பு அடைகிறோம். 'அரசர்களிடம் மகா விஷ்ணுவின் அம்சம் இருக்கிறது' என்று ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்திருப்பதைக் கேட்டுவிட்டு, அதைக்கூட உண்மை யென்று நம்பி விடுகிறோம். ஆனால், உடலை விட்டுப் பிரிந்து போன ஆவியைத் திரும்பக் கொண்டு வரும் வல்லமை நமக்கு உண்டா? அரச குலத்தில் பிறந்த யாருக்காவது இருந்திருக்கிறதா? நம்மால் உயிரை வாங்கத்தான் முடியும்; ஆனால் உயிரைக் கொடுக்கும் சக்தி மனிதர்களாய்ப் பிறந்த யாருக்கும் இல்லை!....''

''அப்படி இல்லாமலிருப்பதே மிக நல்லது. அந்த வல்லமை தங்களுக்கு இருந்திருந்தால், எவ்வளவு தவறான காரியம் நடந்து போயிருக்கும்? பாண்டியனுக்கு மறுபடியும் உயிரைக் கொடுத்திருப்பீர்கள். அவன் மீண்டும் எங்கேயாவது மலைப் பொந்தில் போய் ஒளிந்திருப்பான். பாண்டிய நாட்டு யுத்தம் ஒருவேளை இன்னும் நடந்து கொண்டிருக்கும்! இவ்வளவும் ஒரு பெண்ணின் பொய்க் கண்ணீருக்காக!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''பல்லவா! நீ பெண் குலத்தை வெறுக்கும் துர்ப்பாக்கியசாலி! காதல் என்றால் இன்னதென்று நீ அறிய மாட்டாய்! அதனாலேயே இவ்விதம் பேசுகிறாய்!''

''ஆம்; நான் எந்தப் பெண்ணுடைய கண் வலையிலும் சிக்கியதில்லைதான். ஆனால் தங்கள் அந்தரங்கத்துக்குரிய நண்பன் வந்தியத்தேவன் மஞ்சள் பூசிய முகம் எதைக் கண்டாலும் மயங்கிப் பல்லை இளிப்பவன். ஆகையினாலேயே அவனைத் தங்களுக்கு என்னைக் காட்டிலும் பிடித்திருக்கிறது. இல்லையா, அரசே!''

''ஆகா! கடைசியில் வந்தியத்தேவனிடம் வந்துவிட்டாய் அல்லவா? ஏது, இத்தனை நேரம் அவனை மறந்துவிட்டாயே என்று பார்த்தேன்!''

''ஆம், அவனைப் பற்றி உண்மையைச் சொன்னால் தங்களுக்குக் கசப்பாகவே இருக்கும். அந்தப் பேச்சை விட்டு விடுகிறேன். பிறகு என்ன நடந்தது, அரசே! நந்தினியை மறுபடியும் தாங்கள் சந்திக்கவே இல்லையா? வீர பாண்டியனுக்காக உருகினவள் எப்படிக் கிழவர் பழுவேட்டரையரை மணந்தாள் என்று அவளைக் கேட்கவே இல்லையா?''

''வீர பாண்டியனைக் கொன்ற இரவில் வெற்றிக் கோலாகலங்களுக்குப் பிறகு நீங்கள் எல்லாரும் பாசறைகளில் படுத்துத் தூங்கினீர்கள். எனக்கோ தூக்கம் வரவேயில்லை. அவளை மறுபடியும் பார்க்க வேண்டும் என்று என் உடம்பிலுள்ள ஒவ்வொரு நரம்பும் துடித்தது. அவளைப் பார்த்து ஏதேனும் சமாதானம் சொல்ல வேண்டும், மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று விரும்பினேன். மற்றொரு சமயம் அவள் பேரில் எனக்குப் பொங்கி எழுந்த கோபத்தைக் கொட்ட வேண்டும் என்று ஆவேசம் உண்டாயிற்று. எப்படியாவது அவளைப் பார்த்தாலொழிய மன நிம்மதி ஏற்படாது, சோழ நாட்டுக்குத் திரும்பிப் போக முடியாது என்று தோன்றியது. ஆகையால், நள்ளிரவில் நீங்கள் யாரும் அறியாமல் பாசறையிலிருந்து புறப்பட்டுக் குதிரை ஏறிச் சென்றேன். வைகை நதியின் நடுவிலிருந்த தீவை அடைந்தேன். மனம் பதை பதைக்க, உடம்பெல்லாம் நடுங்க, கால்கள் தள்ளாட, குதிரையிலிருந்து இறங்கி, மெள்ள நடந்து பெருமான் கோயிலுக்கு அருகில் சென்றேன். அங்கேயிருந்த குடிசைகள் எல்லாம் எரிந்து சாம்பராகிக் கிடப்பதைக் கண்டேன். ஒரு வயோதிகரும் வயோதிக ஸ்திரீயும் எரிந்த குடிசைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து புலம்பிக் கொண்டிருந்தார்கள். இன்னும் கொஞ்சம் நெருங்கிச் சென்று பார்த்ததில் அவர்கள்தான் முன்னொரு தடவை நந்தினியைப் பழையாறை அரண்மனைத் தோட்டத்துக்கு அழைத்து வந்தவர்கள் என்று தெரிந்தது. என்னைப் பார்த்ததும் அவர்களுடைய துக்கமும் பீதியும் பன்மடங்கு ஆயின. முதலில் அவர்களால் எதுவுமே பேச முடியவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அவர்களைத் தைரியப்படுத்தி விசாரித்தேன். ஆற்றுக்கு அக்கரையில் இருந்த கிராமத்தில் அவர்களுடைய மூத்த குமாரி இருந்தாளாம். அவளுக்குப் பிரசவ காலம் என்று அறிந்து அவளைப் பார்த்து வரப் போயிருந்தார்களாம். நந்தினி

அவர்களுடன் வர மறுத்துவிட்டாளாம். மனம் போனபடி நடந்து பழக்கமுள்ள அந்தப் பிடிவாதக்காரப் பெண்ணை ஒன்றும் செய்ய முடியாமல் அவர்கள் மட்டும் போய் விட்டுத் திரும்பி வந்தார்களாம். வழியில் யாரோ சில முரடர்கள் ஒரு பெண்ணைக் காலையும் கையையும் கட்டி எரிந்து கொண்டிருந்த சிதையில் பலவந்தமாகப் போட முயன்றதை அவர்கள் பார்த்தார்களாம். யுத்த காலத்தில் இத்தகைய விபரீதங்கள் நடப்பது இயல்பு என்று எண்ணி அவர்களுக்கு அருகில் போகவும் பயந்து கொண்டு விரைவாக இங்கே வந்து சேர்ந்தார்களாம். வந்து பார்த்தால் குடிசைகள் பற்றி எரிந்து கிடந்தனவாம். நந்தினியையும் காணவில்லையாம். இந்த விவரத்தைச் சொல்லி விட்டு அர்ச்சகரும் அவர் மனைவியும், 'இளவரசே! எங்கள் மகள் எங்கே? எங்கள் அருமைக் குமாரி எங்கே?' என்று கதறினார்கள். அவர்கள் நந்தினியின் உண்மைப் பெற்றோர்கள் அல்லவென்று எனக்கு முன்னமே தெரிந்திருந்தது. இப்போது அது சர்வ நிச்சயமாயிற்று. உண்மையில் பெற்றவர்களாயிருந்தால் இப்படித் தனியாக விட்டுவிட்டுப் போயிருப்பார்களா? ஆகையால் அவர்கள் பேரில் எனக்கு இரக்கமோ, அநுதாபமோ உண்டாகவில்லை. நந்தினியின் கதியைப் பற்றிச் சொல்ல முடியாத துக்கம் ஏற்பட்டு நெஞ்சை அடைத்தது. 'உங்கள் மகள் எரிந்த சிதையைத் தேடிப் போய் நீங்களும் எரிந்து செத்துப் போங்கள்!' என்று வயிற்றெரிச்சல் தீர அவர்களைச் சபித்து விட்டுத் திரும்பிப் பொழுது விடிவதற்குள் பாசறைக்கு வந்து சேர்ந்தேன். நீங்கள் எல்லாரும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். நான் போனது, திரும்பி வந்தது ஒன்றும் உங்களில் யாருக்கும் தெரியாது....''

''ஆம்; இளவரசே! தெரியாது தான். அதற்குப் பிறகும் இத்தனை காலமாக இதையெல்லாம் தங்கள் மனத்திலேயே வைத்துக் கொண்டிருந்ததை நினைத்தால் வியப்பாயிருக்கிறது. சிநேக தர்மத்துக்கு இவ்வளவு மாறாகத் தாங்கள் நடந்து கொள்வீர்கள் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. தங்களுடைய நிலையில் நான் இருந்திருந்தால் தங்களிடம் சொல்லாமல் இருந்திருக்க மாட்டேன்'' என்றான் பார்த்திபன்.

''ஆனால், நீ என்னுடைய நிலையில் இல்லையே, பார்த்திபா! இந்த உலகில் யாருமே என்னுடைய நிலையில் இருந்திருக்க முடியாது. என் நிலையில் இருந்திருந்தால், நீ எப்படி நடந்து கொண்டிருப்பாய் என்று யார் சொல்ல முடியும்?'' என்றான் கரிகாலன்.

''அரசே! நடந்து போனதைப் பற்றி இப்போது நமக்குள் விவாதம் வேண்டாம். அப்புறம் என்ன நடந்தது? நந்தினியைப் பிறகு எப்போது பார்த்தீர்கள்? பழுவூர் இளையராணி ஆன பிறகா? அதற்கு முன்னமேயா?''

''அதற்கு முன்னால் நான் பார்த்திருந்தால், அவள் பழுவூர் ராணி ஆகியிருக்க மாட்டாள். பழுவேட்டரையரின் கலியாணம் நடந்தபோது நானும் நீயும் ஊரில் இல்லை. அந்தச் செய்தி வந்த போது நாம் இருவரும் அருவருப்போடு பேசிக் கொண்டது உனக்கு நினைவில் இருக்குமே? அதற்குச் சில நாளைக்குப் பிறகு எனக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் நடந்தது. அடுத்த பட்டம் யாருக்கு என்பதைப் பற்றிச் சந்தேகம் எதுவும் இருக்கக் கூடாது என்றுதான் என் தந்தையும் பாட்டியும் மற்றப் பெரியோர்களும் சேர்ந்து அந்த ஏற்பாடு செய்தார்கள். மதுராந்தகனுக்கு யாராவது துர்ப்போதனை செய்து தூபம் போட்டு விடப் போகிறார்கள் என்ற பயம் அவர்களுக்கு இருந்ததோ என்னமோ? இளவரசுப் பட்டம் கட்டியதோடு, பரகேசரிப் பட்டம் அளித்து, என் பெயராலேயே கல்வெட்டு சாஸனம் ஏற்படுத்தும் உரிமையையும் அளித்தார்கள். 'இனி இச்சோழ சாம்ராஜ்யத்தை ஆளும் பொறுப்பு முழுதும் உனக்கே' என்று என் அருமைத் தந்தை மனதார வாயாரக் கூறினார். அதை நாட்டார், நகரத்தார், அமைச்சர்கள், தளபதிகள் அனைவரும் ஒப்புக் கொண்டு ஜயகோஷம் செய்தார்கள். இந்தக் கோலாகலத்தில் நான் நந்தினியை அடியோடு மறந்திருந்தேன். ஆனால் பட்டாபிஷேகச் சடங்கு நடந்து முடிந்த சிறிது நேரத்துக்கெல்லாம் அவளை நான் என்றும் மறக்க முடியாத சம்பவம் நேர்ந்தது. பழைமையான சோழர் குலத்து மணிமகுடத்துடன் என்னைச் சக்கரவர்த்தி அந்தப்புரத்துக்கு அழைத்துப் போனார். என் அன்னையிடமும் பாட்டியிடமும் மற்ற அந்தப்புர மாதரிடமும் ஆசி பெறுவதற்காக அழைத்துப் போனார். என்னைத் தொடர்ந்து என் சகோதரனும் முதன் மந்திரியும் பழுவேட்டரையர்களும் வந்தார்கள். அந்தப்புரத்தில் வயது மிகுந்த தாய்மார்களோடு, என் தங்கையும் அவளுடைய தோழிகளும் மற்றும் பல இள மங்கைய

ரும் கூட்டமாக நின்ஞர்கள். எல்லாரும் ஆடை ஆபரணங்களினல் ஜொலித்துக் கொண்டு மகிழ்ச்சியினல் மலர்ந்த முகங்களோடு எங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு நின்ஞர்கள். ஆனல் அத்தனை முகங்களிலும் ஒரே ஒரு முகந்தான் என் கண்ணுக்குத் தெரிந்தது. அது நந்தினியின் முகந்தான். எரிந்து சாம்பராய்ப் போனுள் என்று நான் எண்ணியிருந்த என் இதய தேவதைதான் அவள்! அந்த அரண்மனை அந்தப்புரத்துக்குள் அவள் எப்படி வந்தாள்? அவ்வளவு பிரமாதமான ஆடை அலங்காரங்களுடன் ராணிகளுக்குள் நடுநாயகமான மகாராணியாக அங்கே எப்படி நிற்கிருள்? அவள் முகத்தில்தான் என்ன மந்தகாஸம்? அவளுடைய சௌந்தரியம் முன்னைக் காட்டிலும் பத்து மடங்கு அதிகமாகியிருப்பது எப்படி? சில கண நேரத்திற்குள் என் உள்ளம் பற்பல ஆகாசக் கோட்டைகளைக் கட்டி விட்டது! சோழ சாம்ராஜ்யத்துக்கு உரியவன் என்று நான் முடிசூட்டிக் கொண்ட அன்றைய தினம் உண்மையிலேயே என் வாழ்நாளில் அதிர்ஷ்ட தினம் ஆகப் போகிறதா? என் உள்ளத்தைக் கவர்ந்த ராணியை என் பட்டமகிஷியாகவும் அடையப் போகிறேனு? ஏதோ ஓர் அதிசயமான இந்திர ஜாலத்தினல், மந்திர சக்தியினல், அவ்விதம் நடக்கப் போகிறதா?.... இப்படி நான் எண்ணிக் கொண்டிருக்கையில் என் அன்னை வானமாதேவி முன்னல் இரண்டு அடி நடந்து வந்து, 'குழந்தாய்!' என்று சொல்லி என்னை ஆசிர்வதித்து உச்சி முகந்தாள்! அதே சமயத்தில் யாரும் எதிர்பாராத அச் சம்பவம் நடந்து விட்டது. என் தந்தை, 'ஆ!' என்று ஒரு கூச்சலிட்டு விட்டுத் திடீரென்று தரையில் சுருண்டு விழுந்து மூர்ச்சை அடைந்தார். உடனே, அவ்விடத்தில் பெருங் குழப்பமாகி விட்டது. நானும் மற்ற எல்லாரும் சக்கரவர்த்தியைத் தூக்கி உட்கார வைத்து மூர்ச்சை தெளிவிப்பதில் கவனம் செலுத்தினேம். என் அன்னையையும், பாட்டி செம்பியன் மாதேவியையுந் தவிர மற்ற மாதர் அனைவரும் உள்ளே சென்று விட்டார்கள். தந்தைக்குச் சீக்கிரத்தில் மூர்ச்சை தெளிந்துவிட்டது. என் சகோதரி குந்தவையைத் தனி இடத்துக்கு நான் அழைத்துச் சென்று 'நந்தினி அங்கே எப்படி வந்தாள்?' என்று கேட்டேன். நந்தினி பெரிய பழுவேட்டரையரை மணந்து கொண்டு இப்போது பழுவூர் இளைய ராணியாக விளங்குகிருள் என்று குந்தவை சொன்னுள். என் நெஞ்சில் கூரிய ஈட்டி பாய்ந்தது. நண்பா! போர்க்களங்களில் எத்தனையோ முறை நான் காயம்பட்டதுண்டு. ஆனல், 'நந்தினிதான் பழுவூர்



இளையராணி' என்று குந்தவை கூறிய தனால் என் நெஞ்சில் ஏற்பட்ட காயம் இன்னும் ஆறவில்லை!'' என்று ஆதித்த கரிகாலன் கூறித் தன்னுடைய நெஞ்சை அமுக்கிப் பிடித்துக் கொண்டான். நெஞ்சில் அவனுக்கு இன்னும் வலி இருந்து வந்தது என்பது நன்ருய்த் தெரிந்தது.

## அத்தியாயம் ஐம்பத்தேழு

# மாய மோகினி

ஆரம்பத்திலிருந்து அவ்வளவாக அநுதாபம் இல்லாமலே கரிகாலன் கதையைக் கேட்டுக் கொண்டு வந்த பார்த்திபனுக்கும் இப்போது நெஞ்சு உருகி விட்டது. தன்னுடைய கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

''அரசே! ஒரு பெண்ணின் பேரில் ஏற்பட்ட காதலினால் இப்படிப்பட்ட துன்பம் உண்டாகக் கூடும் என்று நான் கனவிலும் கருதியதில்லை! இளவரசுப் பட்டாபிஷேகம் நடந்த அன்று இப்படி ஓர் அநுபவம் தங்களுக்கு நேர்ந்தது என்று எங்களுக்கெல்லாம் தெரியாது. ஆகையால், தாங்கள் மனச் சோர்வுடன் இருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டோம். என்னவெல்லாமோ பரிகாசப் பேச்சுக்கள் பேசித் தங்களைச் சந்தோஷப்படுத்தப் பார்த்தோம். அதெல்லாம் இப்போது எனக்கு நினைவு வருகிறது!'' என்ருன்.

''ஆம்; நீங்கள் பரிகாசப் பேச்சுப் பேசினீர்கள். என்னை உற்சாகப்படுத்தப் பார்த்தீர்கள். என்னுடைய ஆட்சிக் காலத்தில் நான் செய்யப் போகும் மகத்தான காரியங்களைப் பற்றிப் பேசினீர்கள். இலங்கையிலிருந்து இமயம் வரையில் சோழ சாம்ராஜ்யத்தை அன்றைய தினமே விஸ்தரித்து விட்டீர்கள்! இன்னும், கடல் கடந்து சென்றும் இராஜ்யங்களைக் கைப்பற்றினீர்கள். அந்தப் பேச்செல்லாம் எனக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது. அவ்வளவும் எனக்கு எவ்வளவு துன்பமளித்தது என்பதும் நினைவிருக்கிறது. பிறகு ஒரு நாள் என்னை நந்தினி பழுவூர் அரண்மனைக்குக் கூப்பிட்டு அனுப்பினுள். போகலாமா, வேண்டாமா என்று என் மனத்



தில் ஒரு போராட்டம் எழுந்தது. கடைசியில், போவதென்று முடிவு செய்தேன். பல விஷயங்களில் எனக்குத் தோன்றியிருந்த ஐயங்களை அவளைக் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினேன். அவளுடைய பிறப்பின் உண்மையைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். அந்தப்புரத்தில் என் தந்தை அன்று மூர்ச்சை அடைந்து விழுந்ததற்கும் அங்கே நந்தினியை அவர் அகஸ்மாத்தாகக் கண்டதற்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்குமோ என்ற சந்தேகங்கூட என் மனத்தில் தோன்றியிருந்தது. அன்றைய தினம் சக்கரவர்த்திக்கு விரைவில் மூர்ச்சை தெளிந்து விட்டதாயினும் மறுபடியும் அவர் பழைய ஆரோக்கியத்தை அடையவேயில்லை என்பது உனக்கு நினைவிருக்கும். நந்தினியுடன் பேசுவதிலிருந்து எனக்கு அதுவரை விளங்காத மர்மம் ஏதேனும் வெளியாகலாம் என்று எண்ணினேன். இதையெல்லாம் ஒரு வியாஜமாக வைத்துக் கொண்டேனே தவிர, உண்மையில் நான் சென்ற காரணம், அவளிடமிருந்த காந்த சக்திதான். வேறு காரணங்களைக் கற்பித்து என்னை நானே ஏமாற்றிக் கொண்டு சென்றேன். பழுவேட்டரையர் ஊரில் இல்லை. அவருடைய அரண்மனையில் என்னைத் தடுப்பாரும் இல்லை; எனக்கும் நந்தினிக்கும் ஏற்பட்டிருந்த பழைய சிநேகத்தைப் பற்றி அங்கே அறிந்தவர்களும் இல்லை. இளவரசுப் பட்டம் கட்டிக் கொண்ட ராஜகுமாரன் பழுவூர் அரண்மனை ராணிமார்களிடம் ஆசி பெறுவதற்காக வருவதாகவே நினைத்தார்கள். அரண்மனைத் தோட்டத்தில் உள்ள லதா மண்டபத்தில் நந்தினியை நான் சந்தித்தேன். பார்த்திபா! கடற் பிரயாணம் செய்வோரின் அநுபவங்களை நீ கேட்டிருக்கிறாய் அல்லவா? சமுத்திரத்தில் சில இடங்களில் அளவில்லாத சக்தியுடனும் வேகத்துடனும் கூடிய நீரோட்டங்கள் இருக்குமாம். அந்த நீரோட்டங்களில் கப்பல்கள் அகப்பட்டுக் கொண்டால் சிறிது நேரத்தில் சுக்குச் சுக்காகப் போய் விடுமாம். நந்தினியின் முன்னிலையில் நான் இருந்த போது, கடல் நீரோட்டத்தில் அகப்பட்டுக் கொண்ட கப்பலின் கதியை அடைந்தேன். என் உடல், உள்ளம், இருதயம்,—எல்லாம் ஆயிரம் சுக்கல்களாகி விட்டன. என்னுடைய நாவிலே வந்த வார்த்தைகள் எனக்கே வியப்பை அளித்தன. 'ஐயோ! இது என்ன இப்படிப் பேசுகிறோம்?' என்று நெஞ்சில் ஒரு பக்கம் தோன்றிக் கொண்டிருந்தபோது, வாய் ஏதேதோ உளறிக் கொண்டிருந்தது. எனக்கு இளவரசுப் பட்டம் சூட்டியதைப் பற்றி நந்தினி தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்.

'எனக்கு அதில் ஒன்றும் மகிழ்ச்சி இல்லை!' என்றேன்.

'ஏன்?' என்று கேட்டாள்.

'இது என்ன கேள்வி கேட்கிறாய்? எனக்கு எவ்வாறு மகிழ்ச்சி இருக்கும்? நீதான் இப்படி அநியாயம் செய்து விட்டாயே?' என்றேன். நான் சொல்வது அவளுக்கு விளங்காதது போல நடித்தாள். இவ்விதம் பேச்சு வளர்ந்து கொண்டே போயிற்று. என் அன்பை நிராகரித்தது பற்றியும், வீரபாண்டியனைக் காதலித்தது பற்றியும் அவள் மீது நான் குற்றம் சாட்டினேன். கிழவர் பழுவேட்டரையரை மணந்தது பற்றியும் குத்தலாகப் பேசினேன்.

'இளவரசே! முதலில் தாங்கள் என் காதலைக் கொன்றீர்கள்; பிறகு என்னைக் காதலித்தவனை-என் கண் முன்னால் கொன்றீர்கள்; என்னையும் கொன்றாலொழியத் தங்கள் மனம் திருப்தி அடையாது போலிருக்கிறது. நான் உயிரோடிருப்பதே தங்களுக்குப் பிடிக்கவில்லை. நல்லது; என்னையும் கொன்று தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ளுங்கள்!' என்று சொல்லித் தன்னுடைய இடுப்பில் செருகியிருந்த சிறிய கத்தியை எடுத்து நீட்டினாள்.

'நான் ஏன் உன்னைக் கொல்கிறேன்? நீயல்லவா என்னை உயிரோடு வதைத்துக் கொண்டிருக்கிறாய்!' என்றேன்.

கடைசியில், இப்போது நினைத்துப் பார்த்தாலும் வெட்கம் தருகிற வார்த்தைகளை என் வாய் சொல்லிற்று. 'இன்னமுங்கூட மோசம் ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. நீ ஒரு வார்த்தை சொல்லு! இந்தக் கிழவனை விட்டு விட்டு வந்து விடுவதாகச் சொல்லு! உனக்காக நான் இந்த ராஜ்யத்தை விட்டு வந்து விடுகிறேன். இருவரும் கப்பல் ஏறிக் கடல் கடந்து தூர தேசத்துக்குப் போய் விடுவோம்!' என்றேன்.

நந்தினி அதைக் கேட்டுப் பயங்கரமாகச் சிரித்தாள். அதை நினைத்தால் இப்போதுகூட எனக்கு ரோமம் சிலிர்க்கிறது. 'கடல் கடந்து தூர தேசத்துக்குப் போய் நாம் என்ன செய்வது என்கிறீர்கள்? விறகு வெட்டிப் பிழைக்கவா? அல்லது வாழைத் தோட்டம் போட்டுப் பிழைக்கவா?' என்றாள். 'அதெல்லாம் உனக்

குப் பிடிக்காதுதான்! அர்ச்சகர் வீட்டில் வளர்ந்தவள் பழுவூர் ராணி ஆகிவிட்டாய் அல்லவா ?' என்றேன்.

'இதோடு திருப்தி அடைவதாக எண்ணம் இல்லை. சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் சக்கரவர்த்தினியாக வீற்றிருப்பதாக உத்தேசம். தங்களுக்கு இஷ்டமிருந்தால் சொல்லுங்கள். பழுவேட்டரையர் இருவரையும் கொன்றுவிட்டு, சுந்தரசோழரைச் சிறையில் அடைத்து விட்டு, சக்கரவர்த்தியாகி என்னைத் தங்கள் பட்டமகிஷியாக்கிக் கொள்வதாயிருந்தால் சொல்லுங்கள்!' என்றாள். 'ஐயோ! என்ன பயங்கரமான வார்த்தைகளைச் சொல்கிறாய்?' என்றேன். 'காயமடைந்து படுத்துக்கிடந்த பாண்டியனை என் கண் முன்னால் கொன்றது பயங்கரமான காரியமில்லையா?' என்று நந்தினி கேட்டாள். இதனால் என் குரோதம் கொழுந்துவிடத் தொடங்கியது. ஏதேதோ வெறிகொண்ட வார்த்தைகளை உளறி அவளை நிந்தித்துவிட்டுக் கிளம்பினேன். அப்போதும் அவள் என்னை விடவில்லை. ' இளவரசே ! எப்போதாவது தங்களுடைய மனத்தை மாற்றிக் கொண்டால் என்னிடம் திரும்பி வாருங்கள். என்னைச் சக்கரவர்த்தினியாக்கிக் கொள்ளத் தங்கள் மனம் இடம் கொடுக்கும் போது வாருங்கள்!' என்றாள். அன்று அவளை விட்டுப் பிரிந்தவன் பிறகு அவளைப் பார்க்கவே இல்லை!'' என்றான் ஆதித்த கரிகாலன்.





இதையெல்லாம் கேட்டுப் பயங்கரமும் திகைப்பும் அடைந்த பார்த்திபேந்திரன், ''அரசே! இப்படியும் ஒரு ராட்சஸி உலகில் இருக்க முடியுமா? அவளைத் தாங்கள் மறுபடியும் சந்திக்காததே நல்லதாய்ப் போயிற்று!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

''அவளை நான் போய்ப் பார்க்கவில்லை என்பது சரிதான். ஆனால் அவள் என்னை விட்ட பாடில்லை, பல்லவா! இரவும் பகலும் என்னைச் சுற்றிச் சுற்றி வந்து என்னை வதைக்கிறாள். பகலில் நினைவிலே வருகிறாள். இரவில் கனவிலே வருகிறாள். ஒரு சமயம் முகத்தில் மோகனப் புன்னகையுடன் என்னைக் கட்டி அணைத்து முத்தம் கொடுக்க வருகிறாள். இன்னொரு சமயம் கையில் கூரிய கத்தியுடன் என்னைக் குத்திக் கொல்லவருகிறாள். ஒரு சமயம் கண்களில் கண்ணீர் பெருக்கி விம்மிக் கொண்டு வருகிறாள். வேறொரு சமயம் தலைவிரி கோலமாய்க் கன்னங்களைக் கைவிரல்களினால் பிறாண்டிக் கொண்டும் அலறி அழுது கொண்டும் வருகிறாள். ஒரு சமயம் பைத்தியம் பிடித்தவளைப் போல் பயங்கரமாகச் சிரித்துக் கொண்டு வருகிறாள். இன்னொரு சமயம் அமைதியான முகத்துடன் ஆறுதல் சொல்ல வருகிறாள். கடவுளே! அந்தப் பாதகி என்னை எப்படித்தான் வதைக்கிறாள் என்று சொல்லி முடியாது. இன்று மாலை பாட்டன் கூறியது நினைவிருக்கிறதா ? நான் ஏன் தஞ்சை போகக் கூடாது என்பதற்கு ஏதேதோ காரணம் கூறினார். உண்மையில் நான் தஞ்சை போகாமலிருப்பதற்கும் என் தந்தையைக் காஞ்சிக்கு வரவழைக்க விரும்புவதற்கும் காரணம் நந்தினிதான்....''

''அரசே ! கேவலம் ஒரு பெண்ணுக்குப் பயந்து கொண்டா தஞ்சைக்குப் போகாமல் இருக்கிறீர்கள்? அப்படி அவள் என்னதான் செய்து விடுவாள்? வஞ்சனையாக விஷம் வைத்துத் தங்களைக் கொன்று விடுவாள் என்று அஞ்சுகிறீர்களா ?......''

''இல்லை, பார்த்திபா, இல்லை! இன்னமும் என்னை நீ நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை. அவள் என்னைக் கொன்று விடுவாள் என்பதற்காக நான் அஞ்சவில்லை. அவளுடைய இஷ்டப்படி என்னைச் செய்ய வைத்து விடுவாளோ என்றுதான் பயப்படுகிறேன். 'உன் தந்தையைச் சிறையில் போடு!' 'உன் தங்கையை நாட்டை விட்டுத் துரத்து!' 'இந்தக் கிழவனைக் கொன்று என்னைச் சிம்மாசனத்தில் ஏற்று!' என்று அந்த மாய மோகினி மறுமுறை சொன்னால், எனக்கு அப்படியெல்லாம் செய்யத் தோன்றி விடுமோ என்று பயப்படுகிறேன். நண்பா ! ஒன்று நந்தினி சாக வேண்டும் ; அல்லது நான் சாக



பூதக் கண்ணாடியின் உதவியால் கதிரவனின் கிரணங்களை ஒன்று திரட்டி அதன் ஆற்றலைக் கொண்டு பீரங்கியை வெடிக்கச் செய்யும் கருவியொன்று மேற்கு ஜெர்மனியில் உள்ள ஹாம்பர்க் நகரில் நடைபெற்று வரும் கண்காட்சியில் பார்வையாளர்களின் கவனத்தைக் கவர்ந்து வருகிறது. 250 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்ட இந்தக் கருவியில் வெடி மருந்து திணிக்கப்பட்ட சிறிய பீரங்கியொன்றும் அதன்மீது சாய்வான நிலையில் ஒரு பூதக் கண்ணாடியும் பொருத்தப்பட்டுள்ளன. நடுப்பகலில் கதிரவன் வான உச்சிக்கு வந்ததும் இந்தப் பூதக் கண்ணாடியின் வழியாகப் பீரங்கியின் பின்புறம் சூரிய கிரணங்கள் பாய்ந்து சூடேற்றி வெடி மருந்தை வெடிக்கச் செய்கின்றன. பகலில் நேரத்தை அறிந்து கொள்ள அந்தக் காலத்தில் பயன்பட்டு வந்த இது, இன்று வெறும் காட்சிப் பொருளாகிவிட்டது. (பு. பி. எஸ்.)

வேண்டும்; அல்லது இரண்டு பேரும் சாக வேண்டும். இல்லாவிடில் இந்த ஜன்மத்தில் எனக்கு மன அமைதி கிடையாது!'' என்றான் கரிகாலன்.

''அரசே! இது என்ன பேச்சு? தாங்கள் ஏன் சாக வேண்டும்? எனக்கு அனுமதி கொடுங்கள்! இலங்கைக்கு அப்புறம் போகிறேன். உடனே தஞ்சாவூர் சென்று அவளைக் கொன்று விட்டு வருகிறேன். ஸ்திரீஹத்தி தோஷம் எனக்கு வந்தால் வரட்டும்.''

''அப்படி ஏதாவது செய்தால் உன்னை என் பரம வைரியாகக் கருதுவேன். நந்தினியைக் கொல்லத்தான் வேண்டுமென்றால், என்னுடைய இந்தக் கையினாலேயே அவளைக் கொல்லுவேன். கொன்று விட்டு என்னையும் கொன்று கொண்டு மாளுவேன்! வேறொருவர் அவளுடைய சுண்டு விரலின் நகத்துக்குக் கேடு செய்வதையும் என்னால் பொறுக்க முடியாது! நண்பா! நீ நந்தினியை மறந்து விடு! அவளைப் பற்றி நான் சொன்னதெல்லாவற்றையும் மறந்துவிடு! பாட்டன் சொன்னபடி நீ நாளைக்கே புறப்பட்டு இலங்கைக்குப் போ! என் சகோதரன் அருள்மொழியை எப்படியாவது வற்புறுத்தி இங்கே அழைத்து வா! அவனை இங்கே இருக்கச் செய்வோம். பாட்டனும் பேரனும் யோசித்து என்ன வேணுமோ செய்து கொள்ளட்டும். நாம் இலங்கைக்குச் செல்வோம். மீண்டும் கப்பல் ஏறிப் பெரும் படையுடன் கீழைக் கடல்களில் செல்வோம். சாவகம், புஷ்பகம், கடாரம் முதலிய தேசங்களுக்குச் சென்று வெற்றிக் கொடி நாட்டுவோம். பிறகு மேற்கே திரும்புவோம். அரபு, பாரஸீகம், மிசிரம் முதலிய நாடுகளுக்குச் சென்று அங்கெல்லாம் தமிழர் வீரத்தையும் புலிக் கொடியையும் நிலைநாட்டுவோம். பார்த்திபா! அந்த நாடுகளில் எல்லாம் கற்பு என்னும் கட்டுப்பாடு இந்த நாட்டில் உள்ளது போல் கிடையாது என்பது உனக்குத் தெரியுமா? அரசர்கள் தங்கள் இஷ்டம் போல் அவர்களுடைய ஆட்சியின் கீழ் உள்ள எந்தப் பெண்ணையும் அழைத்துச் சென்று அந்தப்புரத்தில் சேர்த்துக் கொள்வார்களாம்!....'' என்றான் கரிகாலன்.

பார்த்திபன் இதற்கு மறுமொழி சொல்லுவதற்குள் திருக்கோவலூர் மலையமான் அங்கு வந்து சேர்ந்தார். ''அரவான் கதையைப் போல் அற்புதமான கதை இந்த உலகத்திலேயே கிடையாது. நீ இப்போது சொல்லிக் கொண்டிருந்த எந்த நாட்டிலும் கிடையாது. ஆனால் இன்னுமா நீங்கள் தூங்காமல் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? பார்த்திபேந்திரா! நாளைக்கு இலங்கைக்குப் புறப்பட வேண்டும் என்பது உனக்கு நினைவிருக்கிறதல்லவா?'' என்றார்.

''அதைப் பற்றித்தான் தூங்காமல் பேசிக் கொண்டிருக்கிறோம்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

**'பொன்னியின் செல்வன்' முதல் பாகம் முற்றிற்று.**
**அடுத்த இதழில் இரண்டாம் பாகம் ஆரம்பமாகிறது.**





- படங்கள்: காம்பேயில் வெற்றி! எண்ணெய் பீறிடுகிறது.
- பஞ்சாபில் எண்ணெய்க் கிணறு இறக்குகிறார்கள்.

# எண்ணெய் பற்றிய எண்ணங்கள்

'காவேரிப் படுகையில் எண்ணெய் கிடைக்குமா?' என்று கேட்டால் 'ஜோசியமா சொல்ல முடியும்? கிடைக்கும் என்ற நம்பிக்கையில்தான் வேலை நடைபெறுகிறது' என்று பதில் கிடைக்கிறது. இந்த நம்பிக்கை விஞ்ஞானபூர்வமானதே. குறிப்பிட்ட இடத்தில் எண்ணெயோ இயற்கை வாயுவோ கிடைக்குமா என்று புவியியல் நிபுணர்களும் (Geologists) பூபௌதிக நிபுணர்களும் (Geo physicists) பூர்வாங்க ஆராய்ச்சிகள் நிகழ்த்தி, கிடைக்கக்கூடும் என்று நம்பிக்கை ஏற்பட்ட பிறகுதான் எண்ணெய் கண்டுபிடிக்கக் குழாய்கள் இறக்குகின்றனர். இருப்பினும் இந்த எண்ணெய் விஷயத்தில் மட்டும் விஞ்ஞானிகள் தீர்மானமாக ஏதும் முன்கூட்டியே கூறிவிட முடியாது. பூமிக்கு அடியில் நாலாயிரம் மீட்டர்கள் ஆழம் குழாய்கள் இறக்கிய பிறகும் எண்ணெய் கிடைக்காமல் போய்விடலாம்! துரதிர்ஷ்டம்தான்!

பாரத எண்ணெய், இயற்கை வாயு கமிஷன் (ஓ. என். ஜி. ஸி.) 200 கோடி ரூபாய் மூலதனத்தில் இயங்கி வருகிறது. 18,000 சிப்பந்திகள் இதில் பணியாற்றி வருகின்றனர். இதில் ஓர் அங்கமே சென்னையில் உள்ள 'காவேரித் திட்ட அலுவலகம்'.

'காவேரித் திட்டம்' உருவாகிக் கும்பகோணம், பட்டுக்கோட்டை, அறந்தாங்கி, தஞ்சாவூர் முதலிய இடங்களில் எண்ணெய் கண்டுபிடிக்கும் முயற்சிகள் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டன. ஆனால் இந்த இடங்களில் எண்ணெய் ஏதும் கிடைக்கவில்லை. 1964ல் காரைக்காலில் வேலை தொடங்கியது. இராப் பகலாக 24 மணி நேரமும் வேலைகள் நடைபெற்று வருகின்றன. மழை என்றும், வெய்யில் என்றும் பாராது தொழிலாளிகளும் அதிகாரிகளும் உழைத்து வருகின்றனர். சிலருக்குக் கைகளே காய்ச்சிப் போய் விடுகிறதாம். எனினும் தொழிலாளிகள் உற்சாகம் இழந்து விடவில்லை.

இதற்கிடையில் காரைக்கால் பகுதியில் எண்ணெய்க்காகக் கிணறுகள் இறக்குவது வீண் பண விரயம். இம்முயற்சியைக் கைவிடவேண்டும் என்ற குரல் பலமாக எழுந்திருக்கிறது. இதுவரை பலகோடி ரூபாய் செலவாகியும் பலன் பூஜ்யமாக இருப்பதே காரணம்.

சமீபத்தில் ஓ. என். ஜி. ஸி. யின் நடவடிக்கைகளை ஆராய்ந்த ருஷ்ய நிபுணர் குழு புதிய எண்ணெய்க் கிணறுகளை இவர்கள் கண்டு பிடிக்காவிட்டாலும் பரவாயில்லை. குஜராத்திலும் அஸ்ஸாமிலும் கண்டு பிடிக்கப் பட்டுள்ள கிணறுகளை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்வதிலும் வீண் கால தாமதமாகிறதே? இதனால் எவ்வளவு பண நஷ்டம்? இதே நேரத்தில் அயல் நாடுகளிலிருந்து நாள்தோறும் எண்ணெய்க் கப்பல்கள் இந்தியத் துறைமுகங்களுக்கு வந்து சுமையை இறக்கிக் கொண்டிருப்பதால் எத்தனை அன்னியச் செலாவணி விரயமாகிறது என்று சுட்டிக் காட்டியுள்ளது.

இதற்கிடையில் மேற்கு வங்கத்தில் ஓரிடத்தில் எண்ணெய் கண்டு பிடிக்கப்பட்ட ஒரு கதை ரொம்ப சுவாரசியமானது. இரண்டு கோடி ரூபாய் செலவழித்து எண்ணெய்க் கிணறு இறக்கிய பின் எடுத்த எண்ணெயைப் பரிசோதித்துப் பார்க்க அனுப்பி வைத்தார்கள். அதைப் பரிசோதித்த விஞ்ஞானிகள் இது கல்லெண்ணெயே அல்ல, டீஸல் எண்ணெயாகும் என்று தீர்மானித்து விட்டார்கள். அப்புறம் யோசித்துப் பார்த்ததில் கிணறு இறக்கப் பயன்பட்ட சாதனங்கள் பூமியில் புதையுண்டு வெளிவர மறுத்ததும் அதை வெளியே எடுப்பதை இலகுவாக்க ஏராளமான டீஸல் எண்ணெயை உள்ளே விட்டதும் நிபுணர்களுக்கு நினைவுக்கு வந்தது!

எண்ணெய்க் கிணறு இறக்குவது ஒரு வழவழா கொழகொழா துறை. கைக்கெட்டியது வாய்க்கு எட்டாது வழுக்குவது போல் ஏமாற்றங்கள் மிகுதியாக ஏற்படக் கூடிய துறை. ஆனால் எண்ணெய்க் கிணறுகள் வெற்றிகரமாக அமைந்து விட்டாலோ பல லட்சக்கணக்கில் பாரதத்துக்கு அந்நியச் செலாவணி மிச்சமாகும்.

— பாணன்




எல்லா வகைப் புடவைகளும் பாம்பே டையிங் கடைகளில் கிடைக்கும்

**பல்வேறு மாதருக்கேற்ற பல்வகைப் புடவைகள்:**
**விரும்புவதைத் தேர்ந்தெடுங்கள்!**




கண்ணைப் பறிக்கும் வண்ணங்கள்; மனதைக் கவரும் டிசைன்கள்; சுருக்கங்கள் விழாத தன்மை. இத்தனை சிறப்புகளும் பாம்பே டையிங்கின் எண்ணற்ற புடவை வகைகளில் காணலாம். இந்த மென்மையான புடவைகள் உங்கள் அழகுக்கு மெருகூட்டி, உங்கள் மதிப்பைப் பன்மடங்கு பெருக்கும். இன்றே பாருங்கள்; இன்றே வாங்குங்கள்!

பாம்பே டையிங்




துரோணருடைய வில்லைச் சாத்யகி தன் பாணங்களால் அறுத்துத் தள்ளினான். பாரத்வாஜர்† ஒரு வினாடியில் வேறு வில்லை எடுத்து நாணேற்றி நின்றார். அதையும் சாத்யகி உடனே அறுத்தான். மறுபடியும் வேறொரு வில்லை எடுத்து நின்றார். அதையும் அறுத்து விட்டான். இவ்வாறு நாணேற்றவே விடாமல் நூற்றொரு விற்களை சாத்யகி அறுத்து விட்டான். இந்தச் சாத்யகியானவன் ஸ்ரீராமர், கார்த்தவீரியன், தனஞ்சயன், பீஷ்மர் இவர்களைப் போல் யுத்தம் செய்கிறான் என்று துரோணர் தமக்குள் எண்ணித் திருப்தி அடைந்தார். ஆசாரியருக்கு இவ்விதமாக விரோதிகளிடம் நல்ல சாமர்த்தியத்தைப் பார்க்கும்போது சந்தோஷம் உண்டாவது இயற்கை.

துரோணர் எந்த அஸ்திரத்தைப் பிரயோகம் செய்தாரோ, அதே அஸ்திரத்தை அதே முறையில் சாத்யகி பிரயோகம் செய்வான். இவ்வாறு வெகு நேரம் கழிந்தபின்னர் தனுர்வேதத்தின் கரையைக் கண்ட துரோணாச்சாரியார் சாத்யகியைக் கொல்லும் பொருட்டு அக்னேயாஸ்திரத்தைத் தொடுத்தார். சாத்யகியும் உடனே அதை வெட்டும்படியான வருணாஸ்திரத்தைத் தாமதமின்றிப் பிரயோகித்தான்.

வர, வர சாத்யகியின் வலிமை தளர ஆரம்பித்தது. அதைக் கண்ட கௌரவர்கள் மகிழ்ச்சியடைந்து கர்ஜித்தார்கள்.

சாத்யகி பீடிக்கப்படுகிறான் என்று யுதிஷ்டிரன் அறிந்து அருகிலுள்ள வீரர்களைப் பார்த்து, ''உத்தமனும் வீரனும் சத்ய பராக்கிரமனுமான யுயுதானன்‡ துரோணரால் மிகவும் கொடுமையாக எதிர்க்கப்படுகிறான்.—உடனே அவன் இருக்குமிடம் செல்லுங்கள்'' என்றான்.

திருஷ்டத்யும்னனைப் பார்த்து, ''சீக்கிரம் சென்று துரோணரைத் தடுப்பாயாக! பிராமணர் சாத்யகியைக் கொன்று விடுவார். ஏன் நிற்கிறாய்? உடனே வேகமாகப் போய் சாத்யகி இருக்கும் இடம்சேர். துரோணரால்நமக்குப் பெரிய பயம் நேரிட்டிருக்கிறது. சிறு பையன் பறவையைக் கயிற்றினால் கட்டி விளையாடுவதைப்போல் சாத்யகியுடன் துரோணர் செய்யும் யுத்தம் அவருக்கு விளையாட்டாக இருக்கிறது. அவனால் அவரை இனி எதிர்க்க முடியாது. நீ சீக்கிரம் போய் உதவி செய். மற்றவர்களையும் அழைத்துச் செல். தாமதம் செய்யாதே. அந்தகனுடைய பற்களுக்கிடையில் சாத்யகி அகப்பட்டுக் கொண்டிருக்கிறான்'' என்றான். படைகளையெல்லாம் துரோணரைத் தாக்கவும் கட்டளையிட்டான்.

அனைவரும் கஷ்டப்பட்டுச் சாத்யகியைத் தப்புவித்தார்கள்.

* * *

அச்சமயம் பாஞ்சஜன்யத்தின் ஒலி கேட்டது. யுதிஷ்டிரர் கவலையுற்றார்.

''சாத்யகியே! பாஞ்சஜன்யம் மட்டும் ஒலிக்கிறது. காண்டீபத்தின் சப்தம் கேட்கவில்லை. பார்த்தனைப் பற்றி எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. ஜயத்ரதனுக்குத் துணையாக நிற்கும் வீரர்களால் அவன் சூழப்பட்டு ஆபத்தி

---

† பாரத்வாஜர் - துரோணர்.
‡ யுயுதானன் - சாத்யகிக்கு மற்றொரு பெயர்.

விருக்கிறான் என்றே தோன்றுகிறது. முன்பக்கத்தில் ஸைந்தவனுடைய சேனையும் பின்பக்கத்தில் துரோணருடைய பெருஞ் சேனையும் அருச்சுனனுக்கு ஆபத்து விளைவிக்கும்படியாக இருக்கின்றன. அருச்சுனன் சூரியோதயத்தில் சத்துரு சேனையில் நுழைந்தான். இப்போது பகலில் பெரும் பாகம் கழிந்து விட்டது. பாஞ்சஜன்யம் மட்டும் ஒலிப்பதால், தனஞ்சயன் மாண்டு விட்டு வாசுதேவன் மட்டும் யுத்தம் செய்கிறானோ என்று சந்தேகப்படுகிறேன். சாத்யகி! உன்னால் செய்ய முடியாத காரியம் இல்லை. அருச்சுனன் உனக்குத் தோழனும் ஆசாரியனுமாவான். அவனுக்கு இப்போது நிச்சயமாகச் சங்கட நிலை ஏற்பட்டிருக்கிறது. சாத்யகி! தனஞ்சயன் உன்னைப் பற்றி என்னிடம் பல தடவை மிகவும் புகழ்ந்து பேசியிருக்கிறான். 'சாத்யகியைப் போன்ற சத்தியப் பராக்கிரமன் வேறொருவன் இல்லை' என்று வனவாசத்தில் இருக்கும்போதே சொன்னான். அதோ பார்! யுத்தத்தினால் கிளம்பிய புழுதி. அருச்சுனன் சத்துருக்களால் சூழப்பட்டிருக்கிறான் என்பது நிச்சயம். ஜயத்ரதன் மகாசூரன். அவன் விஷயத்தில் உயிரை விடத் துணிந்து பல வீரர்களும் அவனுக்குத் துணையாக இருக்கிறார்கள். உடனே போ'' என்று படபடப்புடன் தருமன் சொன்னான்.

இப்படி மிகவும் வற்புறுத்தப்பட்டவனாக சாத்யகி, ''தருமத்தினின்று தவறாதவரே! உம்முடைய கட்டளையை நான் தலை மேல் வகிப்பவன். தனஞ்சயனுக்காக நான் எதைத்தான் செய்ய மாட்டேன்? அவன் விஷயத்தில் என் உயிரும் எனக்கு ஒரு பொருளாகாது. உம்மால் ஏவப்பட்டால் நான் தேவர்களோடும் எதிர்த்துப் போர் புரிவேன். ஆனால் எல்லா விஷயமும் அறிந்த வாசுதேவனும் அருச்சுனனும் என்னிடம் சொல்லிப் போனதைத் தேவரீரிடம் விஞ்ஞாபனம் செய்து கொள்ளுகிறேன். 'ஜயத்ரதனைக் கொன்று திரும்பும் வரையில் நீ யுதிஷ்டிரனுக்குக் காப்பாக இரு. மிகவும் ஜாக்கிரதையாக அவரைப் பார்த்துக் கொள். உன்னை நம்பி நாங்கள் போகிறோம். கௌரவ சேனையில் நாம் அஞ்ச வேண்டியவர் துரோணர் ஒருவரே. அவருடைய பிரதிக்ஞை உனக்குத் தெரியுமே! தரும புத்திரரை உன் காப்பில் வைத்து விட்டு நாங்கள் போகிறோம்' என்று வாசுதேவரும் அருச்சுனனும் என்னிடம் சொல்லிப் போனார்கள். அருச்சுனன் என்னை மதித்தும் நம்பியும் இவ்வாறு கட்டளையிட்டுப் போயிருக்கிறான். நான் இப்போது எப்படி அதைப் புறக்கணிக்க முடியும்? அருச்சுனனைப் பற்றி நீர் கவலைப்பட வேண்டாம். அவனை யாரும் ஜெயிக்க முடியாது. சிந்து ராஜனும் மற்றவர்களும் தனஞ்சயனுக்குப் பதினாறில் ஒரு பங்கு ஈடாக மாட்டார்கள். தரும புத்திரரே! உம்மை யாருடைய காப்பில் விட்டு விட்டு நான் போவேன்! துரோணருடைய எதிர்ப்பைத் தாங்கக் கூடிய எவனையும் நான் இங்கே காணவில்லை. நன்றாக ஆலோசித்து எனக்குக் கட்டளையிடுவீராக'' என்றான்.

''இரண்டையும் தீர ஆலோசித்தே நான் உன்னை அருச்சுனனிடம் போகச் சொல்லுகிறேன். என்னுடைய அனுமதியைப் பெற்று நீ செல், மகாபல சாலியான பீமன் எனக்குக் காப்பாக இருக்கிறான். திருஷ்டத்யும்னனும் இருக்கிறான். இன்னும் பலர் இருக்கின்றனர். என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்'' என்று சொல்லிச் சாத்யகியின் தேரில் அம்புப் பெட்டிகளையும் எல்லா உபகரணங்களையும் அஸ்திரங்களையும் வைத்து நன்றாக இளைப்பாறிய குதிரைகளையும் பூட்டச் செய்து



ஆசீர்வதித்து யுதிஷ்டிரன் சாத்யகியை அனுப்பினான்.

''பீமசேனா! தரும புத்திரரைப் பார்த்துக் கொள்'' என்று சொல்லி விட்டுச் சாத்யகி தனஞ்சயனை நோக்கிச் சென்றான்.

இவ்வாறு சென்ற சாத்யகியைக் கௌரவப் படை பலமாகத் தடுத்தது. தடை செய்தவர்களை யெல்லாம் வென்று பலரை வதம் செய்து சாத்யகி சென்றான். வழியில் அநேக சத்துருக்களுடன் போர் செய்ய நேரிட்ட படியால் அவன் அருச்சுனனிடம் போய்ச் சேர நேரமாயிற்று.

சாத்யகி யுதிஷ்டிரரை விட்டுப் பிரிந்ததைப் பார்த்த துரோணர் பாண்டவ சேனையை இடைவிடாமல் தாக்கினார். பாண்டவர்களுடைய சேனை ஒழுங்கு குலைந்து பின் வாங்க நேரிட்டது. யுதிஷ்டிரன் மிகவும் கவலைப் பட்டுச் சிந்திக்க ஆரம்பித்தான்.

# 86. யுதிஷ்டிரன் ஆசை

''அருச்சுனனையும் காணவில்லை; அவனைத் தொடர்ந்து சென்ற சாத்யகியும் திரும்பவில்லை. பீமனே! தம்பியைப் பற்றி எனக்கு மிகக் கவலையாக இருக்கிறது. பாஞ்சஜன்யம் ஒலிக்கும்போது காண்டீபமும் கூட ஒலிக்காம லிருப்பது என் உள்ளத்தில் மிக்க பயத்தை உண்டாக்குகிறது. உயிரைப் போன்ற நண்பனும் வீரனுமான சாத்யகியை அனுப்பினேன். அவனும் திரும்பவில்லை. என்னுடைய கவலை வளர்ந்து வருகிறது'' என்று யுதிஷ்டிரன் பீமசேனனிடம் சொல்லி ஒன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தான்.

''உமக்கு இப்படிப்பட்ட மனக் கலக்கம் வந்ததை நான் எப்போதும் பார்த்ததில்லை. தைரியத்தை விட வேண்டாம். எனக்கு என்ன கட்டளை வேண்டுமானாலும் இடுவீராக. மனத்தைத் துக்கத்தில் சிக்கிக்கொள்ள விட வேண்டாம்'' என்றான் பீமன்.

''அப்பனே! உன்னுடைய தம்பி இறந்தே விட்டான் என்று நான் எண்ணுகிறேன். அவன் வீழ்த்தப்பட்ட படியால் மாதவனே ஆயுதம் எடுத்து யுத்தம் செய்கிறான் போலிருக்கிறது. பாஞ்சஜன்ய ஒலி மட்டும் கேட்கிறது. தனஞ்சயனுடைய வில்லின் ஒலி கேட்கவில்லை. ஒப்பற்ற சூரனும் நமக்கு உயிருமான தனஞ்சயன் கொல்லப்பட்டான் என்றே எனக்குத் தோன்றுகிறது. நான் மதிமயக்கமடைந்து விட்டேன். பீமனே! என் சொற்படி நீ நடப்பதாயிருந்தால் உடனே தனஞ்சயன் இருக்குமிடம் செல். சாத்யகியையும் அருச்சுனனையும் பார்த்துச் செய்ய வேண்டியதைச் செய்து திரும்பி வா. என் பேச்சுக்கிணங்கி சாத்யகி அருச்சுனன் சென்ற வழியைத் தொடர்ந்து கௌரவ சேனையைப் பிளந்துகொண்டு சென்றான். அவர்களைத் தொடர்ந்து நீயும் போய் அவர்கள் க்ஷேமமாய் இருப்பதைக் கண்டாயாகில் உன் சிம்ம நாதத்தால் அறிவேன்'' என்றான்.

''நாதனே! விசனப்பட வேண்டாம். நான் போய் அவர்களைக் கண்டு க்ஷேமமாக இருப்பதைத் தெரிவிக்கப் போகிறேன்'' என்று இரண்டாவது பேச்சு இல்லாமல் ஒப்புக் கொண்டு திருஷ்டத்யும்னனைப் பார்த்து, ''பாஞ்சாலனே! தருமநந்தனரை எப்படியாவது பிடிக்க வேண்டும் என்று துரோணர் உபாயத்தைத் தேடிக் கொண்டிருப்பது உனக்குத் தெரியும். அரசனை ரட்சிப்பது முக்கியமான கடமை. ஆனால் அவருடைய கட்டளையை நான் நிறைவேற்றவேண்டியவனாக இருக்கிறேன். உன்னை நம்பிப் போகிறேன்'' என்றான்.

''பீமனே! சிந்தனை வேண்டாம். ஆலோசிக்காமல் போவாயாக. என்னைக் கொல்லாமல் துரோணர் யுதிஷ்டிரரைப் பிடிக்க முடியாது'' என்று வீரனும் துரோணருக்குப் பரம சத்துருவுமான துருபத குமாரன் சொன்னதும் பீமன் வேகமாகச் சென்றான்.

அருச்சுனனுக்குத் துணையாக அனுப்பப்பட்ட பீமனை வழியில் கௌரவர்கள் சூழ்ந்து கொண்டு தடுத்தார்கள். ஆனால் சிம்மமானது அற்ப மிருகங்களை விரட்டியடிப்பது போல் அவன் பகைவர் கூட்டத்தைத் துரத்தியடித்துத் திருதராஷ்டிர குமாரர்களில் பதினொரு பேர்களையும் வழியில் கொன்று, துரோணரை அணுகினான். அவர் அவனைத் தடுத்து, ''பீமசேனனே! சத்துருவாகிய என்னை ஜெயிக்காமல் நீ செல்ல முடியாது. உன் தம்பி அருச்சுனன் என் சம்மதம் பெற்றுச் சேனையில் புகுந்தான். உனக்கு நான் சம்மதம் தர மாட்டேன்'' என்றார். பல்குனனைப் போல் பீமனும் தன்னைக் கௌரவிப்பான் என்று எண்ணி இவ்வாறு சொன்னார்.

பீமனோ துரோணருடைய பேச்சைக் கேட்டு மிகுந்த கோபம் கொண்டு, ''ஓய் பிராமணரே! உமது சம்மதத்தின் பேரில் அருச்சுனன் சேனையில் பிரவேசிக்கவில்லை. அவன் தன் பராக்கிரமத்தைக் கொண்டு உம்முடைய வியூகத்தை உடைத்தான். நான் அருச்சுனனைப் போல் உம்மிடம் தயை காட்டேன். நான் உமக்குச் சத்துரு. ஒரு

காலத்தில் நீர் எங்களுக்குத் தந்தையும் குருவுமாக இருந்தீர். நாங்களும் உம்மை வணங்கினேம். இப்போது நீர் எங்களுக்குச் சத்துருவென்று நீரே சொன்னீர். அவ்வாறே இருக்கட்டும்'' என்று சொல்லிக் கதாயுதத்தைச் சுழற்றித் துரோணரைத் தாக்கினன். துரோணருடைய ரதம் பொடியாயிற்று.

துரோணர் வேறு ரதம் ஏறினர். அதையும் பீமன் பொடியாக்கினன். இவ்வாறு துரோணரைத் தாக்கி நான்கு பக்கங்களிலும் இருந்த யுத்த வீரர்களையும் விரட்டியடித்து வழி செய்து கொண்டே உள்ளே பிரவேசித்தான்.

அன்று துரோணருடைய எட்டு ரதங்கள் ஒன்றன் பின் ஒன்ருக உடைக்கப்பட்டன. சேனையைப் பிளந்து கொண்டு போகும் பீமனைப் போஜர்களுடைய சேனை எதிர்த்தது. அதையும் துவம்சம் செய்து முன்னல் சென்ருன். அதன் பின்னும் வந்து தடுத்த சேனைப் பகுதிகளையெல்லாம் வதம் செய்து வேகமாகச் சென்று பீமன் ஜயத்ரதனுடைய சேனையுடன் போர் புரிந்து கொண்டிருந்த அருச்சுனனைக்கண்டான். அருச்சுனனைக் கண்டதும் பீமசேனன் சிம்மத்தைப்போல் கர்ஜித்தான். அவன் செய்த கர்ஜனையைக் கேட்டதும் கிருஷ்ணனும் அருச்சுனனும் மகிழ்ச்சிப் பரவசமடைந்து அவர்களும் சிம்மநாதம் செய்தார்கள்.

* * *

தருமபுத்திரன் இந்தக் கர்ஜனையைக் கேட்டுக் களிப்புற்ருன். சோகத்தை விட்டுத் தனஞ்சயனை மனத்தில் ஆசீர்வதித்தான்.

''அஸ்தமிப்பதற்குள் அருச்சுனன் தன் பிரதிக்ஞையை முடித்து சிந்துராஜனை வதம் செய்து திரும்புவான். தனஞ்சயனுல் ஜயத்ரதன் கொல்லப்பட்ட பின் துரியோதனன் சமாதானத்துக்கு வரலாம். தம்பிமார்கள் கொல்லப்பட்டதைக் கண்டு மூடனுன துரியோதனனுக்கு நல்ல புத்தி உண்டாகலாம். சிறந்த அரசர்களும் போர்வீரர்களும் யுத்த களத்தில் வீழ்ந்தப்பட்டதைப் பார்த்து மந்த புத்தியுள்ளவனுன துரியோதனன், தன் பிழையை அறிந்து, சமாதானத்துக்கு வரலாம். பிதாமகரான பீஷ்மர் வீழ்ந்த பின் நமக்குள் உண்டான இந்தப் பாபமான வைரம் ஒழிந்து, எஞ்சியுள்ளவர்களாவது பிழைக்க வழி ஏற்படுமா?'' — இவ்வாறு தருமபுத்திரன் பலவிதமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

* * *

இப்படி யுதிஷ்டிரன் சமாதானத்தில் ஆவசெலுத்திச் சிந்தித்துக் கொண்டிருக்கையில் பீமனும் சாத்யகியும், அருச்சுனனும் சென்ற இடத்தில் கோரமான யுத்தம் நடைபெற்றது. உலகம் எப்படிச் செல்ல வேண்டும்? அதற்காக என்ன நிகழ்ச்சிகள் நடைபெற வேண்டும் என்பதையெல்லாம் ஆண்டவன் அன்றி வேறு யார் அறிவார்? அனைத்தும் அவன் செயல் அல்லவா? [தொடரும்]

# படித்துப் பாருங்கள்!

## மயில் நமது தேசியப் பறவை

மயில்கள் தோகை விரித்து ஆடிப் பார்த்திருக்கலாம். மயில்கள் சண்டை போட்டுப் பார்த்திருக்கிறீர்களா? ''பெரும்பாலும் கூட்டிற்காகத்தான் கலகம் எல்லாம். நல்ல நெஞ்சுரத்தோடும் வைராக்கியத்தோடும் சண்டையிடும். ஆண் மயில்களுக்கிடையில்தான் சண்டை நடக்கும். அவை போருக்குச் சவால் விடுத்து ஒன்றை ஒன்று நெருங்கும். அலகையும் நகங்களையும் ஆயுதங்களாகக் கொண்டு போரிடும். இந்தச் சமயங்களில் மயில் இறகுகள் ஒரு கவசம் போல் பாதுகாக்கின்றன. அதனால் அந்த இறகுகளைக் கொத்திப் பறித்தெறிய வேண்டியிருக்கிறது. வாலை உயர்த்திக் கொண்டு சந்திக்கேற்றவாறு ஒன்றை ஒன்று தாக்கி விழுந்து கொண்டிருக்கும். பாய்ந்து பாய்ந்து கொத்தும். கொஞ்ச நேர சண்டைக்குப் பிறகு இரண்டும் ரத்தம் சிந்தி வலி இழந்து பின்வாங்கிவிடும்!''

நமது தேசியப் பறவையான மயிலைப் பற்றி இதுபோன்ற பல தகவல்களைக் கொடுக்கிறது இந்நூல். குழந்தைகளுக்கென்றே நிறையப் படங்களுடன் கொட்டை எழுத்துக்களில் அச்சாகியிருக்கிறது. அதனால் சில இடங்களில் அச்சுப் பிழைகளும் இலக்கணப் பிழைகளும் கொட்டையாகவே தெரிகின்றன.

தென்மொழிகள் புத்தக டிரஸ்ட் ஆதரவில் வெளியிட்டோர்: குயிலன் பதிப்பகம், சென்னை-17; விலை: ரூ. 1-65; ஆசிரியர்: டி. பி. குருப்; தமிழாக்கம்: குயிலன்.

## நான்கு துதி நூல்கள்

1. குலசேகரர் இயற்றிய முகுந்தமாலை (70 காசு); 2. ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனம் (25 காசு); 3. ஸ்ரீ தேசிகரின் கோபால விம்சதி (50 காசு); 4. ஸ்ரீ தேசிகரின் பகவத் யான ஸோபானம் (40 காசு).

இந்த நான்கு நூல்களும் ரூ. 1.25 அனுப்புகிறவர்களுக்கு அனுப்பப்படும். தமிழிலும் தேவநாகரியிலும் மூலமும், தமிழில் பதவுரை பொழிப்புரைகளும் கூடிய பரம உத்தம நூல்கள்.

பிரசுரம் செய்தவர்: எம். கே. ரங்கஸ்வாமி அய்யங்கார், ஸ்ரீராம்நகர் வடக்கு வீதி, சென்னை — 18.



# உடைத்துச் சொன்னால்..





# கொரிப்பதற்குக் கொஞ்சம்..

அலுவலகத்தில் உட்கார்ந்து மோட்டுவளையைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது அலுவலக நண்பர் ஜெயராமன் என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் சுந்தரத்திடம் வந்து, காதருகில் குனிந்து, ஏதோ மெள்ளப் பேசி விட்டுத் தம்மிடத்துக்குப் போகத் திரும்புகிறார். ''என்னய்யா, என்ன விஷயம்?....'' என்று அவர் வாயைக் கிண்டுகிறேன் நான். '' அதெல்லாம் ரகசியம் ஐயா.... அப்புறம் சொல்கிறேனே!'' என்று கூறிக் கண்ணைச் சிமிட்டி விட்டுப் போகிறார் ஜெயராமன். நான் சுந்தரத்தை உலுக்குகிறேன். ''என்னய்யா சமாசாரம்?.... என்னவோ ரகசியம், கிகசியம் என்கிறீரே?....'' என்று கேட்கிறேன். அவரோ நமட்டுச் சிரிப்புச் சிரித்தவண்ணம் ''அப்புறம் சொல்கிறேனே!....'' என்று பாய்ச்சுக் காட்டுகிறார்.

எனக்கோ ஆவல் மண்டை வெடித்தும் விடும் போல் இருக்கிறது. அவர்களுக்குள் பரிமாறிக் கொள்ளப்பட்ட ரகசியம் என்னவாக இருக்கும் என்று ஊகிக்க முயலுகிறேன். ஆபீசில் சம்பள உயர்வுகளை நிர்ணயம் பண்ணக் கூடிய நேரம் இது. யார் யாருக்குப் பதவி உயர்வு, யார் யாருக்குக் கைவிரிப்பு என்பது பற்றி வதந்திகள் மலிவாக உலவக் கூடிய பருவம். 'கோரைப்புல் (ஒருவருடைய காரணப் பெயர் அது!)லுக்குப் பிரமோஷன் உண்டு என்று சொல்லிக் கொண்டிருந்தார்களே, அது இல்லை என்றாகி விட்டதா? பூக்காரி (டைப்பிஸ்ட் கல்யாணி)க்கு இரட்டை இன்கிரிமெண்ட் கொடுக்கப் போகிறார்களா? பல்லாவரத்தானைப் பெங்களூருக்குத் தூக்கி விடுவார்களோ?... இந்த ரகசியங்களில் எதை அந்தப் பாவி ஜெயராமன், சுந்தரத்தின் காதில் ஓதிவிட்டுப் போயிருப்பான்?' என்று மூளையைப் போட்டுக் கசக்கிக் கொள்கிறேன்.

ஜெயராமன் ஆபீஸ் விஷயமே பேசாதிருந்திருக்கலாம். ஆனால் அவர் சொன்ன 'ரகசியம்' என்ற அந்த ஒரு வார்த்தை நம்மை என்னென்னவெல்லாம் கற்பனை செய்து பார்க்கத் தூண்டுகிறது?

ரகசியங்கள் பல வகை. குடும்ப ரகசியம், அரசாங்க ரகசியம், தொழில் ரகசியம் என்று அடுக்கிக் கொண்டே போகலாம். சின்னஞ் சிறு வயதில் பாட்டியிடம் ராஜா—ராணி கதை கேட்கும்போது அந்த ஒற்றைக் கண் ராட்சதனின் உயிர் ஏழு கடல்களுக்கு அப்பால் உள்ள ஒரு தீவில், ஒரு மாமரத்தின் உச்சாணிக் கிளையில் கூடு கட்டியிருக்கும் பஞ்சவர்ணக் கிளியிடம் அடைபட்டிருக்கிறது என்கிற ரகசியத்தை எத்தனை ஆவலுடன் செவிகளில் வாங்கிக் கொள்கிறோம். அப்போது முளை விடுகிற இந்த ஆசை, எத்தனை வயதானாலும் தொடர்கிறது.

பள்ளிச் சிறுவனாக இருக்கும்போது மயிலிறகு குட்டி போடும் இரகசியத்தை அறிந்து கொள்ள ஆவல் காட்டுகிறோம். மாணவப் பருவத்தில் பரீட்சைக் கேள்வித் தாள்கள் அம்பலமாகாதா என்று இரகசியமாக விசாரித்துப் பார்க்கிறோம். இன்னும் கொஞ்சம் வயதான பிறகு வீட்டுக்குத் தெரியாமல் ரகசியமாகச் சினிமாவுக்குப் போய் விட்டு வரவும் சிகரெட் பிடிக்கவும் கற்றுக்கொள்கிறோம். இடையிலே ரகசியமாகக் காதலிக்கிறோம். அதிலே அடைந்த தோல்வியை மனத்துக்குள் ரகசியமாகப் புதைத்து விட்டுக் கல்யாணம் பண்ணிக் கொண்டு வாழ்க்கையின் ரகசியத்தை அறிய முனைகிறோம். பல ரகசியங்களைச் சந்தித்து மென்று விழுங்கி, ஜீரணித்து அலுத்துச் சலித்த பிறகு கடைசியாக இறை தத்துவம் என்கிற ரகசியத்தை ஆராய்வதில் நாளை ஓட்டுகிறோம். அடடா! ரகசியம் என்ற ஒன்று மட்டும் இல்லையானால் அப்புறம் வாழ்க்கையில் சுவை ஏது?

''இந்தச் சுற்றறிக்கையை நம் ஆபீசில் உள்ள அத்தனை பேரும் பார்த்தாக வேண்டும். எனவே, 'ரகசியம்' என்று ஒரு கவர்மேல் டைப் அடித்து அதற்குள்ளே இதைப் போட்டு என் மேஜை மீது வை!'' என்றாராம் ஒரு முதலாளி. அந்த முதலாளி மனித சுபாவத்தை நன்கு உணர்ந்தவராக இருக்க வேண்டும். இல்லையென்றால் இப்படியொரு யுக்தி எப்படித் தோன்றும்?

ரகசியங்கள் இல்லையென்றால் சரித்திரமும் கிடையாது; சரித்திரக் கதைகளும் கிடையாது. அரச பரம்பரை ரகசியங்கள், அந்தப்புர ரகசியங்கள், ரகசிய நிலவறைகள், ரகசியக் கதவுகள், ரகசிய ஒற்றர்கள், ரகசிய ஓலைகள், ரகசியத் தலைமறைவுகள் அத்தனையும் இவற்றில் உண்டு.

சந்திப்புகளும் ரகசியமாக நிகழ்வதுண்டு. காதலர்களின் ரகசியச் சந்திப்புக்கு முன்னால் அவர்கள் கண்கள் ரகசியமாகச் சந்தித்துக் கொள்ளும். இதயங்கள் ரகசியம் பேசிக் கொள்ளும், இதழ்கள் ரகசியச் சிரிப்புக்களை உதிர்க்கும்; இத்தனை ரகசியமும் தன்னாலே ஒரு நாள் அம்பலத்துக்கு வரும்.

ராஜாங்கத் தலைவர்களும் தூதுவர்களும் கூட ரகசியமாகச் சந்தித்து உரையாடுவதுண்டு. இந்த ரகசிய உரையாடல்கள் பின்னொரு காலத்தில் வெளியாகும்போது, 'பூ! இவ்வளவுதானா!' என்று நினைக்கும்படி அமைவதும் உண்டு!

ஒற்றர்களின் உடன்பிறப்பு ரகசியங்கள். அவர்கள் இன்னார் என்பது முதல் நடவடிக்கைகள் வரைக்கும் அத்தனையும் ரகசியங்கள்தான். அவர்களை நிழல் போல் தொடர்ந்து குட்டை உடைப்பவர்கள் சாதாரண மாணவர்கள் அல்ல; ரகசியப் போலீஸ்காரர்களாக்கும்!

பெண்களிடம் ரகசியங்களைச் சொல்லக் கூடாது என்பார்கள். அவர்களால் ரகசியங்களை வெளியிடாமல் இருக்க முடியாதாம். இப்படிச் சொல்கிறவர்கள் ஏதாவது அத்தை பாட்டி கதையை ஆதாரம் காட்டுவார்கள். இதெல்லாம் சும்மா சொல்கிற பேச்சு. வேண்டுமானால் பெரிய பெரிய கம்பெனிகளில் நுழைந்து விசாரித்துப் பாருங்கள். 'கான்பிடென்ஷியல்' (அந்தரங்க) ஸ்டெனோவாகப் பெண்களைப் போட்டிருக்கிறார்களா இல்லையா என்று! என்னைக் கேட்டால் பெண்களே ஒரு ரகசியம் என்றுதான் சொல்வேன். அவர்களிடமிருந்து ரகசியம் எதையும் பெயர்க்க முடியாது என்பது நான் அனுபவத்தில் கண்ட ரகசியம்.

அப்படியே ஆவலை அடக்க முடியாமல் ஒரு பெண்மணி ஒரு ரகசியத்தை உடைத்து விட்டாள் என்றாலும் கடைசியாக இதுபோன்ற ஒரு வாக்கியத்தை அத்துடன் சேர்த்துச் சொல்வாள்: ''அவள் உன்னிடம் சொல்லக் கூடாது என்று சொல்லி எதை என்னிடம் சொன்னாளோ, அதை உன்னிடம் நான் சொன்னேன் என்பதை அவளிடம் நீ சொல்லி விடாதே! ப்ளீஸ்!''

— எஸ். வி. ஆர்.



# நாடகமேடை



## சி. வி. வி. பந்துலு :

**ப**ள்ளிக்கூடப் பாடத்தை விடப் பாட்டிலே எனக்கு அக்கறை அதிகம். சங்கீத சிக்ஷைக்குப் பெற்றோர் ஏற்பாடு செய்தார்கள். ஹரிகேசவநல்லூர் முத்தையா பாகவதரிடம் கொஞ்ச நாள் பாடம். ராமநாதபுரம் சமஸ்தானத்தில் அரியக்குடி ராமானுஜய்யங்காரும் நானும் பூச்சி அய்யங்காரிடம் சிக்ஷை பெற்றபோது நிறைய நாடகங்கள் பார்ப்பேன். இரவு ஒன்பதரை மணிக்கு ஆரம்பித்து விடியற்காலை இரண்டு மணிக்கு முடியும். சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் சாயங்காலமே நாடகம் ஆரம்பமாகும். பெரும்பாலும் கீற்றுக் கொட்டகைகளில் நாடகம் நடக்கும். மைக் கிடையாது. ஆயிரம் பேருக்கு மேல் கேட்கும்படி உரத்த குரலில் நடிப்பார்கள். காஸ் லைட்தான். மேடையிலும் விளக்கு, கொட்டகையில் இரு பக்கமும் விளக்குகள் இருக்கும். அணைப்பது போடுவது என்றெல்லாம் இல்லை. சேர், பெஞ்சு, தரைதான். ஒரு ரூபாய்க்கு ஸ்பெஷல் சேர் என்பது ஒரு விசேஷம்.

இசைப் பயிற்சியின்போதே மதுரை பத்மாசனி பாய் கதைக்குப் பின்பாட்டுப் பாடியிருக்கிறேன். சென்னையில் பஞ்சாபகேச சாஸ்திரிகள் காலட்சேபத்துக்குப் பின்பாட்டுப் பாடிய நாளில் பி. எஸ். வேலு நாயர் கம்பெனியில் சேர வாய்ப்புக் கிடைத்தது. வேறு சில கம்பெனிகளிலும் சேர்ந்து நடித்த பிறகு கன்னையா குழுவில் சேர்ந்தேன்.

சென்னையில் புரட்சிகரமாக சீன் ஜோடனைகள் செய்து வந்த சி. கன்னையா நாடகக் கம்பெனியினர் ஸ்பெஷல் ரயில் வைத்துக் கொண்டு மற்ற ஊர்களுக்குப் போவார்கள். கன்னையா பெரிய அறிவாளி. பெரிய நடிகர். மகா மேதை. 'ட்ரிக் சீன்' என்றெல்லாம் ஆரம்பித்தது இவர்தான். கிட்டப்பா அந்த நாடகக் குழுவில் முக்கிய நடிகர். கன்னையா கம்பெனியில் ஒளி அமைப்புகள் ஆரம்பமாகி விட்டன. டைனமோ மெஷின் கூடவே வரும். சாப்பாடு போட்டு மாதம் ஐம்பது ரூபாய் என்று ஆரம்பமான சம்பளம் ரூபாய் நானூறு வரை ஏறிற்று. சிநேகம், கன்னையாவின் இறுதி நாள் வரை நீடித்தது.

ஊர் ஊராகப் போகும்போது அங்கங்கே பெரிய சீன்கள் தயாரிக்க மட்டுமே பதினைந்து நாள் ஆகும். வைகுண்டம் சீன் என்றால் ஆயிரம் ஜனங்கள் 'நமோ நாராயணா' என்று கன்னத்தில் போட்டுக் கொள்வார்கள். இராமானுஜர் நாடகத்தில் திருப்பதி சீனில் விபூதி தரித்த பக்தர்கள் கீழே விழுந்து நமஸ்காரம் செய்ததும் நெற்றியில் நாமத்துடன் எழுந்திருக்கும் காட்சியில் என்ன பரபரப்பு ஏற்படும் தெரியுமா!

நடிப்பவர் நூறு பேர் என்றால், சீன் வேலைக்கு நூறு பேர். இதை நம்பி இருநூறு குடும்பம் வாழ்ந்தது. கன்னையா ஏராளமாகச் சம்பாதித்தார். எத்தனையோ கோவில்களில் எவ்வளவோ கைங்கரியம் செய்திருக்கிறார்.

அவரது பிரபல நாடகம் தசாவதாரம். இது 1700 முறை நடிக்கப்பட்டிருக்கிறது. கிட்டப்பா ராமர்; நான் பரதன். பாதுகா பட்டாபிஷேக சீனில் 'தசரத ராஜகுமாரா, அலங்காரா, அதிதீரா, சுகுமாரா' என்ற பரதனும் ராமனும் டூயட் பாட்டுப் பாடும் சீன் ரொம்ப உருக்கமாக இருக்கும். கிட்டப்பா கம்பெனியை விட்டுப் பிரிந்தபோது, ''கிட்டப்பாவுக்குப் பதில் பந்துலுதான்'' என்று சொல்லிவிட்டார் கன்னையா. நான் முதலில் கிட்டப்பா வேஷமான 'மோகினி' வேஷம் போட்டபோது கிட்டப்பாவே வந்திருந்து பார்த்து, ''நான் இருந்த இடத்தில் நீதான் இருக்கணும்'' என்று சொன்னார்.

'ஆண்டாள் திருக்கல்யாணமும் ராமானுஜரும்' மற்றொரு பிரபல நாடகம். ராமானுஜராக 1100 முறை நடித்தேன்.

கன்னையாவின் கடைசி பெரிய நாடக ஜோடனை ''பகவத் கீதை''. இதில் பதினெட்டு அத்தியாயத்துக்குப் பதினெட்டுப் பெரிய சீன் ஜோடனை. 'ராஜ வித்யா ராஜ ரகஸ்யம்' காட்சியில் மேடையில் ராஜா ராணியை ஏற்றிக் கொண்டு ஒரு நிஜ கார் வரும்!

நாடகத்தில் பெண்கள் நடிப்பது அபூர்வம். நடித்த ஒவ்வொருவரும் திறமைசாலிகள். கும்ப

கோணம் பாலாமணி என்னும் நடிகை பெயரிலே ஒரு கம்பெனி இருந்தது. பாலாமணி புடவை என்றால் ஒரு மவுசு. பாலாமணி ஸ்பெஷல் என்று ரயில் விடுவார்கள்.

கிட்டப்பாவுடன் கே. பி. சுந்தராம்பாள் நடித்தது பிரசித்தம். முப்பது முப்பத்திரண்டுக்கு அப்புறம் எம். எஸ். விஜயாள், கே. டி. ருக்மிணி என்று பிரபல நடிகைகள் ஒரு நடிகை — பரம்பரையை ஆரம்பித்து வைத்தார்கள்.

முதலில் சொந்தக் கார் வாங்கிக் கொண்ட நடிகன் நான்தான் என்று நினைக்கிறேன். செல்வம், செல்வாக்குடன் நடிகர்கள் ஒழுக்கமும் பயபக்தியும் நிறைந்தே இருந்தார்கள். மரியாதை கொடுப்பதும் பெறுவதும் இந்தக் கலையுடன் சேர்ந்தது. இப்போதும் தினம் 1666 காயத்ரி ஜபிக்கிறேன். சத்காரியம், சுகஜீவனம், தேவி பூஜை என்று காலம் போகிறது.

## 'சோ':

'பி. எல்.' படிக்கும் வரை தமிழ் நாடகம் எதுவுமே நான் பார்த்ததில்லை. அக்கறையும் தோன்றவில்லை. இளவயதில் என் கவனம் எல்லாம் கவர்ந்தது கிரிக்கெட். ஆனால் கிரிக்கெட்டில் எதுவும் சாதிக்க முடியவில்லை. இதிலே எனக்கு 'டேலண்ட்' இல்லை என்பதைக் கண்டுபிடித்தேன்!

ஒய். ஜி. பி., பட்டு இருவரும் நடத்திய நாடகத்தைப் பார்க்க என்னைக் கட்டாயப்படுத்தி காத்தாயி கிட்டு அழைத்துப்போனார். அது எனக்குப் பிடித்திருந்தது. அவர்களுடன் பழக்கம் ஏற்பட்டது. நானும் அவர்களுடன் சேர ஆசைப்பட்டேன். சில்லறை வேஷங்கள் கொடுத்தார்கள். பட்டுவே எனக்கு வழிகாட்டி. எனக்கு மட்டுமல்ல, தற்காலத் தமிழ் காமெடி நாடகங்களுக்கு அவரே வழிகாட்டி என்று நினைக்கிறேன். எளிய இயல்பான நடிப்புக்கு வழிகாட்டியது அவரே.

எனக்கும் நாடகம் எழுத ஆசை. 'டாக்டர் வேஷதாரி' என்று ஒன்றை இரண்டு நாட்களில் வெறித்தனமாக எழுதி, ஒய். ஜி. பி , பட்டுவிடம் கொடுத்தேன். அதைத் தொலைத்து விட்டார்கள்! மறுபடியும் நினைவுபடுத்தி எழுதினேன். ராகவன், மாலி, வாதிராஜ் இவர்கள் குழுவில் நடிக்க எடுத்துக் கொண்டு ரிகர்சல் பார்த்தார்கள். நாடக அரங்கேற்றத்துக்கு நாள் வைத்தாயிற்று. கடைசியில் நாலே நாள் இருக்கும்போது அதை ரத்து செய்து விட்டார்கள். அன்று சைனாபஜாரில் ஒரு கடை வாசலில் உட்கார்ந்து நான் அழுதே விட்டேன். தேற்றியவர் ஜி. பி. எஸ். ''மோலியர் நாடகம்போல எழுதுகிறாய்'' என்று உற்சாகப்படுத்தினார். (மோலியர் பற்றி அப்போது கேள்விப்பட்டதில்லை) கடைசியில் அந்த நாடகத்தை ஒரு மணி நேர நாடகமாக்கி விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் நடித்தார்கள். இண்டர் காலேஜ் போட்டியில் முதல் பரிசும் பெற்றது. இதற்கு அப்புறம்தான் எனக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டது. விவேகா பைன் ஆர்ட்ஸ், இந்தக் கல்லூரி மாணவ நடிகர்களைக் கொண்டே தொடங்கப்பட்டது. அப்புறம் ஒவ்வொன்றாக இதுவரையில் மொத்தம் பன்னிரண்டு நாடகங்கள் எழுதி நடித்து வருகிறேன்.

நாங்கள் எப்போதும் காமெடியே போடுகிறோம். எங்கள் வெற்றியாலோ என்னவோ வேறு பல குழுவினரும் நிறையக் காமெடி நாடகங்கள் போடுகிறார்கள். ஒவ்வொருவருக்கும் தனக்கு என்று தனி முத்திரை இருந்தால்தான் சோபிக்கிறது.

மற்றவரைப் போல ஸ்டேஜ் டெக்னிக் பற்றி நான் கவலைப்படுவதில்லை. இவை யெல்லாம் ரசிகர் கவனத்தைக் கவர இல்லாது போனாலும் அவர்கள் நாடகத்தை ரசித்தால் அது தான் பெரிய வெற்றி என்று நினைக்கிறேன்.

சினிமாவுக்காக எழுதுவதாக நினைத்து, டூயட், டான்ஸ் என்றெல்லாம் இருக்கும் நாடகங்கள் சோபிப்பதில்லை.

சினிமாக் கதையும் காட்சிகளும் அதில் முதல் போடுவோர் (படாதிபதி — விநியோகஸ்தர்) அபிப்பிராயத்தையும் பொறுத்தது. ஆனால் நமது மனோபாவப்படி நாடகம் எழுதலாம், நடிக்கலாம். உடனுக்குடன் ரசிகர் அபிப்பிராயம் அறிந்தபடியே நடிப்பது நாடகத்தில்தான் காண முடியும். இது ஒரு தனி அனுபவம்தான். அதோடு புது முயற்சிகளைச் சோதனை செய்து பார்க்க முடிகிறது. என் நாடகங்கள் பற்றி யார் சொல்வதையும் கேட்பேன், யோசிப்பேன்.

நாடகங்களுக்கு இன்று ஜனங்கள் ஆதரவு இருக்கிறது. பத்து வருஷ காலத்தில் நாலைந்து மடங்கு கூட்டம் வருகிறது. ரசிக்கும் தரமும் உயர்ந்திருக்கிறது. நகரத்தைப் பொறுத்தவரை நாடக வளர்ச்சிக்கு முக்கிய காரணம் சபாக்கள்.

இன்றையச் சூழ்நிலையில் நாடகத்தால் நயா பைசா லாபம் இல்லை. பல நாடகக்



குழுவினருக்கும் இதே கதிதான்.

எதிர்காலமா? ரொம்ப காலம் ஒருத்தன் புகழ் தொடர்ந்து இருக்காது. என்றைக்கு மக்கள் ருசி மாறும் என்று சொல்ல முடியாது. மானசீகமாக இந்த நிலைக்கு நான் எப்போதும் தயார். ஆனால் நானாக ஆக நாடக உத்திகள் வளரும். உழைப்பாலும் அனுபவத்தாலும் லட்சிய நாடகங்கள் வரும்.

பேட்டி: **அம்பி ஆசிர்வாதம்**

---

அடுத்த பேட்டி: **கல்லூரி நாட்கள்**

# 007 பாலு

கதை: குமரன் படம்: விஜயா













நடித்து நடித்துப் பழகியவர்களுக்கு இயற்கையாக நடந்து கொள்வதே கடினம் போலும்! பாலு இப்படி எண்ணித் தனக்குள் சிரித்துக் கொண்டான்.









அந்தப் பெரிய பங்களாவில் பாலு சந்திரனையும் ஜாக்கியையும் மட்டுமல்ல வேறு ஏதாவது வினோதமாகத் தென்படுகிறதா என்றும் சுற்றி வந்து தேடினான். ஒரு பணக்கார நட்சத்திரத்தின் ஆடம்பரம் மிக்க வீடாக இருந்ததே ஒழிய விசேஷமாக ஏதும் அவன் கவனத்தைக் கவரவில்லை.




ஆனால் வாசலில் ஒரு கார்தானே நிற்கிறது?







தொடரும்.

# புதிய பெரிய டின் வாங்கி
# இலாபம் அடையுங்கள்

**நீங்கள் கொடுக்கும் விலைக்கு அதிக போர்ன்விடா கிடைக்கிறது.**

இந்தப் புதிய டின் வாங்கும்போது
நீங்கள் பருகும் ஒவ்வொரு
கப் போர்ன்விடாவிற்கும் குறைந்த
விலையே கொடுக்கிறீர்கள்.
பால், சர்க்கரை, மால்ட், கோகோ
இவை யாவும் நிறைந்த ஒரு போஷாக்கு
அளிக்கும் பானம் போர்ன்விடா.
குடும்பம் முழுமைக்கும் ஏற்ற உன்னத
உணவு பானம்

**சக்திக்கும் வலிமைக்கும்—**
*மற்றும் தீஞ்சுவைக்கும்*
*காட்பரிஸ்* **போர்ன்விடா!**




Bensons/1220 TAM



## காஷுவல் லீவ்

சிரிப்பதற்கு ஒரு நாடகம். காட்சிக்குக் காட்சி சிரிப்புத்தான். நாடகம் பார்க்கத் தொடங்கிச் சில நிமிஷங்கள் சென்றதும், நம்மையறியாமலே வாய்விட்டுச் சிரிக்க ஆரம்பித்து விடுகிறோம். அந்தச் சிரிப்பின் வேகத்தில் காட்சிகளை மறந்து விடுகிறோம்; காட்சிகளின் தொடர்புகளை மறந்து விடுகிறோம் ; பாத்திரங்களை மறந்து விடுகிறோம்; பாத்திரங்களின் தன்மையை மறந்து விடுகிறோம். ஏன் ? நாம் அமர்ந்திருக்கும் அரங்கையே மறந்து விடுகிறோம்.

சேகர் தன் காதலியைச் சந்திக்க ஆபீஸில் ஒரு நாள் 'காஷுவல் லீவ்' போடப் போக அது ஒரு பெரிய நாடகமாகிவிட்டது. அது மாத்திரமா? சேகரை ஆபீஸில் சேகராகவும், காதலியின் வீட்டில் சேகரின் கற்பனைத் தம்பி ஸ்ரீதராகவும் இரட்டை வேடம் போட வைத்தது. இந்த இரட்டை வேஷத்தைத் திறமையுடன் சமாளித்த நடிகர் சசிகுமார் பாராட்டுக்குரியவர். ஆபீஸ்மானேஜர் சிவோஹம் வைத்தியநாதன் மேடையில் தோன்றும்போதெல்லாம் ரசிகர்களின் சிரிப்பும் தோன்றிவிடுகிறது. தாம் துளியும் சிரிக்காமல் மற்றவர்களைச் சிரிக்க வைக்கும் ஆற்றல் அவரிடம் இயல்பாக அமைந்திருக்கிறது. ஆபீஸ் முதலாளி புருஷோத்தமன் பாகத்தை ஏற்ற நாராயணன் கம்பீரமாக நடித்தார். பாபு, மணி, ராஜு ஆகிய பாத்திரங்கள் கதாநாயகனைச் சுற்றிக் கொண்டிருக்கும் நண்பர் படை. அவர்கள் நாடகம் நடத்தியதோடு எல்லோரையும் சிரிக்கவும் வைத்தனர். வாடகையே வாங்காத வீட்டுக்காரராக வந்த ரமணன் தம் பாத்திரத்தை உணர்ந்து நன்றாய் நடித்தார்.

கதாநாயகி ஜயந்தியாக வந்த சந்திரா மேடைக்கேற்ற கவர்ச்சியும் பாத்திரத்துக்கேற்ற உணர்ச்சியும் கொண்ட நடிகை. ஆனால் இன்னும் பண்பட வேண்டும்.

விறுவிறுப்பான காட்சிகளும், சுறுசுறுப்பான பாத்திரங்களும் நிறைந்த இந்த நாடகம் பார்க்கக்கூடிய நாடகம்.

□ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ 

## காதலர் சுவர்க்கம்

இது ஒரு 'ஸீரியஸா'ன நாடகம்தான் என்றாலும், வேலைக்கார முத்துவின் ஹாஸ்யமான பேச்சு நாடகத்துக்கு நகைச்சுவை ஊட்டி அலுத்துக் கொள்ளாமல் முழுதும் பார்க்கச் செய்தது.

நடிப்புக்கு கே. ஆர். இந்திரா தேவியைக் கூற வேண்டும். தோட்டக்காரக் கன்னையனின் மனைவி காந்தமாகவும், அவன் மகள் புவனாவாகவும் இரட்டைவேஷம் தாங்கிப் பாராட்டும் வண்ணம் நடித்தார். எழுத்தறிவில்லாத ஏழைக் காந்தமாக வந்தபோது நடை, பேச்சு, பாவனை முதலியவைகளில் அசல் கிராமப்புறத்துப் பெண்ணாகவே மாறிவிட்டார். கதாநாயகி புவனாவாக வந்தபோது நல்ல நாகரிக யுவதியாகவே தோற்றம் அளித்து நாடகத்துக்கு உயிரூட்டினார்.

நாடகக் கதை கொஞ்சம் சிரமமானதுதான். தோட்டக்காரனின் மனைவியோடு தொடர்பு கொண்டு விட்டதாகக் கொண்ட கணவனையே மனைவி குற்றம் சாட்டுவது மிகவும் கொடுமையானதுதான். ஆனால், மில் முதலாளியாக வந்த டாக்டர் கே. கணேஷும், அவர் மனைவி அன்னபூரணியாக வந்த எஸ். ஐ. ராணியும் தங்கள் சிறந்த நடிப்பினால் அந்தக் கொடுமையைச் சுவையாக்கித் தந்தனர் !

நாடகத்தில் தோட்டக்காரக் கன்னையனின் பாத்திரம் மிகவும் தர்மசங்கடமானது. அதை ஏற்றவர் அருமையாக நடித்தார். நாடகத்தின் சிக்கலையும் 'சஸ்பென்ஸை'யும் தீர்த்து வைத்து நல்ல முறையில் நாடகத்தை முடித்து வைக்கும் பாத்திரம் சம்பந்தம். அவர் மட்டும் இல்லையென்றால், நாடகத்தில் வரும் சந்தேகங்களும், அவதூறுகளும் தீர்ந்திருக்கவே முடியாது. அவரும் மிக நன்றாக நடித்தார். கதாநாயகனாக நடித்த எம். ஜி. ராஜனுக்கு இந்நாடகத்தில் அதிகமாக வாய்ப்பில்லை என்றாலும் அவர் நடிப்பில் ஒரு மெருகும், எடுப்பான தோற்றமும் இருந்தன. கதை, வசனம், டைரக்ஷன் எல்லாம் ''மாயாவி''யின் பொறுப்பு. பாராட்டுக்குரிய முறையில் செய்திருக்கிறார்.



'அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?'

# டினோபால்

## வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது

துவைத்த துணிகளை அலசுவதற்கு முன் நீரில் சிறிதளவு டினோபால் சேர்த்தால், சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது— ஷர்ட்டுகள், புடவைகள், படுக்கை விரிப்புகள், டவல்கள் எல்லாம்!

இத்தனைக்கும் ஆகும் செலவுதான் என்ன? துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவே! துணிகளைப் பாழாக்காமல் சாஸ்திரீய முறையில் வெண்மை பளிச்சிடச் செய்வது டினோபால்.

டினோபாலின் மற்ற பேக்குகள்,




ஒரு வாளித் துணிக்கு ஒரு பேக்கெட்




புதிய எகானமி பேக்




சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த. பெ. 965, பம்பாய் 1 பி.ஆர்.
®டினோபால் என்ற பெயர் ஜே. ஆர். கெய்கி எஸ். ஏ. பாஸல் ஸ்விட்ஜர்லாந்து ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.






விளையாட்டு

## கோட்டை கட்டுவோம்

பொழுது போகவில்லையா? பள்ளிப் பாடங்கள் அலுப்புத்தருகின்றனவா? அப்படியென்றால் இதோ கடக் கட ஒரு விளையாட்டு. அருகே வரைந்திருப்பது போல அட்டையிலே பெரிதாக வரைந்து ஒரு விளையாட்டுப் பலகையைத் தயார் செய்து கொள்ளுங்கள். வட்டங்களெல்லாம் ஒரே அளவாக இருக்க வேண்டும். ஒருவர் ஐந்து பைசா நாணயங்களில் ஐந்தையும், மற்றவர் பத்துப் பைசா நாணயங்களில் ஐந்தையும் தங்கள் காய்களாகப் பயன்படுத்தலாம். ஆட்டக்காரர் தன் காய்களில் ஒன்றைத் தன் ஒவ்வோர் ஆட்டத்தின் போதும் பலகையில் உள்ள கட்டங்களுள் ஒன்றில் வைக்க வேண்டும். ஒவ்வோர் ஆட்டக்காரரும் தன் நாணயங்களான காய்கள் ஒரு நேர்க் கோட்டில் வரும்படி வைக்க முயல வேண்டும். இப்படி ஒருவருடைய காய்கள் அமையுமானால் அது ஒரு கோட்டையாகும். அப்போது அவர் எதிராளியின் காய்களில் ஏதாவதொன்றைத் தன் காணிக்கையாக எடுத்துக் கொள்ளலாம். அப்படி எடுக்கப்படுவது எதிராளி உருவாக்கியிருக்கும் கோட்டையின் ஒரு காயாக இருக்கக் கூடாது. பத்துக் காய்களும் விளையாட்டுப் பலகையில் வைக்கப்பட்ட பிறகு ஆட்டக்காரர்கள் தங்கள் காய்களை நேர்க் கோட்டின் வழியாக அடுத்துள்ள வட்டப் பகுதிக்கு நகர்த்தி விளையாடலாம். தாவிச் சென்று இடத்தைப் பிடிப்பது கூடாது. ஓர் ஆட்டக்காரர் ஒரு கோட்டையை உருவாக்கினால் அவருக்கு எதிராளியின் கோட்டைப் பகுதியாயில்லாததோர் காய் காணிக்கையாகத் தரப்பட வேண்டும்.



ஒரு ஆட்டக்காரர் தம் காய்கள் எதையும் நகர்த்த முடியாத நிலையில் சிறைப்பட்டாரானால் எதிராளி தொடர்ந்து — சிறைப்பட்டவர் விடுதலை பெறும் வரை தன் காய்களை நகர்த்தி விளையாடலாம். எதிராளியிடம் இரண்டே காய்கள் இருக்கும்படி செய்பவரே வெற்றி பெற்றவராவார். இதை விளையாடும் பொழுது உங்களுக்கே புதுப் புது விதமான முறைகளும் உற்சாகமும் கூடும். ரொம்ப சுவாரஸ்யமான விளையாட்டு.





## முத்தமிழும் மூன்றும்!

செந்தமிழ் நாட்டின் மூவேந்தர்
சேர சோழ பாண்டியராம்!
சிந்தை விரும்பும் முக்கனிகள்
சிறந்த வாழை, மா, பலாவாம்!

முத்தமிழ் மொழியின் முப்பிரிவு
இயல்இசை நாடகம் என்பனவாம்!
முத்தமிழ் மன்னர் ஆண்டகொடி
முக்கொடி: வில், புலி, மீன்ஆகும்!

முத்தமிழ் இசையின் முக்கருவி
முழவு, யாழ், குழல் என்பனவாம்!
முத்தமிழ் மன்னர் மாலைகளோ
வேம்பு, ஆத்தி, பனம்பூவாம்!



முத்தமிழ் நாட்டின் தலைநகரம்
வஞ்சி, மதுரை, பூம்புகாராம்!
முத்தமிழ்க் குறளின் முப்பிரிவு
அறம் பொருள்இன்பம் என்பனவாம்!

— தமிழ் முடி



## அனல் பறவை !

நெருப்புக் கோழியைத்தான் கேட்டிருக்கிறோம். இது என்ன அனல் பறவை என்கிறீர்களா ? லத்தீன் மொழிகளில் 'பிளாமா' என்றால் 'பிளேம்' (அனல்) என்று பெயர். இளஞ் சிவப்பும் வெளுப்பும் கலந்த நிறத்தோடு கூடியதொரு பறவையை நீங்கள் மிருகக் காட்சி சாலைகளில் பார்த்திருக்கலாமே. இதற்கு 'பிளேமிங்கோ' என்று பெயர். வாத்து இனத்துக்கு நெருங்கிய உறவு இந்த அனல் பறவை. கொக்கைப் போன்ற நீண்ட கழுத்து, கால்கள். இந்தப் பறவையின் அபூர்வமான அமைப்பு இதன் அலகுதான். மற்ற பறவைகளைப் போல் இதன் அலகின் அமைப்பு இல்லை. கீழ்ப் பகுதி ஒரு பெட்டியைப் போலக் குழிவாகப் பெரிதாக இருக்கும். மேல் பகுதி அதன் மூடியைப் போல மெல்லியதாக அமைந்திருக்கிறது. நீருக்குள் தலையைப் புகுத்தி இந்த அலகை முன்னும் பின்னும் அசைவாட வைக்கும். சேற்றினுள்ளிருக்கும் பூச்சிகளை — ஷெல் பிஷ், கிழங்கு, செடிகள் ஆகியவைகளைக் கிளப்பிவிடும். இவை கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து வாழும் குணமுடையவை. இவை ஆழமில்லாத நீர்ப் பகுதிகளில் கூடு கட்டும். அது பார்க்கப் பூந்தொட்டியைப் போலிருக்கும். இன்னும் சில நீர் நிலைகளின் ஓரத்தில் பெரிய தாம்பாளம் போன்ற கூடுகளைக் கட்டும். கூட்டின் மேல் பகுதி குழிவாகக் கிண்ணம் போன்றிருக்கும். இதில் பெண் பறவை இரண்டு வெள்ளை முட்டைகளை இடும். குழந்தை பிளேமிங்கோவுக்குக் குட்டையான நேரான அலகுதான்; வாத்தைப் போல. வயது ஆக ஆகவே கீழ்த்தாடை அலகு பெட்டி போல உருப் பெறுகிறது. நன்றாக வளர்ந்த பிளேமிங்கோ நிமிர்ந்து நின்றால் ஐந்தடி வரை இருக்கும். பறக்கும் போது மூக்கு நுனியிலிருந்து பின்னோக்கியிருக்கும் கால் நுனி வரை ஆறடி இருக்கும். பார்ப்பதற்கு அழகற்ற இந்தப் பறவை ஆழமான நீரில் அற்புதமாக நீந்தும் ஆற்றல் படைத்தது.

## மாய எழுத்துக்கள் !

உங்கள் நண்பர்கள் பார்த்து வியக்கும் வண்ணம் ஒரு வித்தை செய்யலாம்! நண்பர்கள் வருவதற்குள் பின்வருமாறு தயார் செய்து கொள்ளுங்கள். ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியை எடுத்துக்கொள்ளுங்கள். தண்ணீரில் நனைத்த ஒரு வெள்ளைக் காகிதத்தை எடுத்துக் கண்ணாடியின் மேல் சுருக்கமில்லாத படி வைத்துக் கொள்ளுங்கள். அதே அளவுள்ள மற்றொரு ஈரமில்லாத வெள்ளைக் காகிதத்தை அதன் மேல் வைத்துவிடவும். மேலே வைத்த காகிதத்தில் ஒரு பென்சிலால் உங்கள் நண்பனின் பெயரை எழுதவும். அதாவது கோபு என்ற பெயருடைய நண்பன் இருந்தால் 'கோபு' என்றெழுதவும். எழுதி முடித்த பின் இரண்டாவதாக வைத்த காகிதத்தை (நீரில் நனைக்காமல் வைத்த காகிதம்) எடுத்துக் கிழித்து எறிந்துவிடவும். பிறகு ஈரமான காகிதத்தை (முதலில் வைத்தது) கண்ணாடியிலிருந்து எடுத்துப் பார்த்தால் அதிலும் 'கோபு' என்ற சொல் விழுந்திருக்கும். அந்தக் காகிதத்தை வெயிலில் நன்றாகக் காயவைக்க வேண்டும். நன்றாகக் காய்ந்த அந்தக் காகிதத்தில் முன்பு இருந்த எழுத்துக்கள் மறைந்துவிடும்! இப்போது 'கோபு' உள்பட உங்கள் நண்பர்களை அழைக்கவும்.

அவர்களிடம் இந்தக் காகிதத்தைக் காண்பிக்கலாம். அவர்கள் பார்த்துவிட்டு, ''இது வெறும் காகிதம். ஒன்றும் எழுதவில்லை'' என்று கூறுவார்கள். கோபுவிடமும் காண்பித்து, 'டேய், கோபு! இந்தக் காகிதத்தை நன்றாகப் பார்த்துக் கொள். வெத்துப் பேப்பர்தான். ஆனால் இதோ ஒரு நிமிடத்தில் உன் பெயரை இந்தப் பேப்பரில் வரவழைக்கிறேன், பார்! மறுபடியும் வேண்டுமானாலும் பார்த்துக் கொள், இந்தா பேப்பர்' என்று சவால் விடுங்கள். அவனும் வாங்கிப் பார்த்து ஒன்றும் எழுதவில்லை என்று சொல்வான். மற்றவர்களும் மிக ஆவலோடு பார்த்த வண்ணம் இருப்பார்கள்!

பிறகு ஓர் அகலப் பாத்திரத்தில் நீரை எடுத்து இந்தப் பேப்பரை நனைத்து எடுங்கள். 'பளிச்'சென்று எழுத்துக்கள் தோன்றும்! நண்பர்களிடமும் காண்பியுங்கள். 'கோபு' என்ற சொல் அதில் புலப்படும். எப்படி வித்தை? 'எப்படிடா...எப்படிடா?' என்று கேட்கும் உங்கள் நண்பர்களிடமும் மந்திரமல்ல இது, தந்திரம் என்று விளக்கிச் சொல்லிவிடுங்கள், பாவம்!

— சுதாகரன்.



அத்தியாயம் பதினாறு

## ஒரு 'மனிதன்' இறக்கிறான்!

அன்னபூரணியம்மாள் தன் மைந்தன் மூத்துசிவனின் இப்போதைய போக்கைக் கண்டு இரண்டாவது தடவையாக வியப்பும் கவலையும் அடைந்தாள். மூன்று மாதங்களுக்கு முன்னுங்கூட அவன் இதேபோல் வேறொன்றுக்காக வியப்படைந்து, பிறகு அதையே மகிழ்ச்சியாக மாற்றிக் கொண்டவள் தான்.

அப்போது மூத்துசிவன் தினமும் காரியாலயத்திலிருந்து வீட்டுக்கு வந்ததுமே நன்றாக உடை உடுத்திக் கொண்டு காப்பி — டிபனுக்காகக் காத்திராமல் — அல்லது அவை தயாராக இருந்தாலும் சாப்பிட உட்டாள். ஆமாம்; தன் பிள்ளை இப்போது முன்போல் அடைந்து கிடக்க விரும்பாமல் பொழுது போக்குக்காகவும், மனச் சந்துஷ்டிக்காகவும் கடற்கரை, சினிமா, நாடகம் என்று இப்படிப் போய் வரத் தலைப்பட்டிருக்கிறான் என்பது அவளுக்குப்புரிந்து விட்டது. பெற்ற மனம் அல்லவா? பிள்ளையின் அந்தப் புதிய போக்குக்காக அவள் கொஞ்சங்கூடக் கவலையோ, சுசப்போ, வருத்தமோ கொள்ளவில்லை; மாறாகப் பரம சந்தோஷமே அடைந்தாள்.



# கிளிஞ்சல் கோபுரம்

ஜெயகாந்தன்

காராமல்—அவசரம் அவசரமாக வெளியில் செல்லத் தொடங்கியதைக் கண்டே அப்படி முதலில் வியந்தாள்.

'இது என்ன புதுப் பழக்கம்? இவ்வளவு காலமாக வீட்டை விட்டால் காரியாலயம், காரியாலயத்தை விட்டால் வீடு என்று இருந்து வந்த பிள்ளையாண்டான் இப்போது வீட்டில் கொஞ்ச நேரங்கூடத் தங்காமல், ஏதோ தலை போகிற காரியத்தைக் கவனிக்கச் செல்கிறவன்போல் வெளியில் கிளம்பி விடுகிறானே! மாலை ஐந்தரை மணிக்குப் புறப்படுகிறவன் இரவு வீடு வந்து சேரப் பத்து, பதினொன்றுக்கு மேல் ஆகிறது! ஒரு நாள் தவறாமல் வெளியே போக வேண்டிய அவசியம் அவனுக்கு என்ன வந்து விட்டது? எதற்காக இப்படி ஓடுகிறான்? யாரைப் பார்க்கப் போகிறான்? எங்கே செல்கிறான்?'

இவ்வாறெல்லாம் எண்ணிக் குழம்பிய அவள் சில தினங்களுக்குள்ளாகவே அதன் காரணத்தைச் சரியாகத் தெரிந்து கொண்டு விட்

'குருவித் தலையில் பனங்காயைச் சுமத்தினாற்போல் எதற்கும் உதவாத என்னையும், சின்னஞ் சிறிசுகளாயிருந்த நாலு பிள்ளைகளையும், கடனிலே மூழ்கிக் கிடந்த இந்த வீட்டையும் அவன் தலையிலே சுமத்தி விட்டுப் போய் விட்டார் அந்தப் புண்ணியவான். அப்போது இவனுக்கு வயசு என்ன? இருபத்திரண்டுகூட முழுசாக முடியாத குருத்துப் பருவம். ஆனாலும் அவன் அவ்வளவு பெரிய சுமையைக் கொஞ்சங்கூடத் தயங்காமல் தாங்கிக் கொண்டானே! அப்படிச் சுமக்கக் கூடிய பிள்ளையாக இல்லாதிருந்தால் என்னுடையவும் எனது மற்ற பிள்ளைகளுடையவும் கதி என்ன ஆகியிருக்கும்? தெருவில் நின்று பிச்சை எடுத்திருப்போம்; இல்லையானால் எங்கேயாவது குளம் குட்டையில் எல்லாரையும் தள்ளி நானும் விழுந்து உயிரை மாய்த்திருப்பேன். இவ்விரண்டைத் தவிர எனக்கு அப்போது வேறென்ன செய்யத் தெரியும்?.... ஒரு சுமையைச் சுமந்து

நிற்பதே கடினம்; அப்படிச் சுமந்ததை இடைவழியில் இறக்கிப் போட்டு விடாமல் இறுதி வரையில் கொண்டு போய்ச் சேர்ப்பது இன்னும் கடினம் அல்லவா? அதையும் பக்கத் துணையோ, பாதுகாப்போ இல்லாமல் தனித்து நின்று சுமந்து செல்வது மிக மிகக் கடினம். அப்போது இந்தக் குடும்பத்தின் நிலை என்ன? தரையில் துவண்டு சரிந்த கொடியாகக்கூட அல்ல, பள்ளத்தில் சாய்ந்துவிட்ட மரம்போல் அல்லவா கிடந்தது? சரிந்த கொடியை எடுத்துக் கொழுகொம்பில் ஏற்றிப் படரவிடுவது எளிது; பள்ளத்தில் சாய்ந்து விட்ட மரத்தைத் தூக்கி நிறுத்துவது அத்தனை எளிதானதா? அப்படியே தூக்கி நிறுத்தினாலும் அந்த மரத்தை மீண்டும் வேர் பிடித்துத் துளிர்த்துத் தழைத்துப் பூவும் காயும் கனியுமாகக் குலுங்கச் செய்வதென்பதோ?..... அப்பப்பா! இந்த அரும் பெரும் சாதனையை என் அருமை மகன் ஆற்றி முடிக்கப் பட்ட பாடுகள் கொஞ்சமா, நஞ்சமா? இந்தப் பாவியின் வயிற்றில் தலைப் பிள்ளையாகப் பிறந்த பாவத்துக்காக அவன் இவ்வளவும் பட வேண்டியதாகியது!... பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஓடி ஓடிச் சுருண்டு விட்டன பதினாறு ஆண்டுகள். அவனும் இப்போது வாலிபத்தைக் கடந்து வயசு முப்பத்தெட்டில் வந்து நின்று கொண்டிருக்கிறான். இந்த வயசுக்குள் அவன் எத்தனை எத்தனையோ இன்பங்களைக் கண்டிருக்க வேண்டும்; சுகங்களை அனுபவித்துக் கழித்திருக்க வேண்டும். ஆனால் அவனோ, வெந்த சோற்றையும் 'வெள்ளைச் சட்டை வேட்டியையும் தவிர வேறொன்றையும் கண்டதில்லை; காண விரும்பியதும் இல்லை. கேவலம், ஒரு ஹோட்டலுக்கோ, சினிமாவுக்கோ, நாடகத்துக்கோகூடப் போனது கிடையாது. இப்படிப் புதைகுழியில் இறங்கி மீளும் வல்லமை வாய்ந்த ஒரு ஹடயோகியைப் போல் தன் வாழ்க்கையைப் பல கடினமான கட்டு திட்டங்களோடு அமைத்துக் கொண்டு அவற்றிலிருந்து இம்மியும் வழுவாமல் வாழ்ந்து வந்த அவன், இதுகாறும் தான் சுமந்து சென்ற சுமைகளை இறக்க வேண்டிய இடத்தில் இறக்கிச் சேர்த்து விட்டு இப்போதுதான் நிமிர்ந்திருக்கிறான். இதனால் இதுவரையில் அடக்கி ஒடுக்கி வைத்திருந்த அவனுடைய உடலும் மனமும் எவ்வளவுக்குச் சோர்ந்தும், தளர்ந்தும், நலிந்தும் போயிருக்கும்! அந்தச் சோர்வையு



தளர்ச்சியையும் நலிவையும் போக்கிக் கொள்ள முயல்வது தவறா? தன் புண்பட்ட உடலுக்குச் சிறிதளவு புனுகுப் பூச்சுத் தேடியோ, மரமரத்துப் போன மனத்துக்குச் சற்றே இத வளியை நாடியோ போவது பிசகா?'

முத்துசிவனின் புதிய போக்கு பற்றித் தாய் மனத்தின் கட்டுக் கடங்கா அன்புப் பெருவெள்ளத்திலிருந்து இத்தகைய எண்ணத் திவலை

களே நுரைத்துப் பொங்கின. இதனால் அவனுடைய உல்லாச வெளிச் சுற்ற லுக்குத் தன்னால் ஆன அளவு அநு சரணையாக 'இருந்து உதவவும் முற் பட்டாள் அவள்.

ஆமாம்; முத்துசிவன் தினமும் மாலை ஆபீசிலிருந்து வீடு திரும்பியபின். வெளியில் செல்லத் தோதாக அவ னுக்குப் பிடித்தமான பேண்ட், ஷர்ட், டை, காலணி, சாக்ஸ், பெல்ட், ரூபாத்தான் முதலானவற்றைத் தயா ராக எடுத்து வைத்திருப்பது, அழுக் காகும் ஆடைகளை உடனுக்குடன் சலவைக்கு அனுப்பி வாங்கி வைப் பது, இரவு எத்தனை மணியானாலும் அவன் வரும் வரையில் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு காத் திருப்பது, வந்ததும் குளிக்க வெந்நீர் போட்டு வைப்பது, அவனுடைய நேரமும் கவனமும் வீட்டுக் காரி யங்கள் எதிலும் செலவழிய விடாமல் தானே முழுக்கவும் பார்த்துக் கொள் வது — என்று இன்னும் பலவகையிலும் உதவுபடியாக இருக்கலானாள்.

இப்படி மூன்று மாத காலம் ஓடிய பின் திடீரென்று முத்துசிவனின் போக் கில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அதா வது, கடந்த நாலைந்து தினங்களாக அவன் வெளியில் எங்கும் போகாமல் வீட்டிலேயே அடைந்து கிடந்தான். ஓரிரு தினங்கள் பொழுது போனபின் திடுமென்று எங்காவது புறப்படுவான்; ஆனால் போன சற்றைக்கெல்லாம் திரும்பி விடுவான். சில சமயம் அவசரம் அவசரமாக உடை உடுத்திக்கொண்டு கிளம்பி வாசல் வரை யில் விரைந்து போய்ச் சட்டென்று நின்று ஒரு கண யோசனைக்குப் பின் திரும்பி வந்து உடை களைக் களைந்தெறிந்து விட்டு உட்கார்ந்து விடு வான். முன்போல் அவன் உற்சாகமாகவும் மகிழ்ச் சியுடனும் காணப்படுவ தில்லை. களைப்பும் சோர்வு மாக, வெறுப்பும் சலிப்பு மாக, எதையோ பறி கொடுத்தவன் போல வும், ஏதோ ஒன்று கிட் டாது தவிப்பவன் போல வும் தோன்றலானான். சில சமயம் அமைதி யிழந்தவன் மாதிரி தன் அறைக்குள்ளாகவே ஓயா மல் உலாவிக் கொண் டிருப்பான்; சில போது வராந்தாவில் சாய்வு நாற்காலியிலே சாய்ந்து கொண்டு மணிக்கணக் கில் சிந்தனையிலாழ்ந்து கிடப்பான். இரவில் சரி யாகத் தூங்குவதில்லை. அவனுடைய அறையில் நடு ஜாமத்துக்கு மேலும் விளக்கு எரிந்து கொண் டிருக்கும். சில தினங்கள் விளக்கைப் போடுவதும் அணைப்பதுமாக இருப்பான். நேற்றிரவு விடிய விடிய விளக்கு எரிந்து கொண்டே இருந்தது.



பிள்ளையின் இவ்விசித்திரப் போக் கைப் பார்த்தே அன்னபூரணியம்மாள் இரண்டாவது தடவையாக வியப்பும் திகைப்பும் அடைந்தாள். இப்போது அவளால் அவனது இந்தப் புதிய போக்குக்கான காரணங்களை அவ் வளவு எளிதில் கண்டுபிடித்து அவற் றுக்கு அநுசரணையான சமாதானங்

களைத் தேடிக் கொள்ள முடியவில்லை. அதனால் அவனுக்கு எப்படி விரக்தி, திகிலாகவும் குழப்பமாகவும் மாறத் தொடங்கியது.

அன்று மாலை வழக்கம் போல் மூர்த்துசிவன் ஆபீஸிலிருந்து வந்து வீட்டிலேயே காப்பி — டிபனை முடித்துக் கொண்டு வராந்தாவில் அமர்ந்து தெருவை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனுக்கு என்ன வந்து விட்டது? இப்பொழுதெல்லாம் அவன் ஏன் உல்லாசமாகப் பொழுதைப் போக்க வெளியில் எங்கும் போவதில்லை ?

அதற்கு அப்படி ஒன்றும் பெரிய காரணம் இல்லை. எவ்வளவுக்கு எவ்வளவு தீவிரமாகப் பொழுது போக்குக்கான இடங்களை நாடிப் போனானோ, அவ்வளவுக்கவ்வளவு வேகமாக அவற்றில் வெறுப்பும் சலிப்பும் ஏற்பட்டு விட்டன. அதனாலேயே அவன் எங்கும் போகாமல் வீட்டில் உட்கார்ந்து விட்டான்.

என்ன இது வேடிக்கை ! சினிமா, நாடகம், பீச்சு இவையெல்லாம் உடலுக்கும் மனத்துக்கும் உற்சாகம் தரக் கூடிய அற்புத ஜீவகல்பங்கள் என்று எண்ணித் தினந் தினம் ஆயிரமாயிரம் மக்கள் அவற்றை நாடி ஓடிக் கொண்டிருக்கும்போது இவனுக்கு மட்டும் அவற்றில் இவ்வளவு சீக்கிரம் சலிப்புத் தட்டி விட்டதென்றால் அது வேடிக்கை இல்லையா ? இல்லை; அப்படிச் சலிப்பும் வெறுப்பும் அடைய ஒரு சரியான காரணம் இருக்கவே செய்தது.

அவன் பலவிதமான ஹோட்டல்களுக்குப் போனான்; பல வகையான சினிமா, நாடகங்களைப் பார்த்தான். எண்ணூர், சேப்பாக்கம், மெரினா, சாந்தோம், எலியட்ஸ், கோவளம், மகாபலிபுரம் என்றுள்ள கடற்கரைகளுக்கெல்லாம் சென்றான். ஆரம்ப நாட்களில் அவை புதுமையாகவும், சுவையாகவும், உற்சாகம் தரக் கூடியனவாகவுமே இருந்தன. ஆனால் நாளாவட்டத்தில் அங்கெல்லாம் போகும் போது அவனையறியாமலே ஓர் ஏக்கம் சூழ்ந்து கொண்டது. அந்த ஏக்கம் எதனால் ஏற்படுகிறது என்ற காரணத்தையும் அவன் வெகு சீக்கிரமே புரிந்து கொண்டு விட்டான்.

ஹோட்டல்களில் உண்ண வருவோர்களில் பெரும்பாலோர் தங்கள் நண்பர்களுடனோ, உறவினர்களுடனோ, — மனைவி மக்களுடனோ, நிஜ — அல்லது, வாடகை — காதலிகளுடனோதான் வந்தார்கள். இப்படிக்கில்லாமல் தனியாக வருகிறவர்கள் தம் வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்வதற்காக வந்தார்கள். இவனைப் போல் யாரும் உல்லாசத்துக்காகத் தனியாய் வருவதாகத் தெரியவில்லை. அதனால் இவன் அங்கே உண்பதையும் பருகுவதையும் ஒரு வேலை போல் செய்து முடிக்க வேண்டியவனானான்.

நாடகக் கொட்டகைகளிலும், சினிமாத் தியேட்டர்களிலும், பீச்சுகளிலும்கூட இதே நிலைமைதான். அவ்விடங்களில் இவனைப் போல் நிறையப் பேர் தனியாக வரத்தான் செய்தார்கள். ஆனால் அவர்களெல்லாம் அந்தத் தனிமையை விரும்பி அதற்காகவே திட்டமிட்டுக் கொண்டு வந்தவர்கள்போல் தோன்றினார்களே தவிர இவன் மாதிரி துணைக்கு வக்கில்லாமல் தனியாய் வந்து வெட்டு வெட்டென்று உட்கார்ந்திருப்பவர்களாகத் தெரியவில்லை.

சுவையான உணவுகள், ரஸமான காட்சிகள், உணர்ச்சியூட்டும் கலை நிகழ்ச்சிகள், இதம் தரும் வெப்ப—தட்பங்கள் — இவற்றையெல்லாம் தனியாக, தனித்திருந்து, ஒருவனே எவ்வளவுதான் ருசிப்பது, ரசிப்பது, பார்ப்பது, அநுபவிப்பது? இதனாலேயே அவனுக்கு அவற்றில் வெகு சீக்கிரம் வெறுப்புத் தட்டிவிட்டது !

இந்தத் தர்மசங்கடத்துக்குத் தீர்வு காண அவனால் இயலவில்லை. இனி என்ன செய்வதென்றும் புரியவில்லை. ஆனால் இதற்கு ஏதேனும் வழி கண்டாக வேண்டும் என்ற தெளிவற்ற வேட்கை மட்டும் அவனுள் கிளர்ந்து கொண்டேயிருந்தது.

இவ்வேட்கைக் கிளர்ச்சியினாலோ என்னவோ அவனுக்குச் சகுனாவின் நினைவு அடிக்கடி வந்தது. இத்தனை நாட்களும் அவளை நினைக்காமலே இருந்து விட்டான். அவள்மீது கொண்ட வீம்பின் காரணத்தாலோ அல்லது சினிமா, நாடகம், பீச்சு என்பன போன்ற உல்லாசப் பொழுது போக்குகளை ஒரேயடியாக அநுபவித்துவிட வேண்டும் என்பதில் ஏற்பட்ட ஒரு குழந்தைத்தனமான ஆர்வத்தின் காரணத்தாலோ அவளை அவன் தன் மனத்தளவில் அலட்சியப்படுத்திவிட்டிருந்தான். ஆனால் இப்போதும்கூட அவளுடைய நினைவு வரும்போதெல்லாம் அவனுக்கு அவள்மீது கோபமே மூண்டது.

'இத்தனை நாட்களாகியும் என்னை அவள் வந்து பார்க்கவில்லையே ! அவ



''இரண்டு பேருக்கும் சேர்த்து ஒரு டிக்கட்தான் வாங்குவேன் என்ருல் என்ன அர்த்தம் ?''

''நாங்கள் ஈருடல் என்ருலும் ஓருயிர்!''

ளுக்குத்தான் எவ்வளவு பிடிவாதம், வீம்பு, தலைக்கனம் !'

இவ்வாறு குமுறிப் பொங்கிய அவன் மனத்தில் வேருேர் எண்ணமும் குறுக்குச் சால் பாய்ச்சியது: 'ஆமாம்; என்னைப் போல் அவளும் அறிவில், அநுபவத்தில், வயதில் வளர்ச்சி அடைந்திருப்பாள் அல்லவா ? என்னை மட்டும் நான் பெரிய மனிதனுக நினைத்துக் கொண்டு அவளை இன்னமும் பழைய சின்னப் பெண்ணுகவே மதிப்பது சரியாகுமா ? நான் இப்போது அவள் விஷயத்தில் காட்டி வரும் பிடிவாதத்தைப் போல் அவளும் என்னிடம் வீம்பாக இருப்பதில் என்ன தவறு ?'

சற்றே சினம் தணிந்த அவன் மற்ெருரு கேள்வியையும் தனக்குத்தானே கேட்டுக் கொண்டான்: 'ஒருகால் நான் நினைப்பது போல் என் மீது அவள் எவ்வித கோபமோ, வீம்போ கொள்ளாமல், எனது வருகையை எதிர்பார்த்துப் பொறுமையுடன் காத்துக் கொண்டிருக்கலாம் அல்லவா ?'

தனிமை ஏக்கத்தில் புகைந்து கொண்டிருந்த அவனுக்கு இந்த எண்ணம் சற்று ஆறுதல் தந்தது. ஆயினும் இத்தனை நாட்கள் தோன்ருத இவ்வெண்ணம் இப்போது ஏன் தோன்றியது என்று சிந்தித்தான். உடனே அதற்குரிய காரணம் புரிந்துவிட, அதை மேலும் புலப்படுத்திக் கொள்ள வெட்கப்படுகிறவன் போல் ஒரு கள்ளச் சிரிப்பு சிரித்துக் கொண்டான்.

'அவளைப் போய்ப் பார்க்கலாமா? இப்போது மணி ஆறுக்குமேல் ஆகிவிட்டது. இந்நேரத்தில் பார்க்க அவளுடைய வீட்டுக்குத்தான் போக வேண்டும். அங்கே போவது அவ்வளவு உசிதமாயிராது. சரி; நாளை மாலை அவள் பள்ளியிலிருந்து வரும்போது வழியில் எப்படியும் சந்தித்து விடலாம்.'

முத்துசிவனின் மனத்தில் மீண்டும் தனிமை ஏக்கம் கவிந்து கொள்ள, பெருமூச்சு விட்டவனுய்ச் சாய்வுநாற்காலியில் சாய்ந்தான்.

''குட் — ஈவினிங், சார் !''

சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தான் முத்துசிவன். வராந்தாப் படியில் ரட்சகன் வந்து தயக்கப் புன்முறுவலுடன் நின்று கொண்டிருந்தான். எப்போதும் போல் 'டிப் — டாப்'பாக உடை உடுத்தி உற்சாகமாகத் தோற்றம் அளித்த அவன் கையில் வழக்கம் போல் நாடக வசனங்கள் அடங்கிய ஒரு ஃபைலும் இருந்தது.

நேரத்தைப் போக்க வகை தெரியாமல் சூன்யப்பட்டுக் கிடந்த மனத்துடன் சோர்ந்து சாய்ந்திருந்த முத்துசிவன் ரட்சகனைப் பார்த்ததும் ஏதோ புதையல் கிடைக்கப் பெற்றவன் மாதிரி மகிழ்ச்சித் துள்ளலிட்டு நிமிர்ந்து, ''அடடே, வாப்பா ! என்ன, ரொம்ப நாளாக வராமலே இருந்துட்டே ? நாடக வேலைகள் அதிகமோ?'' என்ருன் கலகலப்பான குரலில்.

''ஆமாம், சார் ! இப்பக்கூட ஓர் அவசர காரியமாய்ப் போய்க்கிட்டிருந்தேன். போற போக்கிலே தெருவிலிருந்து பார்த்தப்ப இங்கே உங்க தலை தெரிஞ்சது. அதுதான் சும்மா ஒரு 'லுக்' கொடுத்துட்டுப் போகலாம்னு வந்தேன்'' என்று அமர்த்தலாகக் கூறிச் சிரித்தான் ரட்சகன்.

''தெரியுமே! நீ எப்போதும் பிஸியாகத்தான் இருப்பாய்; இப்படி உட்கார் !'' என்று தன் எதிரில் இருந்த பிரம்பு நாற்காலியைக் காட்டினுன் முத்துசிவன்.

டைட்ஸ் அணிந்திருந்த ரட்சகன் அந்த நாற்காலியை ஓரக் கண்ணுல் பார்த்துக் கொண்டே ஜாக்கிரதையுடன் சற்றுப் பின்னுல் நகர்ந்தபடி, ''பரவாயில்லை, சார் ! உங்கள் தனிமைக்கு இடைஞ்சல் பண்ணிட்டேன்னு நினைக்கிறேன். மன்னிக்கனும். இன்ெனுரு நாள் அவசியம் வரேன் '' என்ருன்.

''இன்றைக்கு விசேஷம் ஒன்னுமில்லையா ?'' என்றவாறு ரட்சகனின் வலது கையைக் கூர்ந்து நோக்கினுன் முத்துசிவன்.

அவனுடைய இந்தக் குறும்புக் கேள்வியைப் புரிந்துகொண்ட ரட்சகன்,

உங்கள் கவனத்தைக் கோருகிறோம்...
இன்று நீங்கள்
**ஃபெர்ரோடால்**
சாப்பிட்டீர்களா?




வைட்டமின்-போஷாக்களித்து சக்தி தரும் சுவைமிக்க டானிக்

பார்க்-டேவிஸ் தயாரிப்பு

குடும்பம் முழுவதும் நலமுடன் விளங்கவே

---

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 20-00 | 10-00 |
| பர்மா, மலேயா இதர நாடுகள் | 40-00 | 20-00 |
| | இலங்கை நாணய மதிப்புப்படி | |
| இலங்கை | 21-00 | 10-50 |

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் பட வேண்டும். வி. பி. பி. கிடையாது

மானேஜர்,

கல்கி காரியாலயம் :: சென்னை-31

---

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு, எரிச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்க முடியாமல் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உறிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக் கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்துக் கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் சிங்கப்பூர் சொறி, வண்ணாரப்படை, என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஒருவகைக் கிருமி, மூலகாரணமான இந்தக் கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து நிவாரணமடைய முடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடேர்ம் (Nixoderm) முதல் தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி கிருமிகளைக் கொன்று சருமத்தின் புண்ணை ஆற்றி மிருதுவாக்கி சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடேர்ம் (Nixoderm) அரிப்பை நிறுத்துவதில் வெற்றி கண்டுள்ளது. மேலும் பாதத்தின் மேலிருக்கும் புண்கள் மேலாகப் பரவும் படை, முகப்பருக்கள் கட்டிகள் முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர்தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். பூரண திருப்தியை அது நிச்சயமாக அளிக்கும்.

''இல்லே, சார்! இல்லே!'' என்றான் அசட்டுச் சிரிப்புடன்.

''ஏன், வீட்டிலே மறந்து வைச்சுட்டு வந்துட்டியா ?''

''எதைக் கேட்கிறீங்க ?''

''நாடக டிக்கட் புத்தகம் !''

குபீரென்று சிரித்து முழக்கிய ரட்சகன், ''ஓ, அதுவா ? இனிமேல் நான் அச்சடிக்கக் கொடுக்கணும் சார் !'' என்றான்.

''முதலில் அச்சடித்த டிக்கெட்டெல்லாம் விற்றுப் போச்சா ?''

'' இல்லே ; நேற்றுத்தான் புது டிராமா ஒண்ணு 'பிரிப்பேர்' பண்ணி முடிச்சேன்.....''

''பழைய 'பகல் கொள்ளை' என்ன ஆச்சு ?''

''அது இருக்குது, சார் ! ஆனாலும் புதுப் புது நாடகங்களைத் தயாரிச்சு நாடகக் கலைக்குப் புத்துயிர் ஊட்டணும் என்கிறது என் இலட்சியம்.''

'' செய்ய வேண்டியதுதான் !'' என்று தலையாட்டிக் கொண்ட முத்து சிவன், ''அது சரி; அந்தப் 'பகல் கொள்ளை'யிலே உனக்கு எவ்வளவு ஆதாயம்? ஓர் ஆயிரம், ரெண்டாயிர மாவது மிச்சப்பட்டிருக்குமா?'' என்று மிகவும் அக்கறையாகக் குரலைத் தாழ்த்திக் கேட்டான்.

''அதற்கு மேலேயே எதிர்பார்த்தேன், சார்! ஆனால்.... இருநூறு ரூபாய் என் கையைக் கடிச்சுட்டது.''

''என்னது! நஷ்டமா ?''

''ஆமாம், சார் ! ஆனாலும் அதை நஷ்டம்னு சொல்லக் கூடாது; மறைஞ்சிருக்கிற மூலதனம்னு சொல்லலாம்'' என்றான் ரட்சகன் பெருமை கலந்த அலட்சியத்துடன்.

''புத்திக் கொள்முதல்னும் சொல்லலாம்!'' என்று சிரித்த முத்துசிவன், ''புருடா விடறயா என்ன? நானே நேரில் பார்த்தேன், தியேட்டரில் எக்கச்சக்கமான கூட்டம் இருந்ததே!'' என்றான் வியப்புக் குரலில்.

''ஓ.... அந்தக் கூட்டத்தைப் பார்த்துக் கணக்குப் போட்டுக்கிட்டுக் கேட்கிறீங்களா ?'' என்று சற்றே சலிப்பும் கவலையுமாக முணுமுணுத்தான் ரட்சகன். ''அது முக்காலே மூணு வீசம் ஓசி டிக்கட் கூட்டம் சார் !''

'' அப்படியா ?''

'' அந்த அநியாயத்தை ஏன் கேட்கிறீங்க, போங்க !''

''எந்த அநியாயம் ? கொஞ்சம் சொல்லேன், கேட்போம்.''

அவன் கிண்டல் செய்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட ரட்சகனின் முகத்தில் வெட்கம் சூழ்ந்தது. ஆனாலும் தன்னைச் சமாளித்துக் கொண்டு சொன்னான்: '' என் நாடக மன்றத்தின் அங்கத்தினர்களுக்கெல்லாம் ஆளுக்கு ஐஞ்சு காம்ப்ளிமெண்டரி டிக்கட்டுகள் கொடுக்கிறது வழக்கம். அவங்க என்ன பண்ணுவாங்கன்னு, ஒரு டிக்கெட்டுக்கு ஏழெட்டுப் பேர் விதம் முப்பது நாற்பது பேர்களைக் கொண்டு வந்து விடுவாங்க. இப்படி ஆளுக்கு ஒரு படையைத் திரட்டிக்கிட்டு வந்துடறதினாலே தியேட்டரும் நிறைஞ்சு போயிடும். தடபுடலா டிரஸ் பண்ணிக்கிட்டுப் பெண்டாட்டி, பிள்ளைகுட்டிகளோடு நாடகம் பார்க்க வருகிறவர்களை உள்ளே விடாமல் தடுத்துத் திருப்பி அனுப்பிச்சுட முடியுமா ? எப்படியோ நாடகத்துக்குக் கூட்டம் இருந்தால் சரின்னு விட்டு விடுவேன்.''

அநுதாபம் கலந்த குறும்புச் சிரிப்புடன் மெல்லத் தலையாட்டிக் கொண்டான் முத்துசிவன்.

ரட்சகன் மேலும் சொன்னான் : ''இதிலே ஒரு சங்கடம் என்னன்னு, அப்படி ஓசியிலே நாடகம் பார்க்க வருகிறவர்கள் கடைசி வரையில் உட்கார்ந்து பார்க்கிறதில்லே. நாடகத்திலே தங்களுக்கு வேண்டியவர் நடிக்கிற காட்சி முடிஞ்சதும் — அதாவது, அவருடைய பாகங்களை அவர் நடிச்சு முடிச்சு உள்ளே போனதும் — அவரைச் சார்ந்தவர்களும் குபீர்னு எழுந்து வெளியே போய் விடுவாங்க ! இப்படி



'' அந்நாள், லீலாராம் சேட் கடையில் நூறு ரூபாய்க்குச் சேலை வாங்கினால், இரண்டு காலண்டர் இலவசமா தர்றாங்களாம். நான் ஆறு காலண்டர் வாங்கட்டுமா ?''

ஒவ்வொரு காட்சிக்கும் ஒரு கும்பல் கலைஞ்சு போய், கடைசி கிளைமாக்ஸ் சீன்லே பார்த்தால், தியேட்டரில் என் மனைவியும் மாமனும்தான் உட்கார்ந் திருப்பாங்க !''

முத்துசிவன் இதைக் கேட்டுக் கட கடவெனச் சிரித்தான். அன்று அந்தப் 'பகல் கொள்ளை' நாடகத்துக்குப் போயிருந்த போது தன்னைத் திடீரென்று நாடகத்துக்குத் தலைமை தாங்க வந்த பிரமுகனுக்கித் தலைக்கு மாலை போட்டதையும், அச்சமயம் தியேட்டரில் பத்துப் பன்னிரண்டு பேர்களே உட்கார்ந்திருந்ததையும் நினைக்க, அவனால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

சொல்லக் கூடாத இரகசியத்தை வாய் தவறிச் சொல்லி விட்டாற் போல் முகத்தைச் சுளித்த ரட்சகன் உடனே ஒரு 'ஹீரோ' சிரிப்புச் சிரித்துத் தோளைக் குலுக்கிக் கொண்டு, ''ஆனாலும் இப்ப என் நாடகங்களுக்கு ரொம்ப நல்ல ஃபேம், சார்! அதிலும் 'பகல் கொள்ளை'யைப் பார்த்த எல்லோரும் ஓகோன்னு புகழுறுங்க. அடுத்த நாடகம் எப்போன்னு கேட்டு வேறு என்னைத் துளைக்க எடுக்கிறுங்க. அதான் ஒரே மூச்சிலே உட்கார்ந்து ஒரு நாடகத்தை எழுதி முடிச்சுட்டு, ஹீரோயினை 'புக்'பண்ணி விட இப்போ அவசரமாகக் கிளம்பினேன்'' என்முன் பெருமை வழியும் குரலில்.

ஏதோ மிகப் பெரிய நற்செய்தியொன்றைக் கேள்விப்பட்டவன் போல் அவசரமாக நிமிர்ந்து உட்கார்ந்த முத்துசிவன், ''ஹீரோயினு?.... யாரு? அந்த வந்தனு என்பவள்தானே ?'' என்று தன்னை மீறிய பரபரப்புடன் வினவினுன்.

''ஆமாம், சார்! அவளோட நடிப்பைப்பார்த்தீங்களா?எப்படி இருந்தது?''

''ஓ.... பிரமாதம்! ரொம்பப் பிரமாதம் !''

''எல்லாம் என்னோட டைரக்ஷன் திறமை சார் ! அதை அவளே ஒப்புத்துக்கிறுன்.''

''வாஸ்தவம்!'' என்று பெரிதாகத் தலையாட்டினுன் முத்துசிவன். அவனுக்கு முதலில் ரட்சகனைப் பார்த்த போதே அந்த வந்தனுவின் நினைவு தான் வந்தது. அத்துடன், அவளைப் பற்றிய விவரங்களை இன்று இவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலும் கிளர்ந்தது. ஆனால் அதை எப்படிக் கேட்பதென்று தெரியாமல் இவ்வளவு நேரம் தவித்துக் கொண்டிருந்தான். இப்போது ரட்சகனே அவளைத் தன் நாடகத்தில் நடிக்க ஒப்பந்தம் செய்யப் போவதாகச் சொன்னதைக் கேட்டதும் அவனுடைய அந்த ஆவல் வேறு வகையிலே திரும்பியது.

''நான் வரட்டுமா சார் ? இன்னெரு நாளைக்கு 'லீஷரா' வந்து உங்களை 'மீட்' பண்றேன்'' என்றவாறு பின்னல் நகர்ந்தான் ரட்சகன்.

சட்டென்று எழுந்து நின்ற முத்துசிவன், ''புறப்பட்டு விட்டாயா ?.... சரி; இப்ப நீ நேரே அந்த வந்தனுவின் வீட்டுக்குத்தானே போறே ?'' என்று தயக்கப் புன்முறுவலுடன் கேட்டான்.

''ஆமாம், சார்! பின்னே சும்மாவா சொல்வேன்? இன்னைக்கு எப்படியும் அவளைப் 'புக்' பண்ணியாகணுமே ! நாளைக்கு ரிகர்ஸல் இருக்குது !'' என்முன் ரட்சகன் உற்சாகமான குரலில்.

''எனக்கு ஓர் ஆசை!.... அதைச் சொன்னல் சிரிக்க மாட்டாயே ?''

''சொல்லுங்க, சார் ! என்ன விஷயம் ?''

''பெரிசாக ஒண்ணுமில்லை!.... உன் நாடக ஹீரோயினை நான் நேரில் பார்க்கணும்!.... பார்க்கலாமா ?'' என்று ஏதோ தமாஷாகக் கேட்கிறவன் போல் கண் சிமிட்டிச் சிரித்துக் கொண்டே கேட்டான் முத்துசிவன்.

திடுக்குற்றுப் போன ரட்சகன் தன் செவிகளையே நம்பாதவன் மாதிரி திருதிருவென விழித்தான். பிறகு தனக்கேற்பட்ட வியப்பையும் திகைப்பையும் ஒருவாறு அடக்கிக் கொண்டு, ''என்ன சார், கேலி பண்றீங்க! நீங்களாவது, அவளைப் பார்க்க வருகிறதாவது !'' என்முன் கூச்சப் புன்னகையுடன்.

''நிஜமாகத்தான் கேட்கிறேன், ரட்சகா ! நீ என்னை அழைச்சுக்கிட்டுப் போறதாகச் சொல்; வருகிறேனு இல்லையா, பார் !''

ரட்சகனுக்குத் திடீரென்று உற்சாகம் பிறந்து விட்டது. ''ஆகா ! என்னைக் கௌரவப்படுத்தறதுக்காகவும், என் மதிப்பை உயர்த்தறதுக்காகவுமே இப்படிக் கேட்கிறீங்கன்னு எனக்கு நல்லாத் தெரியுது! ரொம்ப நன்றி சார் ! வாங்க, போவோம்!'' என்முன் மகிழ்ச்சிக் கலகலப்புடன்.

முத்துசிவன் இதற்கு மேல் ஏதும் சிந்திக்கவில்லை; தாமதிக்கவும் இல்லை. உடனே வீட்டினுள் சென்று வேறு ஆடை உடுத்தி வந்து ஸ்கூட்டரின் பின்னல் ரட்சகனை ஏற்றி உட்கார வைத்துக் கொண்டு விர்ரென்று புறப்பட்டு விட்டான்.

**(தொடரும்)**



SHARING THE SANDAL SECRET
SPREADING IT FAR AND WIDE










MYSORE
SANDAL SOAP



THE MYSORE GOVERNMENT SOAP FACTORY,
BANGALORE - 12.

# பூங்கா நகரம்—
# 60 ஆண்டுகள் முன்பே திட்டமிட்டு உருவானது

ஜாம்ஷெட்பூர்: வர்ணமலர்சோலைகள் மிகுந்தது. எஃகு நகரமென அழைக்கப்படும் ஜாம்ஷெட்பூர். அது உண்மை! இந்தியாவின் எழில் மிகு நகரங்களில் அதுவும் ஒன்று. மேநாட்டில் திட்டமிட்ட நகரநிர்மாணங்கள் சர்வசாதாரணம். ஆயினும், அதனினும் அறுபது ஆண்டுகளுக்கு முன்பே ஜாம்ஷெட்பூர் திட்டமிட்டு உருவானதென்பது வியப்பேயாகும்.





ஜுபிலி பூங்கா: "மனிதர்களுக்கும், அவர்தம் உணர்ச்சிகளுக்குமான அடிப்படைத்தேவையை, எஃகு, மற்றும் இரும்பைக்காட்டிலும், மலர்களும் பூங்காக்களும், மரங்களும் பூர்த்தி செய்கின்றன என்று நான் கருதுகிறேன். அந்த சிறந்த சிந்தனையின் தோற்றமே இப்பூங்கா."

—ஜவாஹர்லால் நேரு



சோனுரி— திருத்தியமைக்கப்பட்ட குடியிருப்பு. பல கட்டங்களில் திட்டமிட்டு, 20 குப்பங்களை, நல்ல வெளிச்சமுள்ள சாலைகள், போதுமான தண்ணீர் வசதிகளுடன் சிறந்த குடியிருப்புகளாக மாற்றியமைக்க டாடா ஸ்டீல் உதவி செய்துள்ளது.



டாடா பெரிய மருத்துவ மனை: வசதிகளுடன் 600 படுக்கைகள் பெற்றது இந்த மருத்துவமனை. தனி 82 படுக்கைகளுடன் ஒரு காசநோய் மருத்துவ மனையும் அதில் ஒரு குழந்தைகள் வார்டும் அமைக்க டாடா ஸ்டீல் உதவியுள்ளது.

***எஃகும், மக்களுமே எங்கள் பலம்***

**டாடா ஸ்டீல்**

TN-4438



அண்ணல் காந்தி யடிகளின் அஸ்தி புனித கங்கையில் கரைக்கப் பட்ட புண்ணிய தினத் தன்று மேற்கு வங்க கவர்னர் ராஜாஜி வானொலியில் நிகழ்த் திய உரையிலிருந்து சில பகுதிகளை இங்கு தொகுத்துத் தருபவர் இரா. பாலாஜி.

# "கேட்டுப் பெறுவதல்ல அன்பு!"



ஒவ்வொரு நாளும் காலை ஐந்து மணிக்குப் பாரதத்தி லுள்ள ஆண் பெண் அனைவரும், காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டங்களில் குழுமியிருந்த மக்களை நினைவுபடுத்திக் கொள் ளட்டும். அவருடைய இனிய முகத்தை மனத்தில் எண்ணி, அவர் எதற்காகப் பிரார்த்தனை செய்து வந்தாரோ, அதனைச் சிந்தித்துப் பார்க்கட்டும். ஒவ்வொரு நாளும் அந்தி நேரத் தில் சில நிமிஷங்களைச் சிந்தனையில் செலவிட்டு மௌன மாகப் பிரார்த்தனை செய்வோமாக. கோபமாகவும், வெறி யாகவும் வெளிப்பட்டு, துயரம் ஆறுதலையடைய முற்படுவ துண்டு. இதற்கு இடம் கொடுத்தால் நம்முடைய சுபா வமே விஷத்தன்மை யுடையதாகி விடும். இது பெரும் பாவம். எனவே, இவ்விஷயத்தில் எப்போதும் நாம் ஜாக் கிரதையாக இருக்க வேண்டும். நம்மைப் பிரிந்து சென்றுவிட்ட பெருந் தலைவர் நமக்கு விட்டுச் சென்றிருக்கும் அன் பின் சக்தியை நினைவில் கொள்வோம். அவருடைய உபதேச மொழிகளையும், அவர் வாழ்ந்து காட்டிய விதத்தையும் நெஞ்சில் நிலைநிறுத்துவோம்.



கேட்டுப் பெறுவதல்ல அன்பு. பிறரிடம் அன்பு செலுத்தினால் அவர்களால் நேசிக்கப்படுவோம். நம் முடைய அன்பு உணர்ச்சி அதிகரிக்க அதிகரிக்க அதற் குப் பிரதியாக மற்றவர் நம்மிடம் காட்டும் அன்பும் பெருகும். இதுதான் இயற்கை நியதி. எந்தச் சட்டமும், எந்த வாதமும் இதை மாற்றி விட முடி யாது.

அவர் போய் விட்டார். அவருடைய உபதேசங்களைப் பின்பற்றி நடக்காமல் உப தேசித்தவருடனேயே அவ ருடைய உபதேசத்தையும் மறைந்து போகும்படி விட்டு விட்டால் நாம் வீழ்ச்சி யடைவோம் என்பது மட்டுமல்ல, அவரைக் கொன்றவ னுக்கு உடந்தையாகவும் ஆகி விடுவோம். இதயபூர்வமாக அவர் காட்டிய வழியில் நடந்தால், நமக்கு அவர் இறந்தவ ராகமாட்டார். நம்மிடையே நம் மூலம் அவர் வாழ்வார்.



உங்களுக்கும்
உங்கள் நண்பர்களுக்கும்

மகிழ்ச்சி அளிப்பது......
நீடித்த நறுமணம் வீசுவது




Priya
PERFUME

பிரியா
வாசனை

புத்தம் புதிய மலர்களின்
வாசனைக்கு ஒப்பானது

பெங்கால் கெமிகல்

கல்கத்தா ▪ பம்பாய் ▪ கான்பூர் ▪ டெல்லி

# THE NEW INDIA INDUSTRIES LTD.

*Registered Office:* Jetalpur Road, BARODA

*Makers of*




*Photo Paper*

BROVIRA - for enlargements
LUPEX - for contact prints
COPYLINE R 90 - for document copying (camera)
COPYLINE C 90 - for document copying (contact)

*In collaboration with:*

M/s. AGFA - GEVAERT AKTIENGESELLSCHAFT, LEVERKUSEN, West Germany

*Factory:*
Bombay – Agra Road
Mulund, BOMBAY-80

*Bombay Office:*
Industrial Assurance Buildings
Opp. Churchgate Station, BOMBAY-20

# அன்பிற்கு இடம் வேண்டும்

கோமதி சுவாமிநாதன்

தபால்காரர் கையெழுத்தை வாங்கிக் கொண்டு அதைக் கொடுத்து விட்டுப் போய்ப் பல நிமிடங்கள் ஆனபிறகுகூட தியாகராஜனுக்கு அதிர்ச்சியும் பிரமையும் அடங்கவில்லை. கையிலிருந்த இன்ஷ்யூர் கவரைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்தான்; தனக்குத்தான் அந்தக் கவர் என்ற நினைவு படியவே சில நிமிடங்கள் ஆயின. திகைப்பிலிருந்து விடுதலை பெற்று அவன் கண் பார்வையில் தெளிவு ஏற்பட்ட போது, கவரின் மேலுள்ள அவன் முகவரி அவனுக்குத் துல்லியமாகத் தெரிந்தது. அதன் கூட, ஓர் ஓரத்திலுள்ள அனுப்பியவரின் முகவரியும் புரிந்தது.

தியாகராஜன் இப்போது ஆச்சரியத்தோடு அதிர்ச்சிக்குள்ளானான். எட்டு வருடங்களுக்கு முன்னால், சொல்லிக் கொள்ளாமல் ஓடி ஒளிந்த ஆசாமி, ஒரு நயா பைசாக்கூடக் கொடுக்க முடியாது என்று சொல்லிக் கொண்டிருந்த ஆசாமி, இப்போது கச்சிதமாகக் கொடுக்க வேண்டிய ஆறாயிரத்து ஐந்நூறு ரூபாயையும் அல்லவா அனுப்பியிருக்கிறான்! அந்தக் கவரின் மதிப்பு அந்தத் தொகையாகத்தான் மேலே குறிப்பிடப்பட்டிருந்தது.

உள்ளே தொகை சரியாக இருக்குமா என்ற சந்தேகம் கூடவே எழுந்தது. 'பரட்' என்று கவரை ஒரு பக்கமாகக் கிழித்தான். நூறு ரூபாய் நோட்டுக்கள் குபுக்கென்று எட்டிப் பார்த்தன. அறுபத்து ஐந்து நோட்டுக்கள் சரியாகவே இருந்தன.

''கமலா! கமலா! இங்கே வாயேன்! ஓர் அதிசயம் நடந்திருக்கு. வேதாவோட கலியாணத்தை அமர்க்களமாய்ப் பண்ணி விடலாம். பணம் கிடைச்சுடுத்து'' என்று ஆனந்தக்கூத்தாடிக் கொண்டே அடுக்களைக்குள் நுழைந்தான் தியாகராஜன். கமலா சட்டென்று பதில் சொல்லவில்லை. அவன் முகத்தைப் பார்த்தாள்.

''உனக்கு நம்பிக்கை வரலியா? அந்தப் பழைய புரொடியூசர் பொன்னம்பலம். பாக்கி முழுவதையும் அனுப்பியிருக்கிறான். தலையை முழுகின பணம். அது மாத்திரமில்லை. வேதாவின் கலியாண அழைப்பிதழை எதிர்பார்க்கிறானாம். கல்யாணத்துக்கும் வருவானாம்..... ஹூம்! உலகத்திலே நல்ல மனுஷாளும் இருக்கிறார்கள். எவனை அற்பன்னு நினைச்சேனோ, அவன் இன்று அதிசயப் பிறவியாகி விட்டான். நீ மசமசன்னு நிற்காமல் நேரே கோபாலசாமி வீட்டுக்குப் போய் வந்துவிடு. 'பணம் புரண்டுடுத்தாம். இந்த மாசமே முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம்' என்று சொல்லு. இந்தச் சம்பந்தம் அநேகமாகக்



கைநழுவின விஷயம்தான்னு நினைச்சுண்டு இருந்தேன். இப்போ கடவுளே பொன்னம் பலத்தின் உருவத்தில் வந்து கைகொடுத் திருக்கிறான்'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பொரிந்து தள்ளினான் தியாகராஜன்.

''சோபாலசாமி வீட்டிலே சம்மதித்து விட்டார்கள். இந்த மாதத்துக் கடைசி முகூர்த்தம் அவர்களுக்குச் சௌகரியமாம். நீங்க கலியாணப் பத்திரிகை எழுதி அச்சுக்குக் கொடுக்கலாம்'' என்றாள் கமலா அன்று மாலையில்.

''ஆமாம்! ஆமாம்! 'மிஸஸ் கமலா தியாகராஜன் அண்டு மிஸ்டர் தியாக ராஜன்'னுதானே ஐம்னு போடணும்? இன்விடேஷனே பிரமாதமாக இருக்கணும்'' என்று ஆமோதித்தான் தியாகராஜன்.

கமலாவின் புருவங்கள் குவிந்தன. ''குடும் பத்துக்குப் பெரியவராக உங்க அண்ணா இருக்கும் போது அவர் பெயரையும் அழைப்பிதழில் போட வேண்டாமோ?'' என்று கேட்டும் விட்டாள்.

அவ்வளவுதான்; தியாகராஜன் சீறி எழுந்தான். ''அண்ணனும் அண்ணன்!... அற்பங்களே யெல்லாம் நான் அண்ணனாக நினைப்பதைவிட்டு அநேக வருஷங்களா யிற்று. அவன் துரோகியல்லவா! என்னே வாழ விடாமல் அடிக்க முயன்ற அந்த அயோக்கியன் பெயரிலா என் பெண் கல்யாண அழைப்பிதழ் போக வேண்டும்! நோ! முடியாது. மற்றவர்களுக்கெல்லாம் போகும் அழைப்புக்கூட சம்பிரதாயத்துக் காகவாவது அவனுக்குப் போகாது! அவன் காற்றும் இந்தக் குடும்பத்தின்மீது வீசக் கூடாது! நான் இப்பவே எச்சரிக்கிறேன். இனி என் காது கேட்க அவனைப் பற்றிப் பேசக் கூடாது. நினைவிருக்கட்டும்'' என்று சொல்லி எழுந்திருந்து விட்டான். கோபத் தால் அவன் முகம் ஒரேயடியாகச் சிவந்து விட்டிருந்தது.

தன் கடமையை முடித்துக் கொண்டோம் என்ற திருப்தியில் கமலாவும் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை.

தன் விருப்பப்படியே கலியாண அழைப் பிதழை எழுதி அச்சகத்தில் கொடுத்து விட்டுத் திரும்பிய தியாகராஜன் உப யோகப்படாத தட்டுமுட்டுச் சாமான்கள் போடப்பட்டிருந்த பெட்டிக்குள்ளிருந்து ஒரு பழைய புகைப்படத்தைத் தேடி எடுத்தான். சட்டத்திலும், கண்ணாடியிலும் ஒரே தூசி. அதை நன்றாகத் துடைத்து அலமாரியில் கொண்டு வந்து வைத்தான். எட்டு வருடங் களுக்குமுன் ஒரு திரைப்பட ஸ்டுடியோவில் எடுக்கப்பட்ட 'ஸ்டில்' அது. அந்தப் படத் தில் புரொட்யூசர் பொன்னம்பலமும், தியாகராஜனும் நின்று கொண்டிருந் தார்கள். ''இந்த நாணயம் கெட்ட பயலின் படத்தைப் பார்ப்பதுகூடப் பாவம்'' என்றுதான் சில வருஷங்களுக்குமுன் தியாக ராஜன் இந்தப் படத்தை ஆணியிலிருந்து கழற்றி ஒரு மூலையில் போட்டிருந்தான்.

இன்று அந்தப் படத்தின் நாணயம் உயர்ந்து விட்டது. அதனால் படமும் சுவரில் உயர்ந்து விட்டது. 'இனி மேல் வராது' என்று கைகழுவப்பட்ட ஆறுயிரத்து ஐந்நூறு ரூபாயையும் சுளையாக அனுப்பி வைத்த மகானுபாவனாகி விட்டான் பொன்னம்பலம்.

மாலை நேரங்களில் பள்ளிக்கூட வேலை யெல்லாம் முடிந்து வீடு திரும்பிக்கொண் டிருந்த சுந்தரேசனை, ''வாத்தியாரய்யா! வணக்கமுங்க!'' என்ற வேலுச்சாமியின் குரல் நிறுத்தியது.

''வேலுச்சாமியா? வாப்பா! எங்கே? பட்டணமா போயிருந்தே? என்ன விசேஷம்?'' என்று வரவேற்றார் சுந்தரேசன்.

''ஆமாங்க! யதேச்சையா உங்க தம்பி தியாகராச ஐயாவைக்கூடப் பார்த்தே னுங்க. அடுத்த வாரம் அவரு மகளுக்குக் கல்யாணமாம்! பம்பரமாச் சுற்றிக்கிட்டு இருக்காரு. ஒருவேளே ரொம்ப நாள் கழிச்சு, உங்களே அழைக்கிற சாக்கிலே நம்ப ஊருக்குக்கூட வருவார் போலே!'' என்றான் வேலுச்சாமி உற்சாகமாக.

''நல்லா வரட்டும்!'' என்ற வாத்தியார் சுந்தரேசனின் நினைவுகள் பல ஆண்டுகள் பின்னுேக்கி ஓடின.

எத்தனை வருஷங்கள் என்று துல்லியமாக நினைவு வரவில்லை. நூற்றுக்கணக்கான வரு ஷங்களாய் விட்டது போன்ற பிரமை. விதவையான தாயார், பத்து வயதுத் தம்பி இருவருடனும் இப்போதுதான், எங்கோ தெற்குச் சீமையிலிருந்து வந்து இந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தில் உபாத்தி யாயர் வேலை ஏற்றுக் கொண்டது போல் இருந்தது.

தம்பி தியாகராஜன் அவர் கீழேயே படித்து, தொடர்ந்து பக்கத்து ஊர் உயர் நிலைப் பள்ளியிலும் படித்துப் பரீட்சை பாஸ் பண்ணி, அவருக்குத் துணையாக உபாத்தியாயராகவே வந்து சேர்ந்தான். சுந்தரேசனும் திருமணம் செய்து கொண் டார். இனிமேல் இந்தக் குடும்பத்துக்குத் தன் சேவை தேவை இல்லை என்பதுபோல் தாயாரும் காலமானாள்.

தியாகராஜனுக்கும் ஒரு கால் கட்டைப் போட வேண்டும் என்று நினைத்துச் சுந்த ரேசன் முனைந்த போதுதான் அவன் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டான். காதல் சுழலில் சிக்கிக் கொண்டான். அந்தச் சுழலி லிருந்து அவன் வெளியேறுவண்ணம் பார்த் துக் கொண்டவள் பக்கத்துக் கிராமப் பள்ளி ஆசிரியைதான். உபாத்தியாயர்களின் மாதாந்திரக் கூட்டங்களில் தோன்றிய பிணைப்பு அது.

தியாகராசன் சுந்தரேசனிடம் மனம் விட்டுப் பேசியிருந்தால் அவரே இந்தப் பொருத்தமான கலியாணத்தை மகிழ்ச்சி யுடன் நடத்தி வைத்திருப்பார். அந்தப் பெண் கமலாவை அவருக்கு நன்றாகத் தெரி யும். ஆனால் தியாகராஜன், அவர் ஏதும் மறுப்புச் சொல்லுவாரோ என்ற பதற்றத் தில் கமலாவையும் அழைத்துக் கொண்டு ஒரு நாள் திடீர் தலைமறைவாகிவிட்டான்.

கமலாவைப் பதிவுத் திருமணம் செய்து கொண்ட தியாகராஜன் பட்டினத்தில் ஏதோ வேலை தேடிக் கொண்டிருப்பதாக இரண்டு ஆண்டுகளுக்குப் பின் தகவல் வந்தது. இன்னும் இரண்டு மூன்று வருடங் களுக்குப் பிறகு, அவன், எங்கோ வியாபார

ஸ்தாபனத்தில் குமாஸ்தாவாக வேலை செய்கிறான் என்றும், அவன் மனைவி கமலா, ஆசிரியை வேலையிலேயே ஈடுபட்டிருப்பதாகவும் கேள்விப்பட்டார். மனத்துக்குள் அவருக்கு மகிழ்ச்சி. அதை வெளிக் காட்டவில்லை. அவனாக வரும் வரையில் அவனைப் போய்ப் பார்ப்பதில்லை என்று மட்டும் இருந்தார்.

ஒன்பது ஆண்டுகளுக்குமுன் ஒரு நாள் ஏதும் முன்னறிவிப்பு இல்லாமல் தியாகராஜன் தனியாகச் சுந்தரேசன் முன் வந்து நின்றான். சுந்தரேசன் முகத்தில் எந்தவித மான ஆத்திரத்தையோ கோபத்தையோ காணாதது அவனுக்கே ஏமாற்றமாக இருந்தது. அவர் கோபத்தைப் பயன்படுத்திக் கொண்டு தான் வந்த நோக்கத்தை வெளியிட வேண்டும் என்பது அவன் திட்டம்.

ஆம். பூர்வீக சொத்துக்களின் பாகப் பிரிவினையை நினைத்துக் கொண்டுதான் தியாகராஜன் சகோதரனைச் சந்திக்க வந்திருந்தான். மூன்றும் நாள் அந்தப் பேச்சையும் தொடங்கினான். அண்ணன் எதையோ ஏகபோகமாக அனுபவித்து வருவதாக அவன் எண்ணம்.

சுந்தரேசன் பதற்றமில்லாமல் எல்லாவற்றையும் தெளிவாகச் சொன்னார். தாயார் காலமாவதற்கு முன்பே, சொந்தக் கிராமத்திலிருந்த காலி மனையைப் பிள்ளையார் கோயிலுக்குச் சாஸனம் செய்து விட்டதாகவும், பூர்வீகச் சொத்து என்று பெருமைப்பட்டுக் கொள்ள இப்போது ஒரு ரூபாய் மதிப்புள்ள சாமான்கூட அந்தக் குடும்பத்தில் கிடையாது என்றும் தெரிவித்தார். தியாகராஜன் சிறினான். அண்ணன் தன்னை ஏமாற்றிவிட்டான் என்றே எண்ணினான். அவரிடம் சொல்லிக் கொள்ளாமலே பட்டணத்துக்குத் திரும்பிப் போய் விட்டான். சுந்தரேசனும் வழக்கம் போல் அவன் வந்து போனதையே மறந்து விட்டார்.



''உன் மாமியார் என் மாமியாரிடம் உன்னைப் பத்தி ஏதோ புகார் சொல்ல என் வீட்டிற்கு வந்திருக்கிறார்! உன் மாமியார் வீடு திரும்புவதற்குள் என் மாமியாரைப் பத்தி பேசலாமென வந்தேன்!''

ஈராண்டு காலம் ஓடிவிட்டது. முன்னிருட்டுக் காலத்தில் ஒரு நாள் மாலை வேளை. சுந்தரேசன் வழக்கம்போல் உலாவி விட்டுத் திரும்பும்போது பத்தடி பின்னால் இரண்டு மாணவர்கள் பேசிக்கொண்டே நடந்தார்கள்.

''நம்ப சுந்தரேசன் டீச்சர் போன வருஷம் பள்ளி விழாவுக்குத் தயார் பண்ணி நின்னு போச்சே ஒரு நாடகம். அந்த நாடகக் கதை அப்படியே சினிமாவா வந்துடுச்சு ! என்ன ஜோராக இருக்கு தெரியுமா ?''

''ஆமா !.... நீகூட ஒரு வேலைக்காரன் வேஷம் போட்டுக்க ஒத்திகைக்குப் போயிட்டிருந்தியே...... ?''

''ஆமாம்! அந்த வேஷத்தைப் படத்திலே காமெடியன் கண்ணையிரம் நடிக்கிறார் பாரு ! கொட்டகையிலே அப்ளாஸ் பிச்சுக் கிட்டுப் போகுது ! எனக்குத்தான் டயலாக் எல்லாம் நினைப்பிருக்கே! ஒரு வரிகூடப் படத்திலே மாறலே....''

''நம்ப சுந்தரேசன் சார் சினிமாவுக்கு வசனம் எழுத ஆரம்பிச்சுட்டாரா ?''

''அது ஆச்சரியமில்லே. ஆனால் இந்த விஷயத்தை ரகசியமாக வைச்சுக்கிட, வேறு பேரு வச்சுக்கிட்டார். பாட்டுப் புஸ்தகத்திலே, கதை வசனம் 'தியாகன்'னு போட்டுக்கிட்டு இருக்காரு. ஆனால் நமக்குத்தான் அதை யாரு எழுதினாருன்னு தெரியுமே....''

இரண்டு எட்டு வேகமாக நடந்து, ''பழனிச்சாமி'' என்று குரல் கொடுத்தார் சுந்தரேசன் பின்னாலிருந்து. பழனிச்சாமியும் அவன் நண்பன் ஷண்முகமும் சட்டென்று நின்று பின்னால் பார்த்தார்கள்.

''எந்த சினிமா பார்த்தே, பழனிச்சாமி?'' என்றார் அவர்.

'' 'வாழ்ந்து காட்டிய வள்ளல்' சார் ! உங்க கதைதான் சார்.''

அவர் தம் நாடகத்துக்குக் கொடுத்த தலைப்புத்தான்! மாற்றமில்லை.

''எங்கேப்பா, அந்தப் படம் ஓடுது ?''

''நம்ப பக்கத்து ஊரு டூரிங் டாக்கியிலே சார் !''

''சரி !.... சினிமாப் பற்றியே பேசிக் கிட்டிருக்காமே நேரத்தோடே வீட்டுக்குப் போயி பாடத்தைப் படியுங்க !''

இப்போது சுந்தரேசன் அவர்களைத் தாண்டிக் கொண்டு வேகமாக முன்னால் நடந்தார். தம் உடைமையை யாரோ அநாயாசமாகத் திருடிச் சொந்தம் கொண்டாடி விட்டானே என்று நினைத்தபோது அவர் உடம்பு தகித்தது.

வெகு நாட்களுக்குப் பிறகு, சுந்தரேசன் மறு நாளே பக்கத்து ஊருக்குப் போய், 'வாழ்ந்து காட்டிய வள்ளல்' படத்தைப் பார்த்தார். வரிக்கு வரி, கட்டத்துக்குக் கட்டம் அவருடைய சிருஷ்டிதான். நாடகத்துக்காக அவர் எழுதிய வசனங்கள் அப்படி அப்படியே படத்திலும் இருந்தன. பாட்டுப் புத்தகம் ஒன்றை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினார்.

மறு நாளே விவரமாக அந்தப் படத் தயாரிப்பாளருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதற்குப் பதிலும் விவரமாக வந்தது. பட்டணத்தில் உள்ள தியாகராஜன் என்பவர், 'தியாகன்' என்ற பெயரில் பிரஸ்தாபப் படத்துக்குக் கதை வசனம் எழுதிக் கொடுத்தார் என்றும், அதற்கான ஊதியமாகப் பத்தாயிரம் ரூபாய் பேசப்பட்டதென்றும், ஏதாவது தாவா இருந்தால் தியாகராஜனோடு நேரடித் தொடர்பு கொள்ளலாம் என்றும் அதில் கண்டிருந்தது.

சுந்தரேசன் பெருமூச்சு விட்டார். அவருக்கு எல்லாம் புரிந்து விட்டது. பூர்வீகச் சொத்தில் பங்கு கேட்டுச் சண்டை போட வந்து தங்கியிருந்தபோது தியாகராஜன்

# தலைவலியா?



# அவேதன்



## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்

**SQUIBB**

SARABHAI CHEMICALS



® இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பொரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். காம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமைபெற்றவர்கள்.

அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன, தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது.

Shilpi SC 51A/67 Tam

தான் எழுதி வைத்திருந்த நாடகப் பிரதியைத் தூக்கிக் கொண்டு போயிருக்கிறான் என்று சமாதித்துக் கொண்டார். 'நிச்சயமாக அவன் வெறுங்கையோடு போகவில்லை. பத்தாயிரம் ரூபாயோடு போயிருக்கிறான். எப்படி இருந்தாலும் அவன் சந்தோஷமாக இருந்தால் சரி' என்ற நினைவுடன் மனத்தில் திருப்தியை வரவழைத்துக் கொண்டு விஷயத்தை அத்துடன் விட்டு விட்டார்!

ஆனால் படத் தயாரிப்பாளர் பொன்னம்பலம் விஷயத்தை அத்துடன் விட்டு விடவில்லை. இது அவருக்குத் தெரியாது!

பொன்னம்பலம் பேசிய பணத்தில் தியாகராஜனுக்கு மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய்தான் கொடுத்திருந்தார். ஆறுயிரத்து ஐந்நூறு பாக்கியிருந்தது. இந்த நேரத்தில் தான் அவருக்குச் சுந்தரேசனின் கடிதம் வந்து சேர்ந்தது. அதைத் தமக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தார். தியாகராஜனைக் கூப்பிட்டனுப்பி, அவனிடம் சுந்தரேசனின் கடிதத்தைக் காண்பித்து, இருவரும் சேர்ந்து ஒப்புதலாகக் கடிதம் எழுதிக் கொடுத்தால்தான் மீதியுள்ள ஆறுயிரத்து ஐந்நூறு ரூபாய்களைக் கொடுக்க முடியும் என்றும், தியாகராஜன் வழக்குத் தொடர்ந்தால் தம் தரப்புச் சாட்சியாகச் சுந்தரேசனைக் கொண்டு வரப் போவதாகவும் பயமுறுத்தி அனுப்பி விட்டார்.

பாவம்! அவருக்குச் சுந்தரேசனும் தியாகராஜனும் சகோதரர்கள் என்று தெரியாது. தியாகராஜனும் அந்த உறவைக் காட்டிக் கொள்ளவில்லை.

தன் திருட்டுத்தனம் இப்படி வெளியாகி விட்டதே என்று பொருமினான் தியாகராஜன். அண்ணனிடம் போய் இதைப் பற்றிப் பேசிச் சமரசம் செய்து கொள்ள அவனுக்குத் துணிவில்லை.

ஆனால் எட்டு வருடங்கள் கழித்துப் பொன்னம்பலத்திடமிருந்து கலையாக ஆறுயிரத்து ஐந்நூறு ரூபாய்களும் எப்படியோ வந்து விட்டனவே!

**கா**சி யாத்திரை எல்லாம் முடிந்து விட்டது; வேதாவின் திருமண முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. தியாகராஜனுக்கு வேண்டிய நண்பர்களெல்லாம், முகூர்த்த மண்டபத்திலுள்ள நாற்காலிகளில் அமர்ந்திருந்தார்கள். முன்னணியில் ஒரு நாற்காலியைக் காலியாகவே பொன்னம்பலத்துக்காகத் தியாகராஜன் விட்டு வைத்திருந்தான்.

தியாகராஜன் கலியாண மண்டபத்தில் அங்கும் இங்கும் போய் விட்டுத் திரும்பி



வி.தே.

''நேற்று நான் கொடுத்த அந்த நாவலின் முடிவு ரொம்ப மகிழ்ச்சிகரமாக இருந்திருக்குமே?''

''இல்லை. சோகமாக முடிந்து விட்டது. நான் ஆபீசில் வேலை நேரத்தில் படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த மானேஜர் என்னை 'டிஸ்மிஸ்' செய்துவிட்டார்!''

வந்த போது பொன்னம்பலத்துக்காக 'ரிசர்வ்' செய்திருந்த நாற்காலியில் யாரோ உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். திடுக்கிட்டான்.

உட்கார்ந்திருந்தவர் அண்ணா சுந்தரேசன்.

''எழுந்திருங்கள், இங்கே உங்களை யார் அழைத்தார்கள்? என்னை அவமானப்படுத்த வேண்டுமென்று எண்ணமா?'' என்று சீறினான் தியாகராஜன். கையைப் பிடித்து எழுப்பி விடவும் முனைந்தான்.

அவர் அண்ணா என்று யாருக்கும் தெரியாதே! சுந்தரேசன் முகத்தில் எந்த விதமான சலனமும் ஏற்படவில்லை. நிதானமாக எழுந்து நின்றார்.

''புரொட்யூசர் பொன்னம்பலம் உட்கார வேண்டிய இடம் இது. உமக்காகப் போடவில்லை. எழுந்திருந்து வெளியே நடவும்'' என்றான் தியாகராஜன் திமிருடன்.

சுந்தரேசன் புன்முறுவலுடன் ஒரு கணம் மணவறையில் அமர்ந்திருந்த மணமகனையும் மணமகளையும் பார்த்து மானசிகமாகப் பிரார்த்தனை செய்தார். யாருக்கும் தெரியாமல் ஓர் ஓரத்தில் போய் நின்றார்.

கெட்டி மேளம் ஒலித்தது. மாங்கல்ய தாரணமும் நடந்தது. பொன்னம்பலத்திற்கான நாற்காலி காலியாகவே இருந்தது. தூர நின்ற சுந்தரேசனின் கண்கள் மகிழ்ச்சியால் குளமாயின.

ஒவ்வொருவராய் விடைபெற்றுக்கொண்டு தாம்பூலம் பெற்றுக் கிளம்பினார்கள். மெதுவாக நகர்ந்து சுந்தரேசன் வெளியே போகும் கேட்டை நெருங்கி அங்கே ஓரமாக நின்று கொண்டார். தெரிந்த பிரமுகர் ஒருவரை அனுப்ப வாசல் வரை வந்த தியாகராஜன் அண்ணா இன்னும் அங்கே நிற்பதைப் பார்த்து விட்டான். ''இன்னும் போகவில்லையா?'' என்று வெடித்தான்.

''போயின்டே இருக்கேன் தியாகு!.... சாப்பிட உட்கார்ந்துட மாட்டேன். பயப்படாதே!.... ஆனால், உட்கார இடம் போட்டிருந்த மாதிரி அந்தப் பொன்னம்பலத்துக்குச் சாப்பிடவும் இலை போட்டு வைக்காதே! பொன்னம்பலம் வரமாட்டான்! இரண்டு வருடங்களாக சிவில் ஜெயிலில் இருப்பவனால் இப்போது வரவும் முடியாது!''

சுந்தரேசன் வெளிவாயிலை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தார்.

''என்ன உளறுகிறீர்கள்? கல்யாண முகூர்த்தத்துக்கு வருவதாக எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார் தெரியுமா?....'' தியாகராஜன் திடுக்கிட்டவாறு கேட்டான்.

கந்தரேசன் சிரித்தார் ! "அவன் பெயரில் கடிதம் எழுதியதும், உனக்குப் பணம் அனுப்பியதும் நான்தான் தியாகு. வேதாவின் திருமணம் பண வசதிக் குறைவால் தடைப்பட்டது என்று கேள்விப்பட்டு, நான் சேமித்து வைத்திருந்த பணத்தைப் பொன்னம்பலம் பெயரில் அனுப்பி வைத்தேன். என்னிடமிருந்து பணம் பெற்றுக் கொள்வது கேவலம் என்று நீ நினைப்பாயோ என்ற பயம் ! என் பெயரைச் சொல்லி உன்னை அந்தப் பொன்னம்பலம் ஏமாற்றி விட்டான் என்றும் எனக்குத் தெரியும். வேதா எனக்கும் பெண்தானே ?" என்று சொல்லிவிட்டு நிறுத்தினார் சுந்தரேசன்.

தியாகராஜன் சிலையானான். 'அண்ணா! என்ன காரியம் செய்துவிட்டீர்கள் ? உங்கள் பெண் பானு கல்யாணத்துக்கு நிற்பவளாயிற்றே...." என்று குரல் கரகரக்கக் கேட்டான்.

"அவளுக்கு இனிமேல் கலியாணம் தேவையில்லை தியாகு.... போன வருடமே, அவள் எந்தத் தேவையும் இல்லாத இடத்துக்குப் போய்விட்டாள். ஒரே வார ஜுரம்."

அவரை முடிக்க விடாமல், "அண்ணா ! என்னை மன்னித்து விடுங்கள். நான் மகா பாவி !.... உங்கள் கையைப் பிடித்து எழுப்பிவிட்ட துரோகன்...." என்று அரற்றிக் கொண்டே அவர் காலடியில் சூழ்நிலையை மறந்து விழுந்தான்.

சுந்தரேசன் ஒதுங்கினார். "நீ உறவு, பாசம் எல்லாவற்றையுமே மனத்திலிருந்து இழுத்து வெளியே அனுப்பியவனாயிற்றே ! இனி மேலாவது மனித வாழ்க்கையில் அன்புக்கும் இடமுண்டு என்று புரிந்து கொள்" என்று சொல்லி விட்டுத் தெருவில் இறங்கி நடந்தார்.

கண்களில் நீர்த் திரை மறைக்கத் தியாகராஜன் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டிருந்த சுந்தரேசனின் முதுகைப் பார்த்துக் கொண்டே நின்றான். அந்த மகானைப் போய் வழி மறைத்துத் தன்பால் இழுக்க அவன் உள்ளத்தில் தைரியம் இல்லை!

---

# பாரதி தோற்றார்!

தமிழ் நாட்டில் மகாகவி பாரதியார் போன்ற மிகச் சிறந்த இலக்கிய கர்த்தாக்கள் ஆதரிப்பார் இன்றி அவதிப்பட்டதைப் பற்றி எவ்வளவோ படித்திருக்கிறோம், கேள்விப்பட்டிருக்கிறோம். மகாராஷ்டிரத்திலும் இந்த நிலை இருந்திருக்கிறது.

'மகாராஷ்டிரத்தின் ஷேக்ஸ்பியர்' என்று போற்றப்படும் கட்கரி காலமாகி ஐம்பதாண்டுகள் ஆகி விட்டன. அண்மையில் அவரது நினைவு விழா மகாராஷ்டிரம் முழுவதும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.




1912ல் அவர் எழுதிய முதல் நாடகம் பிரமாத வெற்றியடைந்ததைத் தொடர்ந்து அந்த நாடக சபையினர் அவரை மற்றொரு நாடகம் எழுதச் சொன்னார்கள். "எழுது" என்றால் எழுத முடியுமா ? 'மூட்' வரவில்லை கட்கரிக்கு. 'அட்வான்ஸ்' கொடுத்திருந்த நாடகக் குழுவினரோ அவரைத் தனியே விடப் பயந்து போகுமிடமெல்லாம் அவரை இழுக்கடித்தார்கள். முன் பணம் வாங்கிக் கொண்டவர் நாடகம் எழுதாமல் கம்பி நீட்டி விடுவாரோ என்று அவர்களுக்குச் சந்தேகம் !

கோவாவில் முகாமிட்டிருந்த போது நாடகக் குழு நிர்வாகி வீண் காலதாமதம் செய்வதாகக் கட்கரியைப் பழித்துரைத்து வசை பாடினார். கட்கரிக்கு அதற்கு மேல் அவர்களுடன் சேர்ந்திருக்கப் பிடிக்கவில்லை. தமது மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள அவர் விலகிச் சென்றுவிட விரும்பினார். ஆனால் நிர்வாகியோ 'முன் பணத்தைத் திருப்பித் தா' என்றார். ஐந்தும் பத்துமாகச் செலவுக்கு வாங்கிய அந்தத் தொகை எவ்வளவு தெரியுமா? மொத்தம் 125 ரூபாய்! அத்தொகையைத் திருப்பித் தர இயலாததால் அவமானத்தைச் சகித்துக் கொண்டு காலத்தை ஓட்டினார் கட்கரி. இந்தச் சமயத்தில் மால்வான் நகரிலிருந்து கோவாவுக்கு வரேர்கர் என்பவர் வந்து சேர்ந்தார். இலக்கிய ரசிகரான இவர், கட்கரியைப் பார்க்கவே கோவாவுக்கு வந்தார். தமது இல்லத்துக்கு வந்து சில தினங்கள் தங்க வேண்டும் என்று கட்கரியைக் கேட்டுக் கொண்டார். அப்போது கட்கரி தமது பரிதாப நிலைமையை அவரிடம் கூற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

வரேர்கர் மிகுந்த விசனமடைந்தார். அவரிடமும் அவ்வளவு பணம் இல்லை! ஊருக்குத் திரும்பி யாரிடமோ கடன் வாங்கி அதைக் கட்கரிக்கு அனுப்பி வைத்தார். கட்கரி தம்மை விடுவித்துக் கொண்டு நண்பரின் இல்லத்துக்கு ஏகினார்.

1918ல் கட்கரி இறக்கும்போது மகாராஷ்டிர நாடகத் துறையில் வேறு யாரும் அடைந்திராத அளவுக்கு அவர் புகழ் உச்ச கட்டத்தில் இருந்தது. இப்படிப்பட்டவர்தான் ஒரு சமயம் 125 ரூபாய்க்குத் தம்மையே அடகு வைத்துக் கொண்டு அவதிப்பட்டார்!

— வி. எஸ். வாக்டண்கர்

## ஆமைக் கண்ணீர் !



ஒரு ரஷ்யக் கப்பலின் மாலுமிகள் 150 கிலோ எடையுள்ள கடல் ஆமையைப் பிடித்தார்கள். அன்று ஆமைச் 'சூப்' சாப்பிடலாம் என்ற மகிழ்ச்சியில் அவர்கள் நினைத்திருந்தபோது, ''ஆமை அழுகிறது! ஆமை அழுகிறது!!'' என ஆச்சரியத்தால் கூக்குரலிட்டார் ஒரு மாலுமி. அந்தப் பெரிய ஆமை ஒரு சிறு பிள்ளையைப் போல உயிர் போவதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கண்ணீர் விடுவதாக எண்ணிய மாலுமிகள் அதன்மீது இரக்கம் கொண்டு மறுபடியும் அதனைக் கடலிலேயே போட்டுவிட்டார்கள்.

உண்மையில் அவர்கள் அந்த ஆமையின் கண்ணீரைக் கண்டு ஏமாந்துதான் போய்விட்டார்கள். உண்மையில் அந்த ஆமை தனக்கு நேர இருக்கும் கதியை நினைத்து அழவில்லை. அது தன் உடலில் இருந்த் அதிகப்படியான உப்பினைக் கண்ணீராக வெளியேற்றிக்கொண்டிருந்ததை மாலுமிகள் அழுகையாக நினைத்து விட்டனர். முதலை வடிக்கும் கண்ணீரும் இத்தகையதுதான். மற்றும் சில கடல்வாழ் உயிர்களும் இதுபோலக் கண்ணீர் வடிக்கும் பழக்கம் உடையவை. அவைகளுக்குத் தங்கள் உடம்பில் அதிகமாக இருக்கும் உப்பைக் கண்ணீராக வெளியேற்றத் தனிச் சுரப்பிகள் உள்ளன.



குரங்குகள் அழுவது போலக் கூக்குரலிடுமே ஒழிய அவற்றால் கண்ணீர் வடிக்க முடியாது. அவற்றுக்குக் கண்ணீர்ச் சுரப்பிகள் இல்லை.

ஆதாரம்: மாஸ்கோ நியூஸ். அனுப்பியவர்: ஆர். எம்.

---

'லியோபோல்ட் கோடோவ்ஸ்கி' என்பவர் பிரபல ரஷ்ய பியானோ இசை வல்லுனராக விளங்கினார். அவர் சிறிய வயதில் பூகோள சாஸ்திரத்தில் பூஜ்ய ஞானமுடையவராக இருந்தார். அதனால் அவர் ராணுவப் பரீட்சைகளில் தோற்றார். பிரபல இசை மேதையானவுடன் அவர் குறிப்பிட்டார்: 'ம், மிஸிஸிபி நதி மட்டும் ரஷ்யாவில் ஓடிக்கொண்டிருந்தால் இந்நேரம் நான் ரஷ்யாவிலேயே பெரிய ராணுவ அதிகாரியாக இருந்திருப்பேன்!'

– கேவியெம்



□ □ □ □ □ □

## ஆராய்ச்சி பிறந்தது !

மொகஞ்சதாரோ, ஹரப்பா புதைபொருள் ஆராய்ச்சிபற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். இந்தப் புதைபொருள் ஆராய்ச்சி முதன்முதலில் எப்படி நிகழ்ந்தது?

இருநூறு ஆண்டுகளுக்கு முன்னே ஓர் இத்தாலி இளவரசன், தோட்டத்தில் நீருக்காகக் கிணறு ஒன்றைத் தோண்டினான். அதன்பயனாய்த் தற்செயலாக நிலத்தின் ஆழத்திலிருந்த நகரம் வெளிப்பட்டது.



உலகிலே புதைபொருள் ஆராய்ச்சியைத் தூண்டிய முதல் நிகழ்ச்சி இதுவேயாகும்.

தகவல்: பி. வி. கிரி.

ஆதாரம்: 'சரித்திரம் பேசுகிறது'.

- க. அப்பாதுரை

---

குடியானவன் இறை வழிபாட்டில் ஈடுபட்டிருந்தான். ''தேவ, ஆண்டவனே! நீ என்னிடம் வந்தால், நான் உனக்கு வேண்டிய பணிவிடை செய்வேன். அறுசுவை உண்டிகள் அளிப்பேன். என் கையால் உனக்குப் படுக்கை விரித்து உறங்கச் செய்வேன். உன்னை நறுமண நீரில் குளிப்பாட்டுவேன். தலை சீவி முடிப்பேன்; மலர் சூட்டுவேன்....''

வழியோடு போய்க் கொண்டிருந்த ஹஜ்ரத் மூஸா இதைச் செவிமடுத்தார். நின்று குடியானவனை நோக்கிக் கேட்டார்! ''நீ யாரோடு உரையாடிக் கொண்டிருக்கிறாய்?''

''ஆண்டவனோடு. அவருக்கு நான் பணிபுரிய விரும்புகிறேன்!'' என்றான் குடியானவன்.

''அட முட்டாளே! என்ன பாவம் செய்யத் துணிந்தாய் நீ! ஆண்டவன் என்ன, நம்மைப் போலவா! அவனுக்குப் பசி எடுக்குமா? உறக்கம் வருமா? அவனுக்கு மனிதனின் பணிவிடை தேவையில்லை. இதுபோன்ற மடத்தனம் இனிச் செய்யாதே!'' என்றார் ஹஜ்ரத் மூஸா.

அவருடைய அறிவுரையைக் கேட்டுக் குடியானவன் கைகூப்பித் தன் தவற்றுக்கு மன்னிப்புக் கேட்டான்.



ஆனால் அன்று மாலை மூஸா இறை வணக்கம் செய்தபொழுது அசரீரி ஒலித்தது: ''மூஸா உன்னை நான் உலகத்துக்கு அனுப்பியது எதற்காக? மனிதர்களின் மனத்தை என்பால் ஈடுபடுத்துவதற்காகவா? அல்லது என் நினைவிலிருந்து அகற்றுவதற்காகவா? குடியானவனின் மனம் என்னிடம் ஈடுபட்டிருந்தது. அதனை அகற்றி நீதான் பெரும் பாவம் செய்து விட்டாய்! தூய உள்ளத்தின் எதிரொலியே உண்மையான வழிபாடு.''

பெரிய நிலைக்கண்ணாடியின் முன் நின்று தன்னை ஒரு முறை பார்த்துக் கொண்டாள் ரமா. தாயின் புடவை, புதிதாய் வாங்கியது, நாற்காலி முதுகில் மடித்துக் கிடந்தது. அதை எடுத்து மார்பளவு உயரத்தில் பிடித்து அழகு பார்த்துக் கொண்டாள். தான் அதை உடுத்துக் கொண்டு விட்டதே போன்ற ஒரு களிப்பில் மனம் மயங்கிற்று.

வீட்டில் யாரும் இல்லை. அம்மாவும் அப்பாவும் வெளியே போய் விட்டார்கள். சமீபத்தில் நடந்த கல்யாணம் ஒன்றை அடுத்து நடக்கும் வேறு ஒன்று. அவளை வீட்டிலேயே விட்டுவிட்டுப் போய் விட்டார்கள். ''நீ வரவேண்டாம்'' என்று சொல்லிக் கொண்ட அம்மாவின் பார்வையிலும், அப்பாவின் சிரிப்பிலும் கண் விஷமமும், இரகசிய அர்த்தமும் தத்தித் தித்தித்தன.

அவள் போகவில்லை. வீட்டில் தனியாக அப்படி இருப்பதும் ஓர் ஆறுதலாகத்தான் இருந்தது.



# அம்மா ஒரு குழந்தை

## எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

ஏதோ ஓர் அடைப்பிலிருந்து விடுதலையானாற்போல. அந்தச் சொற்ப நேரத்துக்கு, பொறுப்பு நிறைந்தவளாக, பெரியவளாக வளர்ந்து விட்டதைப் போன்ற மனத் திருப்தி. சமையலறையில் பொங்கும் பாலைக் கவனித்து இறக்கி வைக்க வேண்டும். அப்பாவுக்கு 'போன்' வந்தால் செய்தியைக் குறித்து வைக்கவேண்டும். தேடிக் கொண்டு யாராவது வந்தால், தகுந்த பதில் சொல்லி அனுப்ப வேண்டும்....

தாமரைப் பூவாய் விரிந்த அலங்கார விளக்கடியில் வாசலை அங்கிருந்தே பார்க்க முடிவதைப் போல் நின்று கொண்டாள். வாசற்புறம் மூங்கில் கமான்மீது படர்ந்த பச்சையை மறைக்கும் சிவப்புப் பூக்கள் முதல் — கொல்லையில் யானைக் காதுகள் போல் ஆடும் வாழை இலைவரை — வீடு முழுவதும் நெடுந்தூர ரயில் வண்டியின் உட்புறம் போலத் தொடர்ந்து தெரிந்தது.

பாலை இறக்கி வலைத்தட்டைப் போட்டு மூடிவிட்டு, ஹாலுக்கு வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். கண்ணுக்கு நேரே, தலைக்கு மேலே, சற்றுப் பெரிதாக்கிய அவளுடைய பெற்றோர்களின் கலியாணப் புகைப் படம் தெரிந்தது. அம்மா அவளைப் போலவேதான் இருந்தாள். இன்னும் இளமை மாறாத முகம்தான் அவள் தாயாருக்கு. ஒன்றாகப் பார்க்கிறவர்கள் அவர்களைச் சகோதரிகள் என்றே நினைக்கத் தோன்றுவதைப் போல.

ஒரு தாயின் பரிவு, ஒரு சகோதரியின் கண்டிப்பு, இரண்டும் கூடி நின்றது போலத்தான் இருக்கும் அம்மா பழகும் விதமும். அவளைச் சிறிது நேரம் தனியே இருக்க விட்டு அவள் உணர்ந்ததில்லை. அவள் படிக்கும் நேரங்களில் கூடவே வந்து நின்று கவனிப்பாள். நூலில் பிரிந்து வரும் சொற்களைக் கூட, அவள் கேட்காமலேயே திருத்திச் சொல்லிக் கொடுக்கும் எதிர்க் குரல் கேட்கும்.

அவள் உடைகள் ஒவ்வொன்றும் தாயார் கவனித்து எடுத்து வைப்பதுதான். உடுக்கும் போதுகூட, அறையின் கதவை மூடிக் கொண்டு, கூட வந்து நின்று, ஒவ்வொன்றாக



விரல் ஒட்டத்தில் அளவிட்டு அமைந்து விட்டுத்தான் வெளியே போவாள். எங்கே யாவது அப்படியே வெளியே போகக் கிளம்பி விட்டால் கூடவே, காதோரத்தில் நினைவுச் சொடுக்காய், தாயாரின் குரல், மூச்சிலும் தாழ்ந்த அளவில், காதில் ஒலித்துக்கொண்டே

யிருக்கும். அவள் உடையை, நடையை, பாவனைகளை, ஒவ்வொன்றையும் கவனித்துக் கொண்டே நிழல் போலத் தொடருவாள் அம்மாவும்.

விளையாட்டிலும், பொழுதுபோக்கிலும் கூட, தனக்கென்று ஏதா எதையும் வகுத்துக் கொள்ள நேர்ந்ததில்லை. படித்தும் பொழுது போக்க எந்தப் பத்திரிகையை, நாவலை அவள் படிக்கலாம்? எந்த நேரத்தில் தம்பூராவை வைத்துக் கொண்டு பாடியாக வேண்டும்? எப்போது முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு, வாசலில் சிறிது நேரம் உட்கார்ந்திருக்கலாம்? எல்லாமே தாயார் வகுத்துக்

கொடுப்பதுதான். இனி மாறாத தண்டவாளம் போல் அதிலேதான் போய்க்கொண்டிருக்க வேண்டும் அவள்.

அவள் எங்கு சென்றாலும், என்ன செய்தாலும், தாயாரின் பார்வை அவளையே பின் தொடரும்; உயரப் போகும் காற்றாடியின்

நூல் தரை வரை தொட்டுக் கொண்டே நிற்பதைப் போல. அது அவளையே அறியாது படிந்து விட்ட ஒரு பழக்கமாகவும் போய் விட்டது. ஒரு சமயம் அறையின் மூலையில் குனிந்து எதையோ தேடிக் கொண்டிருந்தவள் சட்டென்று நிமிர்ந்தாள். எதிரே கண்ணாடியில் பின்புறம் நிற்கும் தாயாரின் உருவம் தெரிந்தது. முகம் திரும்பி நேர் பார்வையாக அம்மாவைப் பார்க்கும் நேரம், கன்னங்களில் சிவப்புத் திட்டாய்ப் பூத்து விட்டது. மனம் அதன் விளிம்பில் தத்தளித்தது.

''அம்மா, என்னையே அப்படிக் கவனிக்காதே.''

''அப்படி ஒன்றும் இல்லையே ரமா?''

''இல்லே. எனக்கு இம்சையாக இருக்கிறது. நான் என்ன குழந்தையா? வளர்ந்த பெண் இல்லையா? கல்லூரியில் சேர்ந்து பி.யு.சி படிக்கிற வயது ஆகவில்லையா?''

''ஹூம்'' என்று உதட்டைப் பூவிதழ்களாக மடித்துக் கொண்டு, தாயார் அவளைச் சேர்த்து இழுத்து அணைத்துக் கொண்டாள். ஒரு மன நெகிழ்ச்சியில் அவளால் மேலே பேச முடியவில்லை.

''நீ எத்தனை பெரியவளாக வளர்ந்தாலும் குழந்தைதான். கிராமத்திலிருந்து அப்பாவின் தாயார் வருகிறாரே, நீ கவனித்ததில்லையா?''

உண்மைதான். இத்தனை வயதாகியும் பாட்டிக்கு அப்பா வெறும் அம்பிதான். தோளுக்குக் கீழ் கைகள் பரிவாய்த் தடவ, தாயாரின் அருகே அவள் தந்தை குழந்தையாய்த்தான் உட்கார்ந்து கொண்டிருப்பார்.

சிறு குழந்தையைப் போல் உதடுகள் கோபத்தில் பிதுங்க, தன்னிரக்கம் தெரியும் பார்வையோடு அம்மாவின் பிடியிலிருந்து தன் கைகளை மெதுவாய் விடுவித்துக் கொண்டு நழுவிவிட்டாள் ரமா.

**ம**ணி எட்டு அடித்தது.

அவர்கள் திரும்பி வருகிற நேரம்தான். அம்மா வந்துதான் அவளுக்குச் சாப்பாடு போட வேண்டும். அவளாக எதையும் எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிட்டு விடக் கூடாது. அப்புறம் அடுத்த வேளைச் சாப்பாடு வரையில் அம்மாவுக்கு அங்கலாய்ப்பாகத்தான் இருக்கும்.

வாய் திறவாத மௌனத்தில், மனம் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தது. அவளால் சில சமயம் இப்படித்தான் தன்னை அடக்கிக் கொள்ள முடியாமல் போகும். பின்னால் கைகளைக் கட்டிக் கொண்டு அறையில் முன்னும் பின்னுமாய் உலாவத் தொடங்குவாள்.

அவளுடன் படிப்பவர்கள், பழகுபவர்கள், எத்தனை பெண்கள் தன் இச்சைப்படி சுதந்திரமாக இல்லை? ஹாஸ்டலில் இருக்கும் அவளுடைய தோழிகள் எவ்வளவு பேர்கள் தங்கள் மனம் போனபடி நிம்மதியாக இருக்கவில்லை? படிக்கும் நேரம், உடைகள் உடுக்கும் விதம், தூங்கும் சமயம், பொழுது போக்கும் செயல் எல்லாவற்றிலும் தம் இஷ்டப்படி? ஒவ்வொன்றிலும் இலேசான மனமும், காற்றைப் போன்ற சுதந்திரமும். தெரிய?

கண்ணில் அந்த ஏக்கம் தெரிய அப்படியே நின்று விடுவாள். மனம் நிலைப்படாமல் ஓர் அலைப்பு. மேட்டில் மோதித் திரும்பும் நீரைப் போல, எதிர்த்தும் ஒன்றோடு ஒன்றாய்க் கலந்தும் வந்து நினைவில் சுற்றிக் கொள்ளும் தாபம் கலந்த ஞாபகங்கள்.

அவளுக்குள் அந்த ஏக்கம் பசியாய்க் கிளர்ந்து நிற்கும். பழைய காலத்து நகைகளை அவள் தாயார் அவளுக்குப் பூட்டி அழகு பார்ப்பதுண்டு. அதைப் போல் தன் விருப்பங்களையும், ஆசைகளையும் கூட அவள் கழுத்தில் கனக்க மாட்டிப் பார்க்கும் ஆவல்தானா அம்மாவுக்கு? அவளை அப்படித் தனியாய் விடும் அளவுக்கு அவசியம் கூடத் தெரியாமல் இருக்குமா அவளுக்கு? கரை மீறும் ஓர் ஆசையா? தன்னைப் பெண் மீறச் சகியாத ஓர் உணர்வா? பழைமையும் புதுமையும், தன் அந்தரங்க நினைவுகளும் தான் அறியாத கடந்த காலச் சம்பவங்களும் கலந்து திரண்டு நிற்பது போலத்தான் தோன்றும் ரமாவுக்கு — ஒவ்வொரு சமயம் தாயாரின் தவிப்பையும் பொங்கிச் சூழும் பரிவையும் பார்க்கும்போது.

தனக்கும் மணமாகி இன்னொரு வீட்டுக்குப் போய்விட்டால் தாயார் என்ன செய்வாள்? தனக்கென்று அப்போது ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொள்ள அப்போது அவள் துணை வர முடியுமா? என்றென்றும்கூட வரும் நிழலாக இருக்க முடியுமா அவளால்?

வாசல் கேட்டில் காரின் கண் வெளிச்சம் மின்னிற்று. அவளுடைய பெற்றோர்கள் திரும்பியாயிற்று. மண்ணை அரைத்துக் கொண்டு, முகத்தை முன்னால் நீட்டியபடியே கார் வளைந்து உள்ளே திரும்பிற்று. ரமா எழுந்து வாசல் விளக்கைப் போட்டாள். உச்சி விளக்கு எரிந்தது.

உள்ளே வந்ததும் தாயார் தன் தோளைத் தொட்டு, ''உனக்காகத்தான் அவசரமாக வந்தேன். நீ சாப்பிட நேரமாயிற்று. ஒன்பது மணியானால் தூங்கி விடுவாயோ என்றும் கூடப் பயம் எனக்கு'' என்று சொன்னபோது அவளுக்குக் கொஞ்சம் கோபம் வந்தது.

புதுப்புடவையைக் களைந்து மாற்றிக்கொள்ளப் போன தாயாரிடம் கேட்டாள்: ''எங்கே போயிருந்தீர்கள் நீயும் அப்பாவும்?''

அம்மா தலையைக் குனிந்து கொண்டாள். முகம் சற்று மாறியது போலிருந்தது. நிமிர்ந்தபோது சர்க்கரை போடாத, நன்றாகக் காய்ச்சாத பால்போல், ஒரு புன்னகை தவழ்ந்தது.

''நீ குழந்தை: உனக்கு அதெல்லாம் தெரிய வேண்டாம்.'' சொன்ன வேகத்தில் விசுக்கென்று அறைக் கதவையும் சாத்திக் கொண்டு விட்டாள். ரமாவுக்குப் பதிலுக்கு என்னவோ சொல்ல வேண்டும் போல் இருந்தது. உள்ளம் கிளர்ந்து பொங்கிற்று. ஆனால் சீறி வந்து கரையைக் கண்டு அடங்கும் அலையைப் போல், மூடிய அந்தக் கதவைக் கண்டு அவள் உணர்ச்சிகள் பின்வாங்கி மறைந்தன.

பார்வையின் அந்தச் சுழிப்பும், நெஞ்சில் கிளர்ந்த சிரிப்பும் எதிரொலிகளாக அவளைத் துரத்தின. அவளுக்குத் தெரியாத உலகமாய் இன்னொன்றில் அவள் தாயார் நின்று கொண்டு, அவளை வெளியே நிறுத்திவிட்டுக் கதவை மூடிக் கொண்டு விட்டது போல் இருந்தது அந்தச் செய்கை; அந்தப் பேச்சின்

# இதோ வருகிறது மாடர்ன் குபு-குபு வண்டி—மகத்தான 5 வகை புதியரொட்டிகளுடன்!

**மசாலா ரொட்டி...**
வாய்க்கு விறுவிறுப்பு

**பழவகை ரொட்டி...**
சக்தியோடு சுவை

**இனிப்பு ரொட்டி...**
இன்பக் கனியமுது

**பழுப்பு ரொட்டி...**
நலம் தரும் இனிமை

**பால் ரொட்டி...**
போஷிக்கும் சத்துணவு



சலிப்புற்ற நாவிற்கு தினமும் ஒரு புதுமையை வழங்குகிறது "மாடர்ன்"! தேர்ந்தெடுக்க 5 சுவை வகைகள். உங்களுக்கு விருப்பமான வகையை எளிதில் தேர்ந்தெடுக்க வண்ண வண்ண மேலுறைகள். தமிழர்கள் என்றும் விரும்பும் மாடர்ன் வெண்ணை ரொட்டியும் உண்டு. புரதச்சத்து, வைட்டமின்கள், தாதுப்பொருள்கள் ஆகியவற்றுடன் இணையற்ற 'மாடர்ன்' முறையில் பக்குவமும் பெற்ற மகத்தான ரொட்டி. அதுவும் சீக்கிரமே புதிய பாக்கெட்டில் வரப் போகிறது. சிறந்ததுதானே? அதையே உங்கள் அன்புக் குடும்பத்தினருக்கு அளியுங்கள். அவர்களுடைய உணவில் தவறாது தினமும் இடம் பெறட்டும் மாடர்ன்.

**மாடர்ன்** மகத்தான ரொட்டி



மாடர்ன் பேகரீஸ் (இந்தியா) லிமிடெட்
டெல்லி . பம்பாய் . சென்னை . அகமதாபாத் . கொச்சி

ASP/M-1

முழுப் பொருளையும் புரிந்து சொன்னக்கூட முடியாத அளவுக்கு. இன்னும் மனப் பக்குவம் அடையாத குழந்தைதானா அவள்?

சாப்பாட்டின்போது அவள் மனம் அந்தக் கேள்வியிலேயே ஓடிக் கொண்டிருந்தது. இலையில் விழுந்ததையும், தாயார் கேட்டதையும் கூடச் சரியாகக் கவனிக்கவில்லை அவள்.

காலையில் சற்று நேரமாகியும் அம்மா எழுந்திருக்கவில்லை. அவளைத் தொட்டு எழுப்பியதும்கூட அப்பாதான்.

''அம்மாவுக்கு ஜுரம். இரவு சரியாகத் தூங்கவில்லை. நீ எழுந்திரு ரமா.''

அவளுக்குப் புரியவில்லை. இரவு நன்றாக இருந்தாளே அம்மா? அந்தப் புதுப் புடவையும் வாளிப்புமாக, அந்த அழகையும் பளீரென்ற நிறத்தையும் வைத்த கண் எடுக்காமல் பார்க்கத் தோன்றுவதைப் போல? அம்மா அடிக்கடி சொல்லுகிற மாதிரி, அதுவும் கண் பட்டுவிட்டதோ?

கண்ணில் ஜுரம் பளபளக்க, தலையணையை உயரமாக வைத்துக் கொண்டு படுத்திருந்தவளைப் பார்த்ததும் அவள் நெஞ்சு நெகிழ்ந்தது.

''ஜுரமா அம்மா?'' என்று கேட்டபடி அருகே வந்து உட்கார்ந்து கொண்டாள்.

''ஆமாம்மா. கிட்டே வராதே. உனக்கும் வந்துவிடும். உனக்குத் தாங்காது இதெல்லாம்.''

அந்த மன நெகிழ்ச்சியிலும், அந்த ஒதுக்கம் அவள் உள்ளத்தில் இலேசான நடுக்கமாய்ப் பரவி உதறிற்று.

''நான் பார்த்துக் கொள்வேன் அம்மா. நீ கவலைப்படாதே. நான் வீட்டைக் கவனித்துக் கொள்கிறேன். அப்பாவுக்கு நேரம் தவறாமல் சாப்பாடு போட்டு அனுப்பி, உனக்குக் கஞ்சி கொடுத்து... இன்றைக்கு நான் காலேஜுக்குப் போகவில்லை.''

விரல்களால் அவள் தலைக் கலேவைக் கோதிவிட்டு, உடல் சூட்டில் குரல் நடுங்க, அவள் சொன்னாள். ''அதிகம் அலட்டிக் கொள்ளாதே. நீ குழந்தை!''

அந்தத் தாயன்பும் பரிவும்கூட அவள் நெஞ்சில் எதையோ கிளறி விட்டதுபோலத்தான் இருந்தது அவளுக்கு. கண்ணைப் பார்க்க விடாமலே இமை மூடிக் காப்பாற்றிக்கொண்டிருந்தால், இப்படித்தான் இருக்கும். அற்ப வெளிச்சத்துக்கும் பார்வை கூசுவதைப் போல.

**ம**ணி பதினொன்று.

அப்பா சாப்பிட்டுவிட்டு வேலைக்குப் போய் விட்டார். அம்மா கஞ்சியை வேண்டா வெறுப்பாக இரண்டு வாய் விழுங்கிவிட்டு, புரண்டு படுத்துக் கொண்டு விட்டாள். வாசல் கம்பிக் கதவைத் தாளிட்டு விட்டு ரமா உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டாள். இறந்து விட்டது போல் எங்கும் ஹோவென்று ஒரு ஒளிவெள்ளம் முற்பகலின் செயலோய்ச் செய்யும் அமைதி. வீட்டில் இருப்பவர்கள் உள்ளே சுருங்கிக் கொண்டு விட்டார்கள்.

பொழுது போகாமல் ரேடியோவை மெதுவாகத் திருப்பி வைக்கப் போனாள் ரமா. ஒரு கணம் அவள் அந்த மேஜையைத் தொட்டபடி விரல் ஓடாமல் நின்றுபோனாள்.




சென்ற வாரம் நானும் என் நண்பர் ஒருவரும் கன்னியாகுமரிக்குப் புறப்பட்டுச் சென்றோம். வழியில் நாகர்கோவிலில் இறங்கி அங்குள்ள ஒரு பெரிய ஹோட்டலில் சாப்பிடப் போனோம். என் நண்பரின் இலையில் கறியும், என் இலையில் கூட்டும் தீர்ந்து விட்டன.

என் நண்பர் ஹோட்டல் சர்வரைப் பார்த்து, ''இந்தாப்பா.... கொஞ்சம் கூட்டும் கறியும் போடு'' என்றார்.

உடனே அவன் அருகில் இருந்த மற்றொரு சர்வரைப் பார்த்து, ''டேய்! இவங்களுக்குத் தூக்குப் போடு.... தூக்குப் போடு....'' என்று உரக்கக் கத்தினான்.

அதைக் கேட்டவுடனே எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. சிறிது நேரத்தில் அவன் கூட்டைப் பரிமாறினான். மறுபடி சர்வர் அருகில் வரும் பொழுது பார்த்து என் நண்பர், ''என்னப்பா.... நாங்க கறியும் கூட்டும் கொஞ்சம் போடு என்று சொன்னதுக்கு, 'தூக்குப் போடு, தூக்குப் போடு!'ன்னு கூட்டுப் போனியே, அப்படீன்னா என்ன?'' என்று விசாரித்தார்.

''ஸார்! தூக்கிலே இருக்கிற கறியைப் போடுன்னு சொல்றதுக்குச் சுருக்கமா 'தூக்குப் போடு' என்று சொன்னேன்!''

இதைக் கேட்டு வயிறு புடைக்கச் சிரித்துக் கொண்டு வெளியே வந்தோம். பிறகு விசாரித்ததில் ஹோட்டல்களில் பெரும்பாலும் இப்படித்தான் சொல்லுவார்கள் என்றும் தெரிய வந்தது.

இந்த வழக்கத்தை மாற்றிக் கொள்வது நல்லதல்லவா? —ஆர். கிருஷ்ணமூர்த்தி

---

அம்மாவின் அலமாரிச் சாவி அங்கே இருந்தது. அப்படி அதை அம்மா வைத்துவிட்டுப் போய் அவள் கண்டதில்லை. அந்த அலமாரி அம்மாவின் அந்தரங்கம் போல. அதை அவள் முன்னிலையில் திறந்து அவள் பார்த்ததில்லை. அதன் அடுக்கு அறைகளில் இருந்தது என்னவென்று அவளால் ஊகிக்கவும் கூட முடிந்ததில்லை.

விரல்கள் நடுங்க அந்தச் சாவியை எடுத்தாள். என்னதான் இருக்கும் அந்த அலமாரியில்? ஓர் ஆர்வம் உள்ளிருந்து பாயாகச் சுருண்டு மேலே எழுந்தது. திரும்பிப் பார்த்தாள். அம்மா இன்னும் தூங்கிக்கொண்டு தான் இருக்கிறாள். சாவியின் சில்லிப்பா? பயத்தில் அவள் விரலின் சில்லிப்பா? அலமாரியின் கதவைத் திறக்கும்போது, ஏதோ ஒரு கரங்கத்துக்குள் நுழையப் போவது போல் ஒரு திகில் ஏற்பட்டது.

அலமாரியைத் திறந்து அறைகளைப் படிப்படியாக வெளியே இழுத்தாள். எதிர் பாராதது ஒன்றும் இல்லை. ஆனாலும் அம்மாவின் உடம்பில் பார்த்துப் பழகியவற்றை, இங்கே மறுபடியும் பார்க்கும்போது அந்தரங்கமாக அவள் அறியாமல் கவனித்து



அவள்: அடடா! நேற்று இரவு நன்று இருந்தாங்களே அதுக்குள்ளே ஒன்றுக்கொன்று அடிச்சிக்க ஆரம்பித்து விட்டாரே!

அவர்: சும்மா அவசரப்பட்டு ஒரு முடிவுக்கும் வந்துவிடாதே. புதுசா வந்த 'டுவிஸ்ட்' டான்ஸ் ஆடுறாங்களோ என்னவோ!

---

விட்டதைப் போன்ற ஒரு கூச்சம் முதுகில் உதறிற்று. விரலால் நகர்த்திக்கொண்டே வந்தாள்.

ஒன்று... இரண்டு... மூன்று... கடைசி அறையை இழுத்தாள். அவள் பார்வை குத்திட்டு நின்றது.

அவை அம்மாவின் பொருட்களா? அந்த வயதில் பயன்படக் கூடியவைகளா அவை? அழகான சிறு பெட்டிகள், கிளிஞ்சல் வகைகள், சாயம் பூசிய கூழாங் கற்கள், குழந்தைப் பொம்மை; சிப்பதும் பட்டுத் துணியுமாகச் சிங்காரித்துக்கொண்டு உருட்டி விழித்த பார்வையோடு. நெருப்புப் பெட்டிப் படங்கள்.

அந்தக் காலத்து ஞாபகங்கள். அம்மா சிறு குழந்தையாக இருந்தபோது அவளுக்கு வீட்டுக்கு வந்த விருந்தாளிகள் உள்ளங் கையைப் பிரித்து அன்போடு வைத்து அழுத்திவிட்டுப் போனவைகளா? சிறு மரப் பொம்மைகள், மாக்கல் செப்புக்கள், பச்சை பச்சையாகிப் பித்தளையின் மஞ்சளும் கூட மறைந்துவிட்ட சிறு மோதிரம்.

கண்ணெதிரே அவைகளுக்கு நடுவே அமர்ந்து விளையாடிய தாயாரின் முகம் தெரிந்தது அவளுக்கு. அவைகள் எதையும் உடைக்காமல், கிழிக்காமல், எவ்வளவு அருமையாகப் போற்றி வைத்திருக்கிறாள் அம்மா! நினைவில் பத்திரமாகச் சேமித்து வைத்த சம்பவங்கள், அடையாளமாக நீங்காமல், மனத்தில் இடம் பெற்றுவிட்ட ஞாபகங்கள் இவற்றைப் போல? ஒவ்வொன்றும் அவளுக்கு ஒவ்வொரு நினைவை அடுக்கடுக்காய் மனத்தில் தூண்டி விட்டுக் கொண்டு இருந்திருக்குமோ அத்தனை ஆண்டுகளாக?

அம்மா இலேசாய், இருமும் சத்தம் கேட்டது. இழுத்த அறையை மூடிக் கதவைச் சாத்தினாள். பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு திரும்பினாள். மனக் கண் இன்னும் திறந்துதானிருந்தது. அலமாரியின் அடியறையில் பார்த்த அந்தக் காட்சி, குழந்தை சித்திரம் மாதிரி அதன் எளிய கவர்ச்சி, திரும்பத் திரும்பப் பார்க்க வேண்டும்போலத் தூண்டும் அதன் கபடில்லாத அழகு...

நெஞ்சு பூரித்து விம்மிற்று. தாயாரின் நெற்றியைத் துடைத்து விடும்போதும் விசிறியால் இலேசாக வீசும்போதும் உதட்டில் கண்ணாடிக் குப்பியை ஒட்ட வைத்து மருந்து கொடுக்கும்போதும் நினைவு சுழன்று மீண்டும் மீண்டும் அந்த நினைவையே தொட்டுக்கொண்டிருந்தது. முப்பது வருஷங்களுக்கு அப்பால் நின்று, மனசு ஒட்டியும் ஒட்டாமலும் அவள் பார்த்தவைகளையும் கற்பனை ஓட்டத்திலுமே வைத்துப் போனாள்.

இரவு நேரம். ஒன்பது மணி இருக்கும். லொட லொட என்று தெருவில் சைக்கிள் ரிக்ஷா போகும் சத்தம். தெரு நாய் ஒன்று குரைத்தது. கொல்லை முற்றத்தில் குழாய் நீர் 'க்ளக் க்ளக்' என்று தொட்டிக்குள் கொட்டிக் கொண்டிருந்தது.

''நீ இன்னும் தூங்கப் போகவில்லை?'' என்று அவளுக்கு எதிரே வந்து உட்கார்ந்து கொண்டார் அவள் தந்தை.

''ஊஹூம்'' என்று தலையை அசைத்துக் கொண்டாள். இன்னும் இந்த மௌனம் கலையவில்லை. கண்களில் யோசனைகளின் தேக்கம்.

''என்ன யோசனை செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று எதிரே உட்கார்ந்தார் அப்பா. ஏதோ சொல்ல வேண்டும் போல் இருந்தது. சொல்லவும் முடியவில்லை. சோபாவின் வட்ட மெத்தையை மடிமேல் வைத்துக் கொண்டு அதன் மேல் முகம் கவிழ்ந்து கொண்டாள்.

''என்னிடம் சொல்லக் கூடாதா? அம்மாவைப் பற்றியா?''

''ஆமாம்'' என்று சொல்லும்போதே உதடு நடுங்கியது. அப்பா அருகே உட்கார்ந்து கூந்தலை ஒற்றிக் கொடுத்துக் கேட்கக் கேட்க, பார்த்தவை, நினைத்தவை எல்லாவற்றையும் சொல்ல வந்துவிட்டது. விடியற்காலைக் குளிரை வென்று குளிக்கத் துணிந்துவிட்டதைப் போல.

''உனக்கு அம்மா எப்படி வளர்ந்தாள் என்று தெரியுமா?'' என்று கேட்டார் அவர். முகக் கலக்கத்தில் நெஞ்சின் குத்தல் தெரிந்தது. அந்தப் பெருமூச்சின் கோடு விழுந்த இடத்தில் கீறல் புலப்படுவதுபோல.

''ஊஹூம்''. தன் நகங்களைக் கோப்பை போல வைத்துக் கொண்டு சிந்தித்துக்கொண்டிருந்தாள் ரமா. விழி மேல் தாழ்ந்த இமைகள். அமைதியில் அசைவு ஒடுங்கிய பார்வை. ''அம்மா பாட்டியோடு இருந்தது தான் தெரியும்.''

''ஆமாம். உன் தாத்தாவுக்கு அவளை வைத்து வளர்க்கப் பொறுமை இல்லை. தன் தாயாரிடம் கொண்டு போய் விட்டு விட்டார். அம்மா சிறு வயதிலேயே முகம் தெரியுமுன்பே போய்விட்டாள். அப்பாவும் கூட இல்லை. வயதான, கண் சரியாகத் தெரியாத பாட்டிதான் எல்லாம். தனக்குத் தானே துணையாக வளர்ந்தாள் உன் அம்மா. இருட்டறையில் நடந்து பழகுவதைப் போல வளர்ச்சியின் ஒவ்வொரு பருவத்திலும், ஒவ்வொரு படியும் ஒரு புது விழிப்பாய்,

# அமிர்தாஞ்சனம்



இதமாகவும்
துரிதமாகவும்
சுளுக்கை
அகற்றி
நிம்மதியளிக்கிறது



- அமிர்தாஞ்சனம் எந்த விதத்திலும் தீங்கு செய்யாது. வலியுள்ள இடத்தில் சிறிதளவே தடவினால் போதும்.
- அமிர்தாஞ்சனம் வலியைத் துரிதமாகப் போக்குகிறது. ஏனெனில் இதில் சக்தி வாய்ந்த பத்து மருந்துகள் உள்ளன.
- அமிர்தாஞ்சனம் தடவிக் கொண்டால் இதமான நிம்மதியளிக்கிறது. ஏனெனில் இதில் மெந்தால், கற்பூரம் ஆகியவை கலந்துள்ளன.
- அமிர்தாஞ்சனம் சிக்கனமானது. ஏனெனில் ஒரு பாட்டில் மருந்தை வெகுநாட்களுக்கு உபயோகிக்கலாம்.

75
வருடங்களுக்கும்
மேலாக
புகழ்வாய்ந்தது.

அமிர்தாஞ்சனம் லிமிடெட்

மதராஸ் . பம்பாய் . கல்கத்தா
புது டில்லி . ஹைதராபாத்




AMR - 15 Tam

தன் வளர்ச்சிகளைத் தானே வளர்த்துக் கொண்டாள். அவளுடைய பழக்க வழக்கங்கள், சுபாவம், கட்டுப்பாடு, எல்லாம் அவள் தானே அமைத்துக் கொண்டதுதான். சில குழந்தைகள் தனக்குத் தானே விளையாடிக் கொள்ளுமே அந்த மாதிரி.''

ரமா நிமிர்ந்து பார்த்தாள். பருவப் பெண்ணாய் அவரை மணந்து கொண்ட தாயாரின் உருவம் கற்பனையில் தெரிந்தது. இருட்டிலிருந்து வெளிச்சத்துக்குக் கையில் துணை விளக்கும்கூட இன்றி, நடக்கப் பழகிய பாதங்கள். தனக்குத் தானே வழி காட்டியாக அமைத்துக் கொண்ட வாழ்வில் அவளுக்குக் கிடைக்காதது எது? நன்றுடனே மீண்டும் வாழ்ந்து கொண்டிருக்கிறாளா அவள்?

''சில சமயம் நீ நினைக்கலாம்; உன் அம்மா உன்னை ஏன் அப்படி அளவுக்கு மீறித் தொட்டுத் தொட்டுத் தாலாட்டுகிறாள் என்று? உன்னை உன் போக்கில் வளரவும் பழகவும் விடவில்லை என்று நீ பொறுமை இழந்தாலும் கூட ஆச்சரியமில்லை. 'உன்னைப் போன்ற மற்ற பெண்களை அவர்களுடைய தாய்மார்கள் இப்படியா அளவுக்கு மீறி அரவணைத்துக் கொண்டு போகிறார்கள்?' என்று நீ உன்னையே கேட்டுக் கொண்டிருக்கலாம். இல்லையா?''

''ம்.''

''உன் அம்மா வாழ்க்கையில் தனக்குக் கிடைக்காததைத்தான் உனக்கு ஒவ்வொரு கணமும் கொடுத்துக் கொண்டிருக்கிறாள். அந்த அளவு மீறிய பரிவுதான் உன்னைத் திக்குமுக்காட வைத்துக் கொண்டிருக்கிறது. அவளுடைய குழந்தைப் பருவ வாழ்க்கை இளமைப் பெண் பருவம், தனிமையின் ஆழத்தில் அமிழ்ந்திப் போனவை. அப்போது நிகழ்ந்து அனுபவித்தவை. அவளுடைய சிறு விளையாட்டுப் பொருள்கள், பரிசுகள் எல்லாம் அவள் உணர்வின் சதையும் தசையுமாக ஒன்றிப் போனவை. உள்ளுணர்வில் ஊறிக் குளிர்ந்து ஞாபகங்களாய் நிலைத்து விட்டவை. அவைகளை இன்றும் அவள் போற்றிக் கொண்டிருக்கிறாள். அந்தத் தனிமையும் தவிப்பும் இன்றும் நெஞ்சில் ஆறாத வடுவாக இருக்கின்றன அவளுக்கு. நீ அதைப் போன்ற ஓர் அனுபவத்துக்கு ஆளாகக் கூடாது என்ற ஓர் ஏக்கம்,—கரை மீறிய பரிவு. அதுதான் உன்னை இப்போது ஆட்டி வைக்கிறது. புரிகிறதா ரமா?''

ரமா கை விரல்களால் கண்களை மூடிக் கொண்டாள். தந்தையின் இலேசாக நடுங்கும் குரல், வேகம் படிப்படியாக ஓய்ந்து அமர்ந்தது. படுதாவாக நலுங்கும் உணர்ச்சிகளின் செறிவு சரசரத்து அடங்கியது. தாயைப் பற்றிய நினைவில், அதைப் புது விழிப்பில் உள்ளே தானே மலருவது போன்ற உணர்வு.

அந்த அழுக்குப் படாத பொம்மைகள்? அலங்காரம் மெருகு அழியாத சொப்புக்கள்? அவைகளை அடுக்கி வைத்துப் பாதுகாத்துத் தனக்குத் தானே அனுபவித்துக் கொண்ட குழந்தையின் பொறுமை? அந்தப் பண்புகளின் மென்மையை, நயத்தை, யார் கண்டு கொண்டார்கள்? வியந்து ஒரு கணம் கண் கொட்டாமல் நின்று முதுகில் தட்டிக் கொடுத்தார்கள்? இல்லாத தாயா? இருந்தும் ஒதுக்கிவிட்ட தந்தையா? கண் தெரியாத பாட்டியா? கிணற்றுச் சுவரின் இடுக்கில் சிரிக்கும் பூவாக அம்மா வளர்ந்த விதம்?

''ரமா, ரமா!''

அவளுடைய தாயார் முனகி அழைக்கும் குரல் கேட்டது. மேல் துகிலின் தலைப்பில் கண் இமைகளை ஒற்றிக் கொண்டு போனாள். அருகே உட்கார்ந்து கொண்டாள். கண்ணில் இலேசான கருமையுடன், ஜுரம் அடித்து விட்ட கவர்ச்சி அந்த முகத்தில் இலேசாக மினுமினுப்புக் கொண்டிருந்தது. ஆடிய விழிகளில் நினைவு தடுக்கிற்று ரமாவுக்கு. அந்தக் கண்களில் நெஞ்சு கமழ இதழ்களைப் பொத்தி நிற்கும் குழந்தை உருவம் ஒன்று தெரிந்தது.

''நீ சாப்பிட்டாயோ?'' பரிவான, கனிவை நிரம்பிய கரங்கள் கூந்தலைக் கோதின. ''உன் ஞாபகமேதான் எனக்கு.''

ரமா தாயைக் கழுத்தைச் சேர்த்து அணைத்துக்கொண்டாள். அணைத்த அணைப்பினின்றும் நிமிர்ந்த தாயாரின் முகத்தைக் கண்டதும் அவள் விழிகள் பெருகின. அம்மாவை அப்போதுதான் புதிதாய்க் காண்பதுபோல ஓர் உணர்ச்சி அவள் மனத்தில் மணம் வீசிற்று.

அட்டைப்பட விளக்கம் :

# அருவியிலும் இறைவன்

தீர்த்தம் கண்ட இடங்களில் எல்லாம் தெய்வத்தைக் கண்டவர்கள் நம்மவர்கள் வடக்கே காசியில் கங்கைக் கரையில் விசுவநாதனைக் கண்டவர்கள். தெற்கே கடற்கரையிலே ராமேசுவரத்திலும் ஈசனைக் கண்டார்கள். காசிக்கும் ராமேசுவரத்துக்கும் இடைப்பட்ட பிரதேசத்தில் எத்தனை எத்தனை ஆறுகள் உண்டோ அத்தனை ஆற்றங் கரைகளிலும் ஈசனைக் கண்டு கோயில் எடுப்பித்து வழிபட்டார்கள்.

இதோ ஜபல்பூர் அருகிலே நர்மதை துள்ளிக் குதித்து ஓடி வந்து பொர்கத் நீர் வீழ்ச்சியாக விழுவதைப் பாருங்கள். அந்த அருவியைக் காணும்போது நீரின் சக்தியை உணர்கிறோம். இந்தச் சக்தியை இயக்கும் பராசக்தியினிடமும் மனம் சென்று லயிக்கிறது.

சமீப காலத்து மனிதன் ஆகாயத்தில் சந்திர மண்டலத்துக்கு எழுபது மைல் தூரம் வரை சென்று, பதினொரு வட்டங்கள் சந்திரனைச் சுற்றிவிட்டுத் திரும்பியிருக்கிறான்! இது ஒரு அசகாய சாகசம்தான். ஆனால் விண்வெளியில் போனபிறகு, அங்கு கிடக்கும் கோடானு கோடி நட்சத்திரங்களையும், சூரிய மண்டலம் போன்று பல பல மண்டலங்கள் இயங்குவதையும், அளவிட முடியாத பரந்த வெளியையும் நினைக்க நினைக்க ''சாட்டையிலாப் பம்பரம்போல்'' ஆட்டிவைக்கும் அந்த இறைவனையே அல்லவா எண்ணி வணக்கம் செய்யத் தோன்றுகிறது!

—வண்ணப் புகைப்படம்: எஸ். ஆர். ராஜகோபால்



# நந்தினி

பி. கோதண்டராமன்

"மன்னிக்க வேண்டும். நீங்கள் மிஸ்டர் நாராயணன்தானே?"

"ஆமாம்; நான்தான் நாராயணன்."

"கே. எஸ். நாராயணன்தானே?"

"ஆமாம். உனக்கு யார் வேண்டும்?"

"உங்களைத்தான் வேண்டும்."

"நீ யார்?"

"நீங்கள் என்னைத் தெரிந்து கொள்ளவில்லையா?"

"முடியவில்லையே!"

"நன்முகச் செவிசாய்த்துக் கேளுங்கள். என் குரல் உங்களுக்குப் பழக்கமான குரல் அல்லவா?"

"பழக்கமான குரல் மாதிரிதான் இருக்கிறது. ஆனால் நீ யார் என்பது தான் என் நினைவில் இல்லை. அதுவும் இந்த நர்ஸ் உடையில் எனக்குத் தெரியவே இல்லை."

"என் பெயரைச் சொன்னால் உங்கள் நினைவுக்கு வருமா?"

"வரலாம்."

"நான்தான் நந்தினி."

"எந்த நந்தினி?"

"நீங்கள் சென்னையில் வைத்தியக் கல்லூரியில் மாணவராயிருந்தபோது நன்கு அறிந்திருந்த நந்தினி."

"சென்னையில் பல நந்தினிகளை அறிவேன். நந்தினி என்னும் ஒரு மலையாளப் பெண் என் கூடப் படித்துக் கொண்டிருந்தாள். மயிலாப்பூரில் குடியிருந்த என் மாமாவின் பெண் பெயரும் நந்தினியே."

''மௌண்ட்ரோடில் மாடர்ன் ஹோட்டலில் ஓர் அறையில் தங்கியிருந்தீர்களே, நினைவில் இருக்கிறதா ?''

''ஆகா. நினைவில் இருக்கிறது. நான் எம். டி. டிகிரிப் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த போது ஓராண்டு அங்கே தங்கியிருந்தேன்.''

''அப்போது, நந்தினி என்னும் பணிப் பெண் அந்த ஹோட்டலில் வேலை செய்து வந்தது உங்கள் நினைவில் இருக்கிறதா ?''

திடுமென்று நாராயணனின் மனத்திரையில் பல நினைவுகள் உருப்பெற்று இயங்கலாயின. நந்தினியின் உருவம் அப்படியே அவன் கண் முன்னால் நின்றது.

''இப்போது எனக்கு நன்றாக ஞாபகம் வருகின்றது. நான் சென்னையில் ஐந்து ஆண்டுகள் படித்துக் கொண்டிருந்த போது பல ஹோட்டல்களில் குடியிருந்திருக்கிறேன். பல பணிப் பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் அவர்கள் எவரிடமும் காணாத பல அரிய குணங்கள் உன்னிடம் கண்டிருக்கிறேன். உன் முகத்தில் எப்போதும் ஒரு வசீகர அழகும், சுப்பிரசன்னமும் திகழ்வன. உன் வேலையிலும் ஒரு வித மென்மையும் கலையழகும் காணப்பட்டன.''

''எனக்குக் கொஞ்சம் அழகுண்டு என்பதைப் பற்றிப் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனால் என் வேலையைப் பற்றி நீங்கள் என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தீர்கள் என்பதை நான் இதுவரையில் அறிந்ததில்லை.''

''அது உனக்கு எப்படித் தெரியும் ? நான் அதைப் பற்றி ஒருவரிடமும் சொல்லவில்லை. நீ என் துணிகளைத் துவைத்துப் போடுவதற்காகவும், என் அறையைச் சுத்தம் செய்வதற்காகவும் மாதா மாதம் ஹோட்டல் முதலாளியிடம் நான்கு ரூபாய் அதிகமாகச் செலுத்துவதுண்டு.''

''மேலும் நான் ஒரு பணிப் பெண். நீங்களோ மாதம் பதினைந்தாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கும் ஒரு பிரபல அட்வகேட்டின் மகன். உங்களுக்கும் எனக்கும் நெருங்க முடியாத தூரம்.''

''அப்படிச் சொல்லாதே. மனிதருக்கும் மனிதருக்கும் தூரம் என்ன வந்தது ? நான் சமூக சமத்துவ வாதி.''

''அதை நானும் அறிவேன். நீங்கள் எப்போதும் என்னுடன் மரியாதையாகவே நடந்து வந்திருக்கிறீர்கள். பணிப்பெண் தானே என்று ஒரு நாள்கூட அசட்டையாக இருந்தது கிடையாது. அது கிடக்கட்டும். நீங்கள் அப்போது அறிந்திராத ஒரு விஷயத்தை நான் இன்று உங்களிடம் சொல்லப் போகிறேன்.''

''என்ன அது?''

''என்னையும் அறியாமல் என் உள்ளம் உங்கள்மீது சென்றது. உங்களைத் தூய மனத்துடன் காதலித்தேன்.''

''உண்மையாகவா ?''

''இப்போது சற்றேறக் குறைய எட்டாண்டுகள் ஆகி விட்டன. ஆயினும் அன்றெழுந்த காதல் பல சோதனைகளைக் கடந்து இன்று என்னுடைய உள்ளத்தில் பசுமையாக இருக்கிறது.''

''நான் அப்போது உன் உள்ளத்தின் நிலையைப் பற்றிக் கிஞ்சித்தும் சந்தேகப்படவில்லை. நீயும் யாதொரு வழியாலும் வெளிப்படையாகக் காட்டவில்லை. நீ ஏன் அதைப் பற்றி என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை ?''

''அதெப்படிச் சொல்வது? அது பெரும் பிழையாயிற்றே. நான் நல்ல குலத்தில் நல்ல அந்தஸ்தில் பிறந்தவள்தான். ஆனால் விதி வசத்தால் பணிப் பெண்ணாக வேலை செய்து வயிறு கழுவ வேண்டியவள் ஆனேன். அந்தத் தாழ்ந்த நிலையிலிருந்த நான் உங்களிடம் காதல் மொழி கூற முடியுமா? அன்றியும், எந்தப் பெண்ணும் தன் காதலை வெளிப்படையாக உரைக்க மாட்டாள். ஆயினும், என் தோற்றத்திலிருந்தும் நடையிலிருந்தும் புத்திசாலியான நீங்கள் அதை ஒருவாறு ஊகித்திருக்கலாமே?''

''என்ன அதிசயம்? நான் ஒன்றையும் கவனிக்க வில்லையே !''

''ஊம். ஒரு பெண்ணின் இதயத்தை நீங்கள் எப்படி அறிவீர்கள்? எப்போதாகிலும், நீங்கள் என் முகத்தை ஏறெடுத்துப் பார்த்ததுண்டா? ஒவ்வொரு நாள் காலையிலும் உங்கள் அறையை நன்றாகக் கூட்டிவிட்டு, மேஜை, நாற்காலி, பீரோ முதலியவற்றின் மீதுள்ள தூசியை நன்றாகத் துடைத்து, இறைந்து கிடக்கும் புத்தகங்களை ஒழுங்காக அடுக்கி வைப்பேன். சுமார் அரை மணி நேரத்துக்கு மேல் அவ்வேலையைச் செய்வேன். அப்போது நீங்கள் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு 'ஹிந்து' பத்திரிகையைப் படிப்பதில் ஆழ்ந்திருப்பீர்கள். இல்லையேல், நகத்தைக் கடித்துக் கொண்டே உத்தரத்தைப் பார்ப்பீர்கள்.''

''உண்மைதான். உன்னை உற்றுப் பார்ப்பது நன்னடத்தையாகாது என்ற எண்ணமும் இருந்தது. ஆயினும், என் அறையில் வேலை செய்துகொண்டிருக்கும் போது நான் சில சமயம் திடுமென்று உள்ளே நுழைய நேர்கையில் நீ முகம் சிவந்து குழப்பமடைந்ததைப் பல தடவை பார்த்திருக்கிறேன். ஆனால் அது பலவீனத்தினால் இருக்கலாமென்று எண்ணி இருந்துவிடுவதுண்டு.''

''அது பலவீனத்தினாலன்று; வெட்கத்தினால்தான். நீங்கள் என்னை நன்றாகப் பார்க்காமல் இருந்ததே நல்லதாய்ப் போயிற்று.''

''ஏன் ?''

''ஏனெனில், நீங்கள் என் உள்ளத்து உணர்ச்சியைக் கண்டுபிடித்திருந்தால், உங்களைப் பார்க்கவோ, உங்களுக்குப் பணி செய்யவோ முடியாமல் போயிருக்கும்.''

''நீ எனக்கு என்ன அன்புப் பணி செய்து வந்தாய் ?''

''என்ன என்று கேட்கிறீர்கள் ? அந்தக் காலத்தில் உங்களுக்கு ஏதாவது தேவை ஏற்பட்டதா? உங்களுக்கு ஒரு சிறு அசௌகரியமேனும் ஏற்பட்டதா, சொல்லுங்கள்.''

''இல்லை.''

''நான் உங்களுடைய ஒவ்வொரு சிறு தேவையையும் கவனித்துப் பணி செய்ததே அதற்குக் காரணம். உங்கள் மீது உள்ளன்பு இருந்தாலன்றி அவ்விதம் ஊழியம் செய்திருக்கவே முடியாது.''

''நீ அவ்வளவு கவனமாகப் பார்த்துச் சுயேச்சையுடன் பணி செய்ததேன்?''

''ஏனென்றால், உங்கள் சௌகரியங்களைப் பார்த்துக் கொள்ள உங்களுக்குத் தெரியாது. நீங்கள் பரம சாது. 'இதைச் செய், அதைச் செய்' என்று ஒரு நாள்கூட எனக்கு உத்தரவிட்டது கிடையாது.''

''ஆமாம்; நீ யாவற்றையும் கவனித்துச் செய்து வந்ததால், எனக்கு ஒரு தேவையும் ஏற்படவில்லை. ஹோட்டல் முதலாளியே யாவற்றுக்கும் ஏற்பாடு செய்திருக்கிறார் என்று எண்ணி வந்தேன். நீயாகவே அன்பால் செய்து வந்தாய் என்று அறிந்திருந்தால், உனக்கு நன்றி கூறியிருப்பேன்.''

''நான் உங்கள் நன்றியை எதிர்பார்க்கவில்லை. நீங்கள் ஒரு தடவையேனும் என் மீது கோபித்துக் கொள்ளாதிருந்ததே எனக்குப் பெரிய வெகுமதியாகும்.''

''பணி செய்வோரிடம் கோபித்துக்கொள்வோரும் உண்டோ?''

''அதை ஏன் கேட்கிறீர்கள்? இந்த ஹோட்டலில் இறங்கி வசித்த கனவான்கள் பலரைப் பார்த்திருக்கிறேன். பணிப் பெண் என்றால் அவர்களுக்குத் துச்சம். பணிப் பெண்ணாயினும் அவளுக்கும் மானம், மரியாதை உண்டென்று அவர்கள் நினைத்ததே கிடையாது.''

''அவ்விதம் செய்வது அநியாயம்.''

''ஆனால், நீங்கள் ஒரே ஒரு சமயம் என்னைப் பற்றிக் குரோதமாகப் பேசியிருக்கிறீர்கள்.''

''உன்னைப் பற்றியா?''

''ஆமாம். என்னைப் பற்றி உங்கள் நண்பர் ஒருவரிடம்.''

''உன்னைப் பற்றி யாதொன்றும் சொன்னதாக என் நினைவில் இல்லையே!''

''அற்ப விஷயங்களெல்லாம் உங்கள் நினைவில் நிற்குமா? ஆனால், என் மனத்தில் அது சுருக்கென்று தைத்தது.''

''அப்படி என்ன சொன்னேன்?''

''ஒரு நாள் ஸ்பென்ஸர் ஷாப்பிலிருந்து கார்க்கு ஸ்குரு, திருகாணி, முடுக்கும் கருவி முதலியன அடங்கிய பேனாக் கத்தியொன்றை வாங்கி வந்தீர்கள். மறுநாள் அது காணமற் போய்விட்டது. ஒரு நாள் உங்கள் அறைக்கு வந்திருந்த நண்பர் ஒருவர் கார்க் ஸ்குரு கேட்டார். அப்போது கார்க்கு ஸ்குருவுடன் கூடிய பேனாக் கத்தியை நான்தான் திருடிப் போய் இருக்க வேண்டும் என்று ஆங்கில மொழியில் சொன்னீர்கள் 'அதன் விலை ஒரே ரூபாய். என்னைக் கேட்டிருந்தால் நானே கொடுத்திருப்பேன். இந்த அசட்டுப் பெண் அதைத் திருட வேண்டுமா? போகட்டும், மொத்தத்தில் நல்ல பெண். ஆகவே இவளை நான் கேட்கவில்லை' என்றீர்கள். எனக்கு ஆங்கிலம் கொஞ்சம் தெரியுமென்று அறிந்திருந்தால் அவ்விதம் ஒருகால் நானிருந்த போது சொல்லியிருக்க மாட்டீர்கள். ஆயினும் உங்கள் வார்த்தை என் இதயத்தில் ஈட்டியால் குத்தியது போலிருந்தது. அதை எடுத்துக் கொண்டு போனது அடுத்த அறையில் இருந்த சீதாராமன். அவர் அறையைப் பெருக்கச் சென்றிருந்தபோது அதை அவர் மேஜையின் மீது கண்டேன்.''

''ஊம். இந்த மாதிரி பழியொரு பக்கமும் பாவம் ஒரு பக்கமுமாக உலகில் பல காரியங்கள் நடக்கின்றன.''

''நான் மிகவும் வருந்தினேன். வறுமையின் இழிவை அன்று உணர்ந்தேன். நான் உங்கள் அறையிலிருந்து ஒரு துரும்புகூட எடுத்து அறியேன்.''

''போகட்டும். என்னை மன்னித்துவிடு, நந்தினி.''

''பின்பு நடந்த விஷயங்களையும் கூறுகிறேன்.''

''கூறு.''

''பரீட்சைக்குப் பிறகு நீங்கள் ஹோட்டலுக்குத் திரும்பி வரவில்லை. நானும் கொஞ்ச காலத்துக்கெல்லாம் வேலையிலிருந்து விலகிக் கொண்டேன்.''

''பின் எங்கே சென்றாய்?''

''பலவிடங்களில் வேலை பார்க்கலானேன். எங்கும் நீடித்திருக்கவில்லை.''

''ஏன்?''

''மாடர்ன் ஹோட்டல் முதலாளி அப்பண்ணா மிகவும் நல்லவர். அவருடைய பாதுகாப்பில் எனக்கு யாதொரு தீங்கும் ஏற்படவில்லை. மற்றவிடங்களில் என் இளமையும் அழகும் பேராபத்தாக இருந்தன. காமுகர்கள் என்னை மயக்கப் பார்த்தனர். அந்தக் கஷ்ட காலங்களில் ஒரு பொருள் என்னைக் காப்பாற்றியது.''

''என்ன அது?''

''ஒரு சமயம் எனக்கு நீங்கள் ஒரு ரூபாய் இனாம் அளித்தீர்கள். அதைப் பத்திரமாக வைத்திருந்தேன். அது உங்களின் நினைவுக்கு அறிகுறியாக இருந்தது. நான் பசியால் தெருக்களில் அலைய நேரிட்டபோதும் அதைப் பத்திரமாக வைத்திருந்தேன்.''

''பின்பு என்ன நடந்தது?''

''யுத்தம் வந்தது. நீங்கள் வைத்திய எமர்ஜன்ஸி கமிஷன் பெற்று மத்திய கிழக்குப் போர்முனைக்குச் சென்றதாக அறிந்தேன். போர் முனையில் என்ன ஆபத்து வருமோ எனச் சதாகாலமும் கவலையாயிருந்தேன். அப்போது இளம் பெண்களை நர்சுகளாகப் பயிற்றுவித்துப் போர்முனைக்கு அனுப்புவதாகப் பத்திரிகைகளில் படித்தேன். நீங்கள் காயம்பட நேரிட்டால் உங்களுக்குப் பணிவிடை செய்ய வாய்ப்புக் கிடைக்குமே என்று எண்ணினேன். பயிற்சியில் சேர்ந்து ஆறு மாதங்கள் பயிற்சி பெற்றேன். பின்பு இந்தியாவின் பல பாகங்களில் என்னை மாற்றினார்கள். நான் கல்கத்தா ராணுவ ஆஸ்பத்திரியில் வேலை பார்த்தபோது நீங்கள் மத்திய கிழக்குப் போரில் படுகாயமுற்று இந்தியாவுக்கு அனுப்பப்பட்டு பம்பாயில் ராணுவ ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருவதாக அறியலானேன். எப்படியாவது பம்பாயில் உங்களைப் பார்க்கவேண்டுமென்று என் உள்ளம் துடித்தது. கல்கத்தா எனக்கு ஒத்துக்கொள்ளவில்லையென்றும் பம்பாய்க்கு மாற்றுமாறும் என் தலைமை உத்தியோகஸ்தரைக் கேட்டுக் கொண்டேன். அவர் மிகவும் நல்லவர். எனக்கு மாற்றல் உத்தரவு கொடுத்தார். இன்னும் இரண்டு நாட்களில் பம்பாய்க்குப் பிரயாணமாக இருந்தேன்; அதற்குள்...''

''அதற்குள் என்ன? ஏன் நந்தினி கண்ணீர் விடுகிறாய்?''

''ஒன்றுமில்லை. விதியின் கொடுமையை நினைக்கவே, என்னையும் அறியாமல் கண்ணீர் வந்தது.''

''என்ன நடந்தது, சொல்.''

''நான் பம்பாய்க்குச் செல்லவிருந்த நாளுக்கு முதல் நாள் திடுமென்று பட்டப் பகலில் ஜப்பான் ஆகாய விமானங்கள் திரள் திரளாக வந்து குண்டுகள் போட்டன. நான் என் விடுதியிலிருந்து ஆஸ்பத்திரிக்குப் போய்க் கொண்டிருந்தபோது ஒரு குண்டு என் அருகே வெடித்துச் சிதறியது. பிரக்ஞையற்ற நான் உடனே ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் செல்லப்பட்டேன். டாக்டர்கள் ஆபரேஷன் செய்தார்கள். ஆபரேஷன் நடந்த ஒரு மணி நேரத்துக்கெல்லாம் என் ஆவி கூட்டை விட்டுச் சென்றது.''

''என்ன, நீ இறந்துவிட்டாயா? அப்படி யானால் நீ யார்? நந்தினியின் ஆவியா?''

''ஆமாம்!''

''அப்படியானால் என்னையும் அழைத்துச் செல், நந்தினி! நந்தினி!''

''நந்தினி! நந்தினி!'' என்று லெப்டினெண்ட் கர்னல் நாராயணன் தூக்கத்திலேயே கத்துவது நர்ஸ் லீலாவதியின் காதில் படவே, அவள் விரைந்து வந்தாள்.

''என்ன மிஸ்டர் நாராயணன்? என்ன வேண்டும்?? ஏன் கத்துகிறீர்கள்? கனவு கண்டீர்களா என்ன?''

நாராயணன் எதற்குமே பதிலொன்றும் சொல்லவில்லை. நந்தினியைப் பின் தொடர்ந்து அவன் ஓடியே விட்டான்!

# வட்ட மேஜை

## கைவண்ணம் கண்டேன்

வள்ளுவர் மலர் என்னை வெகுவாகக் கவர்ந்தது. உலகமே போற்றும் வள்ளுவருக்குச் சிறப்பு மலர் வெளியிட்டது கல்கி ஒன்றுதான். ஓவியர் வினுவின் கைவண்ணங்களுடன் குறள்களுக்கு விளக்கம் கூறியிருப்பது மிகவும் உயர்ந்தது.

வேதாரணியம்,
16–1–69 கே. ஸ்ரீநிவாஸன்

## விபரீதம் ஏன்?

''என். ஸி. ஸி.யின் 'ஸி' சான்றிதழ் இல்லாமையாலும் ஹிந்தியில் உள்ள 10 அல்லது 12 ஆணைச் சொற்கள் தெரியாததாலும் எல்லாத் தகுதிகளும் இருந்தும், தமிழகத்தைச் சேர்ந்த எட்டு சிறந்த மாணவர்கள் விமானப் படை அதிகாரிகளுக்கான பயிற்சிப் பள்ளியில் சேர முடியவில்லை.''

இம்மாதம் 8ந் தேதியன்று மத்திய துணை அமைச்சர் திரு எம். ஆர். கிருஷ்ண ஹைதராபாத்தில் நவின்றதாகும் இது.

''விளைவைக் கண்டிருக்கிறீர்கள் — மிக்க வேதனைக்குரியதே'' என முத்தாய்ப்பும் வைக்கிறார். அமைச்சர் கூறும் 'விளைவு' எதுவோ நாம் கணிக்க முடியவில்லை. ஆனால் தெளிவாய்ப் புரிகின்ற விஷயங்கள் இவை:

ஹிந்தி தெரியாவிட்டால் இந்திய ராணுவத்தில் வேலை கிடையாது.

மத்திய அரசின் கீழ் இயங்கும் வேலை வாய்ப்புக்களுக்கு 'மொழி' குறுக்கே நிற்காது என்ற உறுதிமொழி பொய். வெறும் ஏமாற்று.

'மொழிக்கு' மற்றவைகளைவிட முக்கியத்வம் கொடுத்துத் தகுதிகளை யெல்லாம் பின்னுக்குத் தள்ளி விடுகிறது மத்திய அரசு. தகுதி குறைந்தவர்களுக்கும் கூட 'ஹிந்தி மொழி யறிவு' இருக்குமானால் மத்திய அரசில் வேலை வாய்ப்பு அதிகம். எனவே மத்திய அரசில் உள்ளோருக்குத் 'தகுதி'யில் சற்றும் அக்கறை கிடையாது. தகுதி புறக்கணிக்கப்படுகிறது.

இன்றைய காங்கிரஸாரின் உறுதிமொழிகளுக்கும், உண்மை நிலைக்கும் எள்ளளவும் சம்பந்தம் கிடையாது என்பது தெரிந்தது தான். இருப்பினும் நேரு பெருமான் கூறியதற்காக ஒப்புக் கொண்டோம். பலன் — 'ஹிந்தி தெரியாதவர்கள் ஒதுக்கப்படும் இனம்' என்றாகிவிட்டது.

தேசிய ஒருமைப்பாட்டைப் பற்றி வானளாவப் பேசிக் கொண்டிருக்கையிலேயே ஏன் இந்த விபரீதம்?

''தேசாபிமானி''

## பொருட் செலவுக்கு வழியா?

பொங்கல் நாளன்று சேலம் — பெங்களூர் மீட்டர்கேஜ் இரயில் பாதை மொரார்ஜி தேசாயால் திறக்கப்பட்டது.

இதில் வியப்பென்னவென்றால், நாடு முழுவதும் மீட்டர் கேஜ் பாதைகளை பிராட் கேஜாக மாற்ற முனைந்திருக்கும் வேளையில் புதிதாகப் போட்ட சேலம் — பெங்களூர் பாதை மீட்டர் கேஜாக இருப்பதுதான். கரூர் — தனுஷ்கோடி பாதையை பிராட் கேஜாக மாற்றவும் ஒரு திட்டம் உள்ளது.

சேலத்தில் இதற்கு முன் மீட்டர்கேஜ் பாதையே கிடையாது. புதிதாக அங்கே மீட்டர்கேஜைப் புகுத்துகிறார்கள். பெங்களூரிலும் சேலத்திலும் பிராட்கேஜ் பாதைகள் உள்ளன. இணைப்புப் பாதையையும் பிராட் கேஜாகவே போட்டிருந்தால் என்ன?

இன்னும் சில ஆண்டுகளில் மறுபடியும் ஒரு திட்டம் வரும் — இப்பாதையை பிராட் கேஜாக மாற்ற வேண்டும் என்று. அதற்குப் பழையபடி ஏராளமான பொருட் செலவு செய்வார்கள்!

மேலைச்சிவபுரி
15–1–69 எஸ். பி. ஸ்ரீநிவாசு

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam



எந்தக் கூட்டத்தின் நடுவி-
லும் அவரைக் கண்டு கொள்-
ளலாம். தனித்து நிற்பவர்
அவர். எப்போதுமே. எந்த
விஷயத்திலும் அவருக்கென்று
ஒரு தனி விருப்பம். குழப்
பக்காரர் அல்ல. ஆனால் தனி
விருப்பமுண்டு. அவரது
தோற்றம் மிடுக்காக இருக்க
வேண்டும். உடைகள்
மபத்லால் க்ரூப் துணிகளா-
கவே இருக்க வேண்டும்.
ஆம், மபத்லால் க்ரூப்
மட்டுமே.

**மபத்லால் க்ரூப்**

**ஸூட்டிங்குகள்**

'டெரீன்'/காட்டன்
'டெரீன்'/அக்ரிலிக்
'டெரீன்'/விஸ்கோஸ்

# அடக்கமான அழகு




நியூ ஷோராக் (ஷோராக்), அகமதாபாத். நியூ ஷோராக், நதியாத். ஸ்டாண்டர்டு, பம்பாய். ஸ்டாண்டர்டு (நியூ சைனா), பம்பாய். ஸ்டாண்டர்டு (தேவாஸ்). ஸஸூன், பம்பாய். ஸஸூன் (நியூ யூனியன்) பம்பாய். ஸூரத் காட்டன், ஸூரத். மஃபத்லால் ஃபைன், நவ்சாரி. மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அகமதாபாத்

REGISTERED No. M. 4366

Registered as a Newspaper in Ceylon

# ஸிம்ஸன் கம்பெனியின்

## பெர்கின்ஸ் P6V டீசல் ரீபில்ட் என்ஜின் திட்டம்



ஸிம்ஸன் பாக்டரியிலேயே உருவான ரீபில்ட் என்ஜின் பழைய என்ஜினுக்கு பதிலாக கொடுக்கப்படும். இந்த திட்டத்தின் கீழ் பெர்கின்ஸ் என்ஜின்களை உபயோகிப்பவர்கள் அனைவரும் அவர்களுடைய பழைய என்ஜின்களை எத்தனை தடவை வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்

### மேற்படி ரீபில்ட் திட்டத்தின் அனுகூலங்கள் பின் வருமாறு:

1. ரீபில்ட் என்ஜின்களுக்கு புது என்ஜினுக்குள்ள எல்லாவிதமான உத்தரவாதமும் உண்டு.
2. ரீபில்ட் என்ஜினை குறைவான விலையில் பெறவும் உதவுகிறது.
3 எபபொழுது வேண்டுமானாலும் விரும்பிய சமயத்தில் கால தாமதமிலலாமல் பழைய என்ஜினை மாறறிக் கொளளலாம்.
4. இந்த திடடத்தின் பிரத்தியேக அனுகூலம் என்ன வென்றால் பொகின்ஸ் என்ஜின்களை உபயோகிப்பவர்களுககு அவர்களுடைய என்ஜின்களை அகறறி ஸ்பேர் பாகங்களுக்காகவோ ரிப்பேருக்காகவோ காத்திருக்கும் கால நஷ்டமில்லாமல் உடனேயே ரீபில்ட் செய்த என்ஜினை பொருத்திக் கொளள வசதி கிடைக்கிறது.
5. ரீபில்ட் ஏன்ஜின் புது என்ஜினைப்போல் பரிசீலனை செய்யப்பட்டு பூர்ணமான திருப்தி அடைந்த பிறகே வழங்கபபடுகிறது.




பெர்கின்ஸ் ரீபில்ட் என்ஜின் திட்டத்தைப் பற்றிய முழு விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு தயவுசெய்து எழுதவும்

**ஸிம்ஸன் அண்டு கம்பெனி லிமிடெட்**
(பிளாண்ட் 11)

தபால் பெட்டி No. 856, செம்பியம், சென்னை 11
கிளைகள் பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, சிகந்தராபாத்.

5-351